ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வார்

திருவாய் மலர்ந்தருளிய

# திருவாய்மொழி

4-6.

## நான்காம்பத்து.

இதற்கு

* தெள்ளாரும் ஞானத்திருக்குருகைப்பிரான் பிள்ளான்
அருளிச்செய்த ஆறாயிரப்படியும்,

* அன்போடழகிய மணவாளச்சீயரருளிச் செய்த
பன்னீராயிரப்படி உரையும்

* தெள்ளியதா நம்பிள்ளை செப்புநெறி தன்னை
வள்ளல் வடக்குத்திருவீதிப் பிள்ளை அருளிச்செய்த
ஈடு ப்ரதி திருவாய்மொழியின்
ப்ரவேசங்களும்
ப்ரதி பாசுரங்களின் அவதாரிகைகளும்

---

ஸபாபண்டிதரான

**ஸ்ரீமான், புதுப்பட்டு-திருவேங்கடாசார்யரால்**

பரிசோதிக்கப்பட்டு

---

ஸ்ரீ வைஷ்ணவ கிரந்த முத்ராபக ஸபையாரால்

சென்னை.

ஸ்ரீநிகேதன முத்ராக்ஷர சாலையில்

அச்சிட்டு ப்ரசுரம் செய்யப்பட்டது.

அக்ஷய ௵

1926

ஐச்வர்யம் அல்பாஸ்திரத்வாதி தோஷத்தை யுடைத்தாகையாலே தண்ணிது; ஆத்மலாபம் அபுருஷார்த்தமாய்க்கொண்டு நிலைநிற்குமாகையாலே தண்ணிது; இப்படி ஐச்வர்ய கைவல்யங்களுக்கு உண்டான தண்மையைச் சொல்லி, 'ஸர்வேச்வரனாகிறான் ஸமஸ்தகல்யாண குணாத்மகனாய் ஸர்வாபேக்ஷிதப்ரதனாயிருப்பானொருவன்; ஆனபின்பு அவற்றைவிட்டு பகவத்பஜநம்பண்ணப் பாருங்கோள்' என்று இங்ஙனே பகவத்ஸமாச்ரயணத்துக்கு உண்டான நன்மையை உபபாதியா நின்றுகொண்டு, பரோபதேசப்ரவ்ருத்தராகிறார். இவர்தாம், ஸம்ஸாரிகள் தாந்தாமப்வந்து 'எங்களுக்கு ஹிதஞ்சொல்லவேணும்' என்ன, சொல்லுகிறாரன்றே; பிராட்டியும் ஸ்ரீவிபீஷணாழ்வானும் ராவணனை நோக்கி ஹிதஞ்சொன்னாற்போலே யிருப்பதொன்றிறே; (க) [ஆதீப்தம் ஶரணம் யதா ப்ரதீப்தம்ஶரணம்யதா] வெந்து அற்றக்ருஹத்திலே 'ஒருகம்பாகிலும் கிடைக்குமோ?' என்று அவிக்கப் பார்ப்பாரைப்போலே.

ஈடு;—முதற்பாட்டில், ஸார்வபௌமராய்ப்போந்த ராஜாக்கள் அந்த ராஜ்யஸ்ரீயை யிழந்து இரந்து ஜீவிக்கவேண்டும்படி துர்க்கதராவர்கள்; ஆனபின்பு, (உ) "ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீ:—ஸ்ரீவத்ஸவக்ஷாநித்யஸ்ரீ:" என்கிறபடியே நித்யஸ்ரீயான ஸர்வேச்வரனைப் பற்றப் பாருங்கோள் என்கிறார்.

ஒருநாயகமா யோடவுலகுடனாண்டவர் *
கருநாய்கவர்ந்தகாலர் சிதைகியபானையர் *
பெருநாடுகாண விம்மையிலேபிச்சைதாங்கொள்வர் *
திருநாரணன்தாள் காலம்பெறச்சிந்தித்துய்ம்மினோ. (க)

ப;—முதற்பாட்டில், ஏகாதிபத்யம் நடத்தின ராஜாக்களே பிக்ஷுக்களாய் க்லேசிப்பார்கள்; ஆதலால், நிருபாதிக ஸம்பந்தயுக்தனும் நித்யஸ்ரீயான நாராயணன் திருவடிகளை ஆச்ரயியுங்கோள் என்கிறார்.

| | |
|---|---|
| ஒருநாயகமாய் — மண்டலநாதத்வரூபமான ஏகாதிபத்யத்தையுடையராய்க்கொண்டு | ஓட—(நெடுங்காலம்) நடக்கும்படி<br>உலகு—லோகத்தோடே<br>உடன்—பொருந்தி |

(க) ரா-யு-கக-உஉ. (உ) ரா-பு-ககச-கரு.

ஆண்டவர்—ராஜ்யரக்ஷணம்பண்ணிப் போந்தவர்கள், (அந்த ஐஸ்வர்யம் பக்நமான வாறே லஜ்ஜித்து ராத்ரியிலே பிக்ஷைபுகத் தேடி)
கரு—(இருளிற்காட்டில்வாசியறக்) கறுத்த
நாய்—நாயாலே
கவர்ந்த—கவ்வப்பட்ட
காலர்—காலையுடையராய்
சிதைகிய—(உபயோகார்ஹமன்றியே) பொளிந்து போகட்ட
பானையர்—பானையைப் பாத்ரமாகக் கொண்டு
பெருநாடு—(தாங்கள் நிர்வஹித்த) மஹாப்ருதிவியி லுள்ளாரெல்லாரும்
காண—காணும்படியாக
இம்மையிலே—இந்த ஜந்மந்தன்னிலே
பிச்சை—பிக்ஷையை
தாம—(லஜ்ஜையையும்விட்டுச்சென்று) தாம் அர்த்தித்து
கொள்வர்—கொள்வர்; (இப்படி ஐஸ்வர்யம் அஸ்திர மாதலால்
திரு—நித்யஸ்ரீயாய்
நாரணன்—(நிருபாதிகஸேஷியான) நாராயணனுடைய
தாள்—திருவடிகளை
காலம்பெற—காலவிளம்பம்பிறவாமல் சடக்கென
சிந்தித்து—அநுஸந்தித்து
உய்ம்மின்—உஜ்ஜீவியுங்கோள்.

ஸ்ரிய:பதியான நாராயணன் திருவடிகளிறே ஆஸ்ரயணீயமும் ப்ராப்யமும்.

ஆறு;—ஸ்வவஸாநுவர்த்தி ஸகலமநுஜராய், ஸப்தத்வீப வதிபான மேதிநியெல்லாவற்றுக்கும் அத்விதீயாதிபதிகளாய்க் கொண்டு ராஜ்யம்பண்ணினவர்களே, உத்தரக்ஷணம் அபஹ்ருத ஸகலராய் அதிக்ருபணராய் க்ஷுதார்த்தராய் ஸர்வஜநங்களும்காண ஆஹாரார்த்திகளாய்த் திரிவர்; இப்படி ஐஸ்வர்யம் அஸ்திரமாதலால் அத்தை விட்டு ஸ்ரிய:பதியாயிருந்த நாராயணன் திருவடிகளை ப்ராப்யமாகப் பற்றி உஜ்ஜீவியுங்கோள் என்கிறார். (க)

---

ஈடு;—அவ;—இரண்டாம்பாட்டு. ராஜ்யத்தை யிழக்கையே யன்றிக்கே, ராஜ்யம்பண்ணுகிற நாளில் போக்யைகளாகப் பரிக்ரஹித்த ஸ்த்ரீகளையும் ஸத்ருக்களுக்குக் கொடுத்து எளிமைப் படுவர் என்கிறார்.

உய்ம்மின்திறைகொணர்ந்தென்றுலகாண்டவர் * இம்மையே
தம்மின்சுவைமடவாரைப் பிறர்கொள்ளத் தாம்விட்டு *
வெம்மினொளிவெயிற்கானகம்போய்க் குமைதின்பர்கள்
செம்மின்முடித்திருமாலை விரைந்தடிசேர்மினோ. (௨)

**ப;**—அநந்தரம், ஐஶ்வர்யபங்கமே யன்றிக்கே அபிமதவியோகமும் பிறக்குமாதலால், ஸர்வாதிகஶேஷியான ஶ்ரிய:பதியை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

திறை—திறையை
கொணர்ந்து—கொண்டுவந்து
உய்ம்மின்—உஜ்ஜீவியுங்கோள்;
என்று — என்று (இந்த உக்திமாத்ரத்தாலே)
உலகு—லோகத்தை
ஆண்டவர்—ஆண்டவர்கள்
இம்மையே — இப்படிவாழ்ந்த ஜந்மந்தன்னிலே
தம்—தங்களுக்கு அஸாதாரணைகளாய்
இன்—அபிமதைகளாய்
சுவை—போகரஸத்தையுடையராய்
மடவாரை — (தங்களையொழியச்செல்லாத பாரதந்த்ர்யத்தையுடையரான) ஸ்த்ரீகளை
பிறர்—அந்யர்
கொள்ள—பரிக்ரஹிக்கும்படி
தாம்—தாங்களே
விட்டு — கைவிட்டு (அத்தேசத்திலுமிருக்கப்பெறாதே)
வெம்—வெவ்வியதாய்
மின் ஒளி — (பார்த்தவர் கண் வெறியோடி) மின்னொளிபரக்கும்
வெயில்—வெயிலையுடைய
கானகம்—காட்டுள்ளே
போய்—போய்
குமைதின்பர்கள் — (அங்கும் அந்யராஜாக்களாலே) பீடிதராவர்கள் : (ஆதலால்)
செம் மின்—அப்ரதிஹததேஜஸ்ஸான
முடி—அபிஷேகத்தையுடைய
திருமாலை—ஶ்ரிய:பதியை
விரைந்து—ஸத்வரராய்க்கொண்டு
அடிசேர்மின் — பதாஶ்ரயணம் பண்ணுங்கோள்.

செம்மி னென்கிறது - சிவந்த வொளி யென்றுமாம். (௨)

ஆறு;—இப்படி அபஹ்ருதராஜ்யராய்ப்போமித்தனையன்றியே, அபஹ்ருதஸ்வாபிமத களத்ராதிகளாய் அவ்வவதேஶாத் ப்ரஷ்டருமாய் வநசரராய் தத்ராபி பூர்வஶத்ருபிர்பாத்ய மாநருமாவர் ; ஆனபின்பு, கிரீடமகுடாதி திவ்யபூஷணபூஷிதனாய் ஶ்ரிய:பதியாயிருந்தவன் திருவடிகளை ஈண்டென ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

ஈடு ;— அவ ;— மூன்றும்பாட்டு. ராஜாக்கள் தங்கள் காலிலே விழுந்து கிடந்தால் அநாதரித்திருக்கும் மதிப்பை யுடையவர்கள், 'ஒருசேதநன்' என்று நினையாதபடி மதிப்பறுவர்கள் என்கிறார்.

அடிசேர்முடியினராகி அரசர்கள்தாந்தொழ *
இடிசேர்முரசங்கள் முற்றத்தியம்பவிருந்தவர் *
பொடிசேர்துகளாய்ப்போவர்க ளாதலில்நொக்கெனக் *
கடிசேர்துழாய்முடிக் கண்ணன்கழல்கள்நினைமினே. (௫)

**ப;—** அநந்தரம், காலில்விழுந்த ராஜாக்களையும் மதியாதிருந்தவர்கள், ஒருவன் காலிலே தட்டினால் ஒருவஸ்து ப்ரதிபத்தி பிறவாதபடி யாவர்கள் ; ஆதலால், போக்யனான க்ருஷ்ணன் திருவடிகளை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

அடி—தங்கள்காலோடே
சேர்—சேர்ந்த
முடியினராகி—முடியை யுடையராய்க் கொண்டு
அரசர்கள்—ராஜாக்கள்
தாம் — (இந்த ஆஸக்திதான் தரமாக அவர்கள் அநாதரித்திருக்கச்செய்தே) தாங்களே
தொழ—தொழாநிற்க,
இடிசேர்—இடியோடு ஒத்த
முரசங்கள்—முரசங்கள்
முற்றத்து—முற்றவெளியிலே
இயம்ப—ஶப்திக்க
இருந்தவர்—(அதிலே செவிமடுத்து அங்யபரதை) பாவித்திருக்குமவர்கள்
பொடி — ஒருபதார்த்தத்தை கதேஶத்தோடு
சேர்—சேர்ந்த
துகளாய்—பரமாணுவாம்படி
போவர்கள்—மதிப்பற்றுப்போவர்கள் ;
ஆதலில்—ஆதலால்
நொக்கென—சடக்கென
கடி சேர் — பரிமளஸமவாயத்தை யுடைய
துழாய்—திருத்துழாயாலே அலங்க்ருதமான
முடி—திருமுடியையுடைய
கண்ணன்—க்ருஷ்ணனுடைய
கழல்கள்—திருவடிகளை
நினைமின்—நினையுங்கோள். (௫)

ஆறு ;— இப்படி ஐஶ்வர்யம் அஸ்திரமன்றியே, ஐஶ்வர்ய போக்தாக்களானவர்கள் தாங்களும் அத்யந்தம் அஸ்த்திரர் ; ஆதலால், ஈண்டென நிரதிஶய போக்ய பூதனாய் ஆஶ்ரித ஸுலபனாயிருந்த எம்பெருமானை நினையுங்கோள் என்கிறார். (௫)

ஈடு ;—அவ ;—நாலாம்பாட்டு. ஐஶ்வர்யத்தின் நிலையாமையும் மதிப்பறுகையும் கிடக்கச்செய்தே, போக்தாக்களுடைய நிலையாமையாலும் அவனைப் பற்றவேணும் என்கிறார்.

நினைப்பான்புகின் கடலெக்கலின்நுண்மணலிற்பலர் *
எனைத்தோருகங்களு மிவ்வுலகாண்டுகழிந்தவர் *
மனைப்பால்மருங்கற மாய்தலல்லால்மற்றுக்கண்டிலம் *
பனைத்தாள்மதகளிறட்டவன் பாதம்பணிமினோ. (ச)

ப;—அநந்தரம், மதிப்புக்கேடே யன்றியே ஆயுஸ்ஸும் நிலைநில்லாதாகையாலே விரோதி நிவர்த்தகனை க்ருஷ்ணன் திருவடிகளை வணங்குங்கோள் என்கிறார்.

நினைப்பான்—(பகவதநுபவத்தை விட்டுச்செத்தராஜாக்களை) நிரூபிக்க
புகில்—இழியில்
எனைத்தோருகங்களும் — அநேகயுகங்களும்
இ உலகு—இந்தலோகத்தை
ஆண்டு—ஆண்டு
கழிந்தவர்—கழிந்துபோனவர்கள்
கடல் எக்கலில்—கடல் எக்கலிட்ட
நுண்மணலில் — நுண் மணலிற்காட்டில்
பலர்—அநேகர் ; (இவர்கள் முடியுமளவில்
மனைப்பால் — (தாங்களிருந்த) க்ருஹப்ரதேசத்துக்கும்
மருங்கு—அதின்பரிஸரத்துக்கும்
அற—வாசிதெரியாதபடி
மாய்தல் அல்லால்—அழியுமதொழிய
மற்று—வேறு அவஶேஷிப்பதொன்று உண்டாக
கண்டிலம்—கண்டிலோம்: (ஆதலால்)
பனை—பனைபோலேபருத்த
தாள்—அடிப்பரப்பையுடைத்தான
மதகளிறு—மத்தகஜத்தை
அட்டவன்—அழித்தவனுடைய
பாதம்—திருவடிகளை
பணிமின்—வணங்குங்கோள்.
'நுண்மணலிற்பலர்'' என்று, ஐந்தாம் வேற்றுமை - உவமைப் பொருவாய், நுண்மணல்போலே அஸங்க்க்யாதரென்றுமாம்

ஆறு ;—ஐஶ்வர்ய போக்தாக்களானவர்களெல்லாரும் ஸாந்வயமாக நஶித்துப்போன இத்தனையல்லது, மற்றும் ஸ்த்திரராயிருப்பாரொருவரையும் கண்டிலோம் ; ஆதலால், ஆஶ்ரித விரோதி நிரஸநஸ்வபாவனாயிருந்தவன் திருவடிகளைப் பணியுங்கள் என்கிறார். (ச)

ஈடு ;—அவ;—அஞ்சாம்பாட்டு. செல்வக்கிடப்போபாதி அங்கநாபரிஷ்வங்கமும் அஸ்திரம் என்கிறார்.

பணிமின் திருவருளென்னு மஞ்சீதப்பைம்பூம்பள்ளி *
அணிமென்குழலாரின் பக்கலவியமுதுண்டார் *
துணிமுன்புநாலப் பல்லேழையர்தாமிழிப்பச்செல்வர் *
மணிமின்னுமேனி நம்மாயவன்பேர்சொல்லிவாழ்மினே. (ரு)

ப; — அநந்தரம், அபிமதைகளான அங்கனைகளோடு ஸம்ச்லேஷமும் அஸ்திரமாதலால், அபிரூபனான ஸர்வேச்வரன் திருநாமத்தைச்சொல்லி வாழப்பாருங்கோள் என்கிறார்.

அம்—அழகியதாய்
சீதம்—சீதளமாய்
பை—பரந்த
பூ பள்ளி—பூப்படுக்கையிலே
திருவருள்—திருவருளை
பணிமின்—பண்ணியருளவேணும்
என்னும்—என்னும் ஆதரத்தையுடைய
அணி—அலங்காரோத்தரமாய்
மெல்—ம்ருதுதரமான
குழலார்—குழலையுடையவர்களுடைய
இன்பக் கலவியமுது — ஆநந்தாத்மக ஸம்ச்லேஷாம்ருதத்தை
உண்டார்—புஜித்தவர்கள்
துணி—துணிச்சீலையானது, (பின்னுக்கெட்டாமையாலே)
முன்பு—முன்னளவிலே
நால—நாலும்படியாக
பல்—பலவகைப்பட்ட
ஏழையர்—முன்பு சபலைகளான அந்த ஸ்த்ரீகள்
தாம்—தாங்களே
இழிப்ப—அநாதரோக்தியைப்பண்ணச்செய்தே
செல்வர்—(ஆசாபலத்தாலே பின்னையும் அங்கே) செல்லுவார்கள்; (ஆதலால்)
மணி—நீலரத்நம்போலே
மின்னு—ஒளியையுடைத்தான
மேனி—திருமேனியை யுடையவனும்
நம்—(ஆச்ரிதரான) நமக்குத் தன்னையநுபவிப்பிக்கும்
மாயவன்—ஆச்சர்யபூதனுடைய
பேர்—திருநாமங்களை
சொல்லி—சொல்லி
வாழ்மின்—ஆநந்திகளாகுங்கோள்.

ஆறு ;—இந்த அஜ்ஞாநஸம்போலே ஸ்த்ர்யாதி விஷயாளமும் அத்யந்த அல்பத்வ அஸ்திரத்வாதி தோஷதூஷிதமாதலால் அவற்றைவிட்டு நிரதிசயௌஜ்ஜ்வல்ய ஸௌந்தர்யாதி கல்யாணகுணகணநிதியாய் ஆச்ரித வத்ஸலனாயிருந்தவன் திருநாமங்களைச் சொல்லி வாழுங்கள் என்கிறார். (ரு)

ஈடு ;— அவ ;— ஆறும்பாட்டு. வைத்யர்கள் பிழைத்தாரை யெண்ணுமாபோலே முடிந்தவர்களை யெண்ணுகிறதென்? ஜீவித்தவர்களும் சிலரில்லையோ? என்ன, அது இருந்தபடி கேட்கலாகாதோ பின்னை? என்கிறார்.

வாழ்ந்தார்கள்வாழ்ந்தது மாமழைமொக்குளின்மாய்ந்துமாய்ந்து *
ஆழ்ந்தாரென்றல்லாலன்றுமுதலின்றறுதியா *
வாழ்ந்தார்கள்வாழ்ந்தேநிற்ப ரென்பதில்லைநிற்குறில் *
ஆழ்ந்தார்கடற்பள்ளி யண்ணலடியவராமினே. (கூ)

ப ;—அநந்தரம், நிலைநின்ற ஜீவநமில்லாமையாலே, ஸ்திரஜீவநம் வேண்டியிருப்பார் க்ஷீரார்ணவஶாயிக்கு ஶேஷபூதராகுங்கோ ளென்கிறார்.

வாழ்ந்தார்கள் — வாழ்ந்தார்களாகத் தந்தாமை நினைத்திருக்கிறவர்கள்
வாழ்ந்தது—ஜீவித்தது
மா மழை —பெருமழையில்
மொக்குளின்—குமிழிபோலே
மாய்ந்துமாய்ந்து—நசித்துநசித்து
ஆழ்ந்தார்— அத:பதித்தார்கள்
என்று அல்லால் — என்னுமித்தனையொழிய
அன்றுமுதல் — உத்பத்திவேளை தொடங்கி
இன்று அறுதியா—இன்றெல்லையாக
வாழ்ந்தார்கள்—ஜீவித்தவர்கள்
வாழ்ந்தேநிற்பர் — ஏகரூபமாக ஜீவித்தேநிற்பர்;
என்பது —என்கிற அர்த்தந்தான்
இல்லை—இல்லை.
நிற்குறில் — நிலைநின்றவாழ்வு கிட்டவேண்டில்
ஆழ்ந்த — ஆழ்ந்த
ஆர்—நிறைந்த
கடல் —கடலை
பள்ளி—படுக்கையாகவுடைய
அண்ணல்—ஸர்வஸ்வாமிக்கு
அடியவர்—அடியார்
ஆமின்— ஆகுங்கோள்.
ஆர்தல்— இடமுடைமையுமாம்.

ஆறு ;—ஐஶ்வர்யத்தைப்பெற்று வாழ்ந்தார் ஒருவருமில்லையோவென்னில்; வாழ்ந்தார்கள் வாழ்ந்ததும் வர்ஷஜல புத்புதம்போலே அத்யல்பகாலம் வாழ்ந்து நஶித்துப்போன வத்தனை; பண்டு வாழ்ந்தவர்கள் தாங்கள் வாழப்புக்க அன்றுமுதல் இன்று அறுதியாக வாழ்ந்தே நிற்கக்கண்டிலோம்; ஆனபின்பு, நித்யஸித்தமான ஐஶ்வர்யத்தை வேண்டியிருக்கில், ஆஶ்ரித பரித்ராணார்த்தமாக வந்து திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற பரமபுருஷன் திருவடிகளிலே அடிமைசெய்கையாகிற நித்யஸித்த திவ்யைஶ்வர்யத்தைப் பற்றுங்களென்கிறார். (கூ)

---

ஈடு; — அவ; — ஏழாம்பாட்டு. "ஐஶ்வர்யத்துக்கு நீர் சொல்லுகிற தோஷம் உண்டேயாகிலும், அந்நபாநாதிகள் தாரகமுமாய் போக்யமுமாயிருக்கிற ஆகாரமுண்டே" என்ன, 'அதுவும் நிலை நில்லாது' என்கிறார்.

ஆமின்சுவையவை யாறொடடிசிலுண்டார்ந்தபின் *
தூமென்மொழிமடவா ரிரக்கப்பின்னுந்துற்றுவார் *
ஈமினெமக்கொரு துற்றென்றிடறுவராதலின் *
கோமின்துழாய்முடி யாதியஞ்சோதிகுணங்களே. (எ)

**ப**;— அநந்தரம், தேஹபோஷண ஹேதுவான அந்நபாநாதிபோகமும் அநித்யமாகையாலே ஸர்வகாரணபூதனான ஸர்வஸ்மாத்பரனுடைய குணங்களை அநுஸந்தியுங்கள் என்கிறார்.

ஆம்—ப்ராக்ருத்யநுகுணமாய்
இன்—ஹ்ருத்யமாய்
அவை—லோகப்ரஸித்தமான
ஆறுசுவையோடு—(மதுராம்ல லவண திக்த கடு கஷாயமாகிற) ஆறு ரஸத்தோடே கூடின
அடிசில் — (விலக்ஷணமான) அந்நத்தை
உண்டு—புஜித்து
ஆர்ந்தபின்—பூர்ணரானபின்பு
தூ—(பரிவாலுண்டான ஸஹ்ருதயத்வத்தாலே) ஶுத்தமாய்
மென்—(ஶ்ராவ்யமாம்படி) ம்ருதுவான
மொழி—பாஷணத்தையுடைய
மடவார்—(பவ்யைகளான) ஸ்த்ரீகள்
இரக்க — அபேக்ஷிக்கையாலே, (அது மறுக்கமாட்டாமல்)
பின்னும்—பின்னும்
துற்றுவார்—வருந்தி புஜித்துப் போருமவர்கள், (அந்த ஸம்பத்து நசித்தவாறே அந்த ஸ்த்ரீகளிருந்த விடத்தே சென்று நீங்களெல்லீருங்கூட)
எமக்கு—எங்களுக்கு
ஒரு துற்று—ஒருபிடிசோறு
ஈமின் — இடவேணும்
என்று—என்று அபேக்ஷித்து
இடறுவர் — (அது கிடையாதொழியிலும் வாசல்தோறும்) தட்டித்திரிவர்;
ஆதலின்—ஆதலால்
துழாய்—திருத்துழாயாலே அலங்க்ருதமான
முடி—திருமுடியை யுடையனாகையாலே நிரதிசய போக்யனாய்
ஆதி—ஸர்வகாரணபூதனாய்
அம்—தர்ஶநீயமாய்
சோதி—தேஜோமயமான திவ்ய விக்ரஹத்தையுடையனான ஸர்வேஶ்வரனுடைய
குணங்கள்—குணங்களை
கோமின்— (க) "ஸர்வாந் காமாந் ஸஹ [illegible]" என்கிறபடியே) சேர்த்து புஜியுங்கோள்.

(க) தை - ஆ - க.

கோத்தல் - சேர்த்தல். எமக்கு என்னும் பன்மையால் - அவ்வவஸ்தையிலும் ஸ்வபஹுமாநம தோற்றுகிறது. (எ)

ஆறு ;—அந்நபாநாதி விஷயரஸங்களும் அத்யந்தம் அஸ்திரம் அதிக்ஷுத்ரமாதலால் துழாய்முடி ஆதியஞ்சோதி குணங்களைக் கோமின்கள் என்கிறார். (எ)

---

ஈடு ;—அவ ; – எட்டாம்பாட்டு. ராஜ்யஸ்ரீ நிலைநில்லாதொழிவது நாட்டோடுபொருந்தி வர்த்தியாதொழியிலன்றோ ? அவர்களோடு பொருந்திவர்த்திக்கவே அது நிலைநிற்குமே என்ன,—பொருந்திவர்த்தித்தாலும் எம்பெருமானை ஆஸ்ரயியாவிடில் கிடையாது ; அவனை ஆஸ்ரயித்துப் பெற்றாலும் அவற்றின் ஸ்வபாவத்தாலே நிலைநில்லா ; ஆனபின்பு, அவன் தன்னையே ப்ரயோஜநமாக ஆஸ்ரயியுங்கோள் என்கிறார்.

குணங்கொள்நிறைபுகழ்மன்னர் கொடைக்கடன்பூண்டிருந்து *
இணங்கியுலகுடனாக்கிலு மாங்கவனையில்லார் *
மணங்கொண்டபோகத்துமன்னியும் மீள்வர்கள்மீள்வில்லை *
பணங்கொளரவணையான் திருநாமம்படிமினோ. (அ)

ப;—அநந்தரம், பகவத்ப்ரஸாதமில்லாதபோது லப்தமான ராஜ்யமும் நிலைநில்லாதாதலால் அநந்யராயி திருநாமங்களை அப்யஸியுங்கோள் என்கிறார்.

குணம்—பரிலாதிகுணங்களுக்கு
கொள்—ஆகரபூதராய்
நிறை—(இக்குணங்களையடைய லோகமெல்லாம் கொண்டாடுகையாலே) பூர்ணமான
புகழ்—புகழையுடையராய்
மன்னர் — அபிஷிக்த க்ஷத்ரியபுத்ரர்களாய்
கொடை—(ஸ்வஸம்பத்தைலோகோபஜீவ்யமாக்கும்) ஔதார்யமாகிற
கடன்—ஸ்வபாவத்தை
பூண்டு—ஏறிட்டுக்கொண்டு
இருந்து—ப்ரதிஷ்டிதராய்
இணங்கி—(க) "[illegible]-ஸர்வாநர்த்திநோ த்ருஷ்ட்வாஸமேத்ய" (என்கிறபடியே) பொருந்தி
உலகு—லோகம்
உடன் ஆக்கிலும் — உடன் படும்படி ரக்ஷித்துப் போரிலும்
ஆங்கு—அந்த ஐஸ்வர்யவிஷயமாக
அவனை —(ஐஸ்வர்யப்ரதனை) ஸர்வேஸ்வரனை
இல்லார்—ஆஸ்ரயித்துக்கொண்டு போருகை யில்லாதவர்கள்

---

(க) ரா - அயோ - கசு - உஎ.

மணம் — நித்யோத்ஸவமான செவ்விமை
கொண்ட — உடைத்தான
போகத்து — ஐஶ்வர்ய போகத்திலே
மன்னியும் — இப்படி நிலைநின்றார்களே யாகிலும்
மீள்வர்கள் — நிவ்ருத்தைஶ்வர்யராவர்கள்;
மீள்வு இல்லை — புநராவ்ருத்தியில்லாத புருஷார்த்தம் ஸித்திக்கும்;
பணங்கொள் — (ஸ்வஸ்பர்ஶத்தாலே) விரிகிற பணங்களையுடைய
அரவு — திருவநந்தாழ்வானை
அணையான் — அணையாக வுடையனுமையாலே ஆஶ்ரித ஸம்ஶ்லேஷஸ்வபாவனைவனுடைய
திருநாமம் — திருநாமங்களை
படிமின் — ("ஸுநக்ஷா நக்ஷேஸய ந வ... வ... ... அநந்தாநந்த ஶயநபுராண புருஷோத்தம்" என்னுங்கணக்கிலே) அப்யஸியுங்கோள்

ஆறு ;— தாநாதி ஸூக்ஷ்ம தர்மோபேதராய்க் கொண்டு ராஜ்யாநுபவத்திலே ப்ரவ்ருத்தராகிலும் எம்பெருமானை ஆஶ்ரயியாதொழியில் அந்தராஜ்யம் ஸித்தியாது; அவனை யாஶ்ரயித்துப் பெற்றாலும் சிலகாலம் அநுபவித்து நிவ்ருத்தராவர்; ஆதலால், தன் திருவடிகளை ப்ராபித்தாரை ஒருநாளும் கைவிடாத எம்பெருமான் திருவடிகளையே ப்ராப்யமாகப் பற்றுங்கள்; 'அவன் திருவடிகளை ப்ராபித்தாரைக் கைவிடானோ?' என்னில், —'திருவநந்தாழ்வானைக் கைவிடிலன்றோ திருவடிகளை ப்ராபித்தாரைக் கைவிடுவது' என்கிறார். ()

---

ஈடு ;— அவ ;— ஒன்பதாம்பாட்டு. கீழெட்டுப் பாட்டாலே - ஐஹிகபோகம் அஸ்திர மென்றார் ; இதில், காயிக க்லேஶாத்மகமான தபஸ்ஸைப் பண்ணி அந்தத் தபபலம் ஸ்வர்க்கமாகக் கொண்டு ஸ்வர்க்கத்தை ப்ராபிக்கும்போது பகவத் ப்ரஸாதம் வேணும்; அது உண்டாய் ப்ராபித்தாலும் அது தன்னின் ஸ்வபாவத்தாலே நிலைநில்லாது என்கிறார்.

படிமன்னுபல்கலன் பற்றோடறுத்தைம்புலன்வென்று *
செடிமன்னுகாயஞ்செற்றார்களு மாங்கவனையில்லார் *
குடிமன்னுமின்சுவர்க்கமெய்தியும் மீள்வார்கள்மீள்வில்லை ;
கொடிமன்னுபுள்ளுடை அண்ணல்கழல்கள் குறுகுமினே. (கூ)

**ப;**—அநந்தரம், இப்படி பார லௌகிகமான ஸ்வர்க்காதி லோகமும் நிலை நில்லாமையாலே, நிலைநின்ற புருஷார்த்தத்தைக் கொடிகட்டிக்கொடுக்கும் ஈஸ்வரனை ஆஸ்ரயியுங்கோள் என்கிறார்.

படி—க்ஷேத்ரத்தையும்,
மன்னு—(கழற்றாமல்) என்றும்பூண்டு போந்த
பல்—பலவகைப்பட்ட
கலன்—ஆபரணங்களையும்
பற்றோடு—ஸங்கத்தோடேகூட
அறுத்து—விட்டு,
ஐம்புலன் — (விஷயாந்தரப்ரவணமான) இந்த்ரியங்களைந்தையும்
வென்று—(ஸ்வவஸமாம்படி)வென்று
செடி மன்னு—(தீர்க்ககாலம்தபஸ்ஸு பண்ணுகையாலே) தூறுமண்டிக்கிடக்கிற
காயம்—ஸரீரத்தை
செற்றார்களும் — (உபவாஸாதிகளாலே) ஒறுத்துப்போந்தவர்களும்
மன்னும்— (இந்தத்தப:பலமாய் கல்பாவஸாந) ஸ்தாயியான
குடி—குடியிருப்பையுடைத்தாய்
இன்—ஸுகோத்தரமான
சுவர்க்கம்—ஸ்வர்க்கத்தை
எய்தியும் — பெற்றார்களேயாகிலும், (அந்தபோகஸ்த்தைர்யத்துக்கு உறுப்பாக)
அவனை—(பலப்ரதனான) அவனை
ஆங்கு—அங்குமிருந்து
இல்லார்—ஆஸ்ரயிக்கையில்லாதவர்கள்
மீள்வர்கள் — நிவ்ருத்தராய்ப் போவர்கள்;
மீள்வில்லை — நிவ்ருத்தியில்லாத பலமுண்டாகைக்கு
கொடி—த்வஜத்திலே
மன்னு—நித்யஸந்நிதிபண்ணும்
புள்—பெரியதிருவடியை
உடை—உடைய
அண்ணல்—ஸர்வேஸ்வரனுடைய
கழல்கள்—திருவடிகளை
குறுமின்—கிட்டப்பாருங்கோள்.
படிமன்னு என்று—ஸரீரத்தோடு பொருந்தின என்றுமாம்.

ஆறு ;—இப்படி ஐஹிகமான ஐஸ்வர்யம் அல்பமுமாய் அஸ்திரமுமா யிருந்ததாகில், ஸ்வர்க்காத் யைஸ்வர்யத்தை ப்ராப்யமாகப் பற்றினாலோ? என்னில், ஸ்வர்க்காத்யைஸ்வர்ய வாஞ்சையாலே ஐஹிக விஷயஸங்க பரித்யாக பூர்வகமாக இந்த்ரியங்களை ஜயித்து ஸ்வர்க்க ப்ராப்தி விரோதி ஸரீரத்தைப் பரித்யஜித்தவர்களுக்கும் எம்பெருமானை ஆஸ்ரயியாதொழியில், அந்த ஸ்வர்க்காத் யைஸ்வர்யம் ஸித்தியாது; ததாஸ்ரயணத்தாலே ஸித்தித்தாலும் அஸ்த்திரம்; ஆதலால், இப்படி அல்பாஸ்த்திரத்வ பஹுளதுக்கத்வ அநர்த்த

ஹேதுக்வாத்யநேக தோஷதூஷிதமான இந்த ஐஶ்வர்யத்தை விட்டு, பெரிய திருவடியைக் கைவிடினும் ஸ்வாஶ்ரிதரை ஒருநாளும் ஒருதஶையிலும் கைவிடாத எம்பெருமான் திருவடிகளையே பரம ப்ராப்யமாகப் பற்றுங்கள் என்கிறார். (கூ)

---

ஈடு;—அவ;—பத்தாம்பாட்டு. பூமியில் ஐஶ்வர்யம், ஸ்வர்க்கா நுபவம் இவை நிலைநில்லா வென்றார் கீழ்; இவைபோலன்றிக்கே ஆத்மலாபம் நிலைநின்ற புருஷார்த்தமே யென்னில்;—கீழ்ச்சொன்னத்தைக் குறித்து ஒருநன்மை யுண்டேயாகிலும் பகவதா நந்தத்தைப்பற்ற இது ஏகதேஶமா யிருக்கையாலே அதுவும் தண்ணிது; ஆனபின்பு, அவனைப்பற்றப் பாருங்கோ ளென்கிறார்.

குறுகமிகவுணர்வத்தொடுநோக்கி எல்லாம்விட்ட *
இறுகலிறப்பென்னும் ஞானிக்கு மப்பயனில்லையேல் *
சிறுகநினைவதோர்பாசமுண்டாம் பின்னும்வீடில்லை *
மறுகலிலீசனைப்பற்றி விடாவிடில்வீடஃதே. (கO)

ப;—அநந்தரம், இப்படி அஸ்திரமன்றியே ஸ்திரமான கைவல்யமும் பரம புருஷார்த்தத்தைப் பற்றப் பசையற்றிருக்கையால் நியந்தாவான ஸர்வேஶ்வர பகவத் ப்ராப்தியே அதிஶயித புருஷார்த்தமென்கிறார்

குறுக—(விஷயாந்தரங்களில் அகலப் போகாதபடி ப்ரத்யக் விஷயத்திலே) ஆஸந்நமாக

உணர்வத்தொடு—ஜ்ஞாநைக நிரூபணீயமான ஆத்மவஸ்துவோடேகூடி

மிகநோக்கி — (தர்ஶந ஸமாநாகாரமாம்படி) மிக அநுஸந்தித்து

எல்லாம்—(ஆத்மவ்யதிரிக்த) ஸகலபுருஷார்த்தங்களையும்

விட்ட—விட்டவனாய்

இறுகல்—ஆத்மமாத்ரத்திலே பர்யவஸித்த

இறப்பு—மோக்ஷத்தை

என்னும் — புருஷார்த்தமென்றிருக்கும்

ஞானிக்கும்—ஜ்ஞாநிக்கும்

அப்பயன் — (ஸ்வயம் ப்ரயோஜநரூபமான ஸர்வேஶ்வரனை) உபாயமாகப்பற்றுகை

இல்லையேல்—இல்லையாகில்

சிறுக—அபக்ருஷ்டபுருஷார்த்தங்களை

நினைவது—ஸ்மரிக்கைக்கடியான

ஓர்பாசம்—ஸங்கம்

உண்டாம்—உண்டாம்.

பின்னும்—அதுக்குமேலே

வீடு—(ஆத்மப்ராப்திரூபமான) மோக்ஷமும்

இல்லை—ஸித்தியாது; (ஆனபின்பு)

| | |
|---|---|
| மறுகல் இல் — ஸ்வபாவ பேதாதிரூப ஸம்ஸ்தஹேய ப்ரதி படனுய் | பற்றி — (ப்ராப்யத்வேநவும் ப்ராபகத்வேநவும்) ஸமாஶ்ரயித்து |
| ஈசனை—(ஸ்வாபாவிக) ஸமஸ்தநியந்த்ருத்வாதி ஸமஸ்த கல்யாண குணுத்மகனை ஸ்வாமியை | விடாவிடில் — (அதிகார்யந்தரங்களைப் போலே ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டு) அகலாதொழியில் |
| | அலீகே—அதுவே |
| | வீடு—பரமபுருஷார்த்தம். |

இறுகல்-ஸங்கோசமும், சிக்கெனவும்; மறுகல்-ஸ்வபாவபேதம். (கo)

ஆறு;—அஸ்திரத்வாதி தோஷாஸம்பிந்நமான கைவல்யத்தை ப்ராப்யமாகப் பற்றிலோ? என்னில்; - ப்ராக்ருதவிஷய வைராக்ய பூர்வகமாக ஜ்ஞாந யோகநிஷ்டனுனவனுக்கும் எம்பெருமானை ஆஶ்ரயித்தாலல்லது ஆத்மாவலோகந விரோதிகர்மம் போகாது; பகவத் ஸமாஶ்ரயணத்தாலே ஆத்மாவலோகநம் பிறப்பது; பிறந்தாலும் அந்திமதஶையிலே பகவதநுஸந்தாநம்பண்ணி ப்ரதிபந்தகத்தைப் போக்காதொழியில் பின்னை ஆத்மயாதாத்ம் யாவிர்ப்பாவலக்ஷணமோக்ஷம் ஸித்தியாது; முக்யமான மோக்ஷமாகிறதும் அந்த பகவத் கைங்கர்யமே; இப்படி கைவல்யோபாயதயா பகவத் ஸமாஶ்ரயணம் பண்ண வேண்டுகையாலும், பகவத் கைங்கர்யந் தானே பரமமோக்ஷமாகையாலும், அந்த பகவத் கைங்கர்யாபேக்ஷயா அத்யல்பஸுகமான கைவல்யத்தை விட்டுப் பகவத் கைங்கர்யத்தையே பரமப்ராப்யமாகப் பற்றுங்கள் என்கிறார். (கo)

---

ஈடு ; — நிகமத்தில் - இத்திருவாய்மொழி பத்தும் கற்றார், ஐஶ்வர்யாதி க்ஷுத்ர புருஷார்த்தத்தைத் தவிர்ந்து பகவத் கைங்கர்யைகபோகராவ ரென்கிறார்.

அலீகேஉய்யப்புகுமாறென்று கண்ணன்கழல்கள்மேல் *
கொய்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்குற்றேவல் *
செய்கோலத்தாயிரம் சீர்த்தொடைப்பாடலிவைபத்தும் *
அலீகாமல்கற்பவராழ்துயர்போயுய்யற்பாலரே. (கக)

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

**ப;**—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக துঃக்கநிவ்ருத்தி பூர்வகமான ஆத்மோஜ்ஜீவநத்தை அருளிச்செய்கிறார்.

| | |
|---|---|
| உய்ய—உஜ்ஜீவிக்கைக்கு உறுப்பாக | ஆயிரம்—ஸஹஸ்ரஸங்க்யாதமாம் |
| புகும்—கிட்டும் | சீர்த் தொடை — சீருந் தொடையுமுடைய |
| ஆறு—உபாயம் | பாடல்—பாடலான திருவாய்மொழியில் |
| அஃதே — அதுவே, | இவைபத்தும்—இவைபத்தையும் |
| என்று—என்று (அறுதியிட்டு) | அஃகாமல்—நழுவாதபடி |
| கண்ணன்—க்ருஷ்ணனுடைய | கற்பவர்—கற்பவர் |
| கழல்கள்மேல்— திருவடிகளின்மேலே | ஆழ் — (ஐஶ்வர்ய கைவல்யங்களிலே) ஆழங்காற்பட்டுவரும் |
| கொய் —கொய்யப்படும் | துயர்—துঃகம் |
| பூ—புஷ்பஸம்ருத்தியையுடைத்தான | போய்—போய் |
| பொழில்—பொழிலையுடைத்தான | உய்யற்பாலர்—(பகவத்பக்திரூபமான) ஆத்மோஜ்ஜீவந ப்ரகாரத்திலே யாவர்கள். |
| குருகூர்—திருநகரிக்கு நிர்வாஹகரான | |
| சடகோபன்—ஆழ்வார் | |
| குற்றேவல்கள்—அந்தரங்கமான கைங்கர்ய ரூபங்களாக | |
| செய்—செய்த | |
| கோலம்—அலங்காரபூர்ணமாய் | |

இது - கலித்துறை. (கக)

ஆறு;—ஆழ்வார் ஸர்வோஜ்ஜீவநார்த்தமாக எம்பெருமானைப் பாடின இத்திருவாய்மொழியைத் தப்பாமல் கற்பார் நிரஸ்தாகில துঃக்கராய்க்கொண்டு பகவத் கைங்கர்ய மஹாரஸத்தைப் பெறுவார் என்கிறார். (கக)

திருவாய்மொழி நாலாம்பத்து
முதற்றிருவாய்மொழி வ்யாக்யாநங்கள்
முற்றுப்பெற்றன.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

## இரண்டாந்திருவாய்மொழி — பாலனாய் ப்ரவேசம்

ஆறு ;—(பாலனாய்) இப்படி பரமப்ராப்யபூதனான எம்பெருமானோடே கலந்து பரிமாறவேணுமென்று ஆசைப்பட்டுப் பெறாத நிரவதிகவ்யஸநத்தாலே தாம் அலற்றுகிறபடியை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். *

ப ;—இரண்டாந்திருவாய்மொழியில் ; கீழ் - இதரபுருஷார்த்தங்களுடைய அபகர்ஷோபதேச பூர்வகமாக ஈச்வரனுடைய பரமப்ராப்யத்வத்தை உபதேசிக்கையாலே, ஆத்மாவினுடைய அநந்யபோக்யதையை அநுஸந்தித்து, அவ்வழியாலே பஹுவித ஸஹஜ போக்யாகாரயுக்தனான ஸர்வேச்வரனுடைய விப்ரக்ருஷ்டாபதாநங்களில் போகாபிநிவேசயுக்தராய் ; அவனுடைய வடதளசாயித்வத்தையும், கோபிகாலீலா ஸங்கித்வத்தையும், த்ரைவிக்ரமப்ரகாரத்தையும், பரத்வவைபவத்தையும், ஸப்தருஷபநிரஸநத்தையும், ஸ்ரீவராஹப்ராதுர்ப்பாவத்தையும், அம்ருதமதநவ்ருத்தாந்தத்தையும், லங்காநிரஸநத்தையும், அஸாதாரண சிஹ்நங்களையும், ஆபரணசோபையையும் அநுஸந்தித்து, ஏவம்விசிஷ்டனான ஸர்வேச்வரன் திருவடிகளிலே போக்யதாஸூசகமான திருத்துழாய் விஷயமாகத் தமக்குப் பிறந்த ஆதர விசேஷத்தைப் பரிவர் பார்ச்வஸ்தர்க்குச் சொல்லுகிற பாசுரத்தை, விச்லிஷ்டையான நாயகியினுடைய ஆர்த்த்யதிசயங்கண்டநற்றாயானவள் வினவினார்க்கு உரைத்த பாசுரத்தாலே அருளிச்செய்கிறார். *

ஈடு ;—ராமவிரஹத்தில் திருவயோத்யையிலுள்ளார் கூப்பிட்டாற்போலே, தாமும் தம்முடைய கரணக்ராமமுமாய்ப் பெருவிடாய்ப்பட்டுக் கூப்பிட்டார் - * முடியானேயில் ; இக்கூப்பீட்டை அல்லாதார் க்ஷுத்ர ப்ரயோஜநங்களுக்காகப் புறம்பே கூப்பிடுகிற படியைக் கண்டு, 'இது இவ்விஷயத்திலே யாகப் பெற்றதில்லையே!' என்று நொந்து, நாம் முந்துற முன்னம் இவ்விஷயத்திலே கூப்பிடப்பெற்றோமிறே' என்று உகந்தார், * சொன்னால் விரோதத்தில் ; 'அவ்வளவேயோ ? பகவதர்ஹகரணனாகவும் பெற்றோம்' என்றார் - * சன்மம் பலபலவில் ; அல்லாதார், தந்தாமுடைய காணங்களைப் பாழே போக்குகைக்கு அடியான ஐச்வர்ய கைவல்யங்களிலே ப்ரவணராய் அநர்த்தப்படுகிற படியைக்கண்டு, அவற்றினுடைய அல்பாஸ்த்திரத்வாதி தோஷங்களையும், ஸர்வேச்வரன் பரமப்ராப்யனாயிருக்கிற படி

யையும் உபதேசித்து, 'அவற்றைவிட்டு அவனைப் பற்றுங்கோள்' என்றார் - * ஒருநாயகத்தில். ப்ரஸங்காத், "இவ்வொருநாயகம் அருளிச்செய்தவரே கிடிகோள் * சூழ்விசும்பணிமுகிலும் அருளிச் செய்தார்; இத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவுள்ளம் பற்றுங் கோள்" என்று பிள்ளை அருளிச்செய்வர். அதாவது - "இது ப்ரத் யக்ஷிக்கிறப்போலே இஶ்ஶரீர ஸமநந்தரம் அதுவும் காணவன்றே நாம் புகுகிறது; இனி எத்தனைநாள்" என்று.

ஆக, மூன்று திருவாய்மொழியாலும் - இப்படி பரோபதேசம் பண்ணின விது ஸம்ஸாரிகள் திருந்துகைக்கு உடலன்றிக்கே, அந் தாலும் தமக்கு பகவத் விஷயத்திலே விடாய் பிறந்தபடி சொல்லு கிறார் - இதில்; அதாவது - இதர விஷயங்களினுடைய தோஷாநு ஸந்தாந பூர்வகமாக பகவத் வைலக்ஷண்யத்தை அநுஸந்தித்திறே, 'அவனைப் பற்றுங்கோள், இதர விஷயங்களை விடுங்கோள்' என் கிறது; அது அவர்களுக்கு உடலன்றிக்கே தமக்கு வைஶத்யம் பிறக்கைக்கு உடலாயிற்று; ஸ்ரீவிபீஷணாழ்வான் ராவணனுக்குச் சொன்ன ஹிதம் அவனுக்கு உடலன்றிக்கே தனக்குப் பெருமாளைப் பற்றுகைக்கு உடலானாற்போலேயும், ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் ஹிரண் யனுக்குச்சொன்ன ஹிதம் அவன் நெஞ்சிலேபடாதே தனக்கு பகவத் பக்தி மிகுகைக்கு உடலானாற்போலேயும்; * வீடுமின் முற்றத்தி லும் * சொன்னால் விரோதத்திலும் * ஒருநாயகத்திலும் - பிறரைக் குறித்துச்சொன்ன ஹிதம் அவர்களுக்கு உறுப்பன்றிக்கே, மூன்று களையும் பறித்துச் சங்காயமும் வாரின பயிர் ஶதஶாகமாகப் பணைத் துப் பலிக்குமாபோலே தமக்கு அவன் பக்கலிலே அபிநிவேஶம் ஶதஶாகமாகப் பணைக்கைக்கு உடலாயிற்று.

இவர்களுக்குக் களையாவது - பகவத்வ்யதிரிக்தவிஷயங்களும், அஸேவ்ய ஸேவைபண்ணித் திரிகையும், 'ஐஶ்வர்ய கைவல்யங்கள் புருஷார்த்தம்' என்றிருக்கையும்; சங்காயமாவது - பயிர்தன்னிலே யுண்டாய் அறியாதார்க்குப் பயிர்போலே பிரதிபாஸித்து அச்சங் காயம் வாரிப்பொகடாதபோது நெல் பதர்க்கும் படியாயிருப்ப தொன்று; அப்படியே கைவல்யமும். இவ்வபிநிவேஶமும் இப்படிச் செல்லா நிற்கச்செய்தே முன்பு * முடியானேயிற் பிறந்த விடாய்

ரஸாந்தரங்களாலே அபிபூதமாய்க் கிடந்தது; அந்தவிடாய் தலையெடுத்து, 'தேசகாலங்களால் விப்ரக்ருஷ்டமான அவன் படிகளையும் தத்தத் தேசகால விசிஷ்டமாக்கி இப்போதே பெற்று அநுபவிக்கவேணும்' என்னும் விடாயும் பிறந்தது; அது அப்போதே கிடையாமையாலே, அந்த விடாய்தான் அவஸ்தாந்தரத்தைப் பிறப்பித்தது.

அவ்வவஸ்தாந்தரந்தான் - ஸர்வேச்வரனோடே கலந்து பிரிந்தாளொருபிராட்டி தசையாய் - பிராட்டி தான் மோஹங்கதையாய்க் கிடக்க, அவள் தசையை அநுஸந்தித்த திருத்தாயார் 'தேசகாலங்களால் விப்ரக்ருஷ்டமான அவன் படிகளையும் தத்தத்தேசகால விசிஷ்டமாக்கி இப்போதே பெற்று அநுபவிக்கவேணு மென்னா நின்றாள்' என்கிற பாசுரத்தாலே ஸ்வதசையைப் பேசுகிறார். திருவடியைக்கண்ட பீமஸேநன், (க) "[illegible] - ஸாகரம் தர்த்து முத்யுக்தம் ரூபமப்ரதிமம் மஹத் । த்ரஷ்டுமிச்சாமி" என்று நீ முன்பு கடல்கடந்த வடிவை நான் இப்போது காணவேணு மென்றானிறே, 'இவன் சக்திமான்' என்று தோற்றுகையாலே; அப்படியே இவளும் பகவச் சக்தியை யறிந்தபடியாலேயும், தன் சாபலாதிசயத்தாலேயும், அவாவின் மிகுதியாலேயும், பூதகாலத்திலுள்ளவற்றையும் இப்போதே பெறவேணுமென்று ஆசைப்படா நின்றாள் என்கிறாள். *

ஈடு ;—அவ ;—முதற்பாட்டு; வடதளசாயியினுடைய திருவடிகளில் சாத்தின திருத்துழாயைச் செவ்வியோடே இப்போதே பெறவேணுமென்று ஆசைப்படா நின்றாள் என்கிறாள்.

பாலனாயேழுலகுண்டுபரிவின்றி *
ஆலிலையன்னவசஞ்செய்யு மண்ணலார் *
தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றே
மாலுமால் * வல்வினையேன்மடவல்லியே. (க)

ப ;—முதற்பாட்டில், வடதளசாயி திருவடிகளில் திருத்துழாயைப் பெறவேணுமென்று ப்ரமியாநின்றாள் என்கிறாள்.

---

(க) பாரத உத்யோக.

பாலனாய் — அதிபால்யமான வடிவை யுடையனாய்
ஏழ் உலகு—ஸமஸ்தலோகங்களையும்
உண்டு—அமுதுசெய்து, அத்தால்
பரிவு இன்றி—ஒருமிறுக்கு இன்றியே
ஆலிலை—ஆலந்தளிர்மேலே
அன்னவசஞ்செய்யும் — உண்டதுக்கு ஈடாகக் கிடக்கும்
அண்ணலார்—ஸ்வாமியானவருடைய
தாளிணைமேல்—திருவடிகளிரண்டின் மேலே
அணி—('இவ்வபதானத்துக்குத்தோற்று அன்புடைய ஸூரிகள்) சாத்தின
தண்—குளிர்ந்த
அம்—செவ்வியையுடைய
துழாய் — திருத்துழாயை (ப்பெற வேணும்)
என்றே—என்றே
மாலும் —('அதீதகாலத்திலது இப்போது கிட்டாது') என்றறியாதே ப்ரமியாநின்றாள்;
வல்வினையேன் — இக்கலக்கம் காண்கைக்கு அடியான பாபத்தை யுடையளான என்னுடைய
மடம்—பற்றிற்றுவிடாத துவட்சியை யுடையளாய்
வல்லி — உபக்நாபேக்ஷமான கொடி போலே யிருக்கிற இவள்.

அகடிதங்களை கடிப்பிக்கும் ஸர்வ ஶக்திக்குச் செய்ய வொண்ணாததில்லை யென்றிருக்கை.

"காலிணை மேலணி தண்ணந்துழாய்" என்றுபாடம்சொல்லுவாருமுளர். (௧)

ஆறு ;—எம்பெருமான் ஒருபிள்ளையாய்ப் பிள்ளைத்தனத்தாலே முன்பு காணப்படுகிற இந்த ஏழுலகங்களையும் உண்டு அதனால் ஓர் அநிஷ்டகந்தமின்றியே ஆலிலையிலே கண்வளர்ந்தருளினபோது அவன் திருவடிகளிலே யணிந்த திருத்துழாயை இக்காலத்திலே பெறவேணுமென்று ஆசைப்படாநின்றாள்; இப்படி ஸர்வ ஶக்தியான எம்பெருமான் தன்னாலும் ஸம்பாதிக்க வொண்ணாத ஒன்றை இவள் ஆசைப்படுகிறது என்னுடைய பாபமிறே என்று இவளுடைய திருத்தாயார் அலற்றுகிறாள். (௧)

---

ஈடு ;—அவ ;—இரண்டாம்பாட்டு. 'ஸர்வரக்ஷகனான ஸர்வேஶ்வரன் ப்ரளயாபத்திலே தன் விபூதிரக்ஷணம் பண்ணினானாகில், அது உன் பேற்றுக்கு உடலாமோ?' என்ன, 'அது உடலன்றாகில் தவிருகிறேன், என்பருவத்திற் பெண்களுக்கு உதவின விடத்திலே எனக்கு உதவத் தட்டு என்?' என்னாநின்றாள் என்கிறாள்.

வல்லிசேர் நுண்ணிடை யாய்ச்சியர் தம்மொடும் *
கொல்லைமைசெய்து குரவைபிணைந்தவர் *
நல்லடிமேலணி நாறுதுழாயென்றே
சொல்லுமால் * சூழ்வினையாட்டியேன் பாவையே. (உ)

**ப** ;—அநந்தரம், திருக்குரவை கோத்த க்ருஷ்ணன் திருவடிகளில் திருத்துழாயை எப்போதும் பிதற்றிடா நின்றாள் என்கிறாள்.

வல்லி—வல்லியோடு
சேர்—ஒத்த
நுண்—நுண்ணிய
இடை—இடையையுடைய
ஆய்ச்சியர் தம்மொடும்—ஆய்ச்சியர் தங்களோடு ஒருகோவையாக (அவர்கள் வரம்பழியும்படி)
கொல்லைமை—அமர்யாதமான வ்யாபாரத்தை
செய்து—பண்ணி
குரவை—குரவையை
பிணைந்தவர்—கோத்தவருடைய
நல் — (ந்ருத்தத்துக்கிடாக மிதிக்கிற) அழகிய
அடிமேல்—திருவடிகளிலே
அணி—அணியப்பட்ட
நாறு—பரிமளோத்தரமான
துழாய் என்றே—திருத்துழாயென்றே
சொல்லும்—சொல்லாநின்றாள் ;
சூழ் — (இவளை இப்படி காணும்படி தப்பாமல்) சூழ்ந்த
வினையாட்டியேன்—பாபத்தை யுடைய என்
பாவை—பெண்பிள்ளையானவள். (உ)

ஆறு ;—(வல்லிசேர்) தன்னுடைய ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதி கல்யாண குணாவிஷ்காரத்தாலே திருவாய்ப்பாடியில் பெண்பிள்ளைகளை வாயடித்துத் தம் திருவடிகளிலே வந்துவிழும்படி வசீகரித்து அவர்களோடே திருக்குரவை கோத்தருளின வண்டுவரைப் பெருமானுடைய அவ்வழகிய திருவடிகளிலே யணிந்த நாறுதுழாயை ஆசைப்படுகிறாள் என்கிறாள். (உ)

---

ஈடு ;— அவ ;—மூன்றாம்பாட்டு. ஒருவருக்காக உதவினதேயன்றிக்கே, ஒருநாட்டுக்காக உதவினவன் பக்கலுள்ளது பெறத்தட்டு ஏன் ? என்னுநின்றாள் என்கிறாள்.

பாவியல்வேத நன்மாலைபலகொண்டு *
தேவர்கள்மாமுனிவ ரிறைஞ்சநின்ற *
சேவடிமேலணி செம்பொன்துழாயென்றே
கூவுமால் * கோள்வினையாட்டியேன்கோதையே. (ங)

ப ;—அநந்தரம், ஸர்வலோகமும் ஸ்துதிக்கும்படியான த்ரிவிக்ரமன் திருவடிகளில் திருத்துழாயைச் சொல்லி அழையாநின்றாள் என்கிறாள்.

பா—சந்தஸ்ஸிலே
இயல்—வர்த்திப்பதான
வேதம்—வேதஸமூஹங்களையும்
நல்—திவ்யமாய்
பல—பலவகைப்பட்ட
மாலை—மாலைகளையும்
கொண்டு—கொண்டு,(க) "ஸமிதெ ஸதாரணார்த் ஸங்கைஸ் ஸமாராணம்" என்கிறபடியே)
தேவர்கள்—தேவர்களும்
மா முனிவர் — ப்ரஸாத்யரான ஸநகாதி முனிகளும்
இறைஞ்ச—ஆராதிக்கும்படி
நின்ற—(லோகத்தையளந்து) நின்ற
சே அடிமேல்—சிவந்த திருவடிகளின் மேலே
அணி—(அவர்கள்) அணிந்த
செம்—சிவந்த
பொன் — பொன்போலே ஸ்ப்ருஹணீயமான
துழாயென்றே — திருத்துழாயைச் சொல்லியே
கூவுர்—கூப்பிடாநின்றாள்,
கோள் வினை யாட்டியேன் — ப்ரபலமான பாபத்தையுடையேனனென்னுடைய
கோதை—பூமாலைபோலே யிருக்கிறவள். மாலையை யுடையவளாகவுமாம்.
கோள்—மிடுக்கு கூவுதல் - அழைத்தலாய் கூப்பிடுதல். (௩)

ஆறு ;—(பாவியல்.) ஸாதுபதவிரசிதமாய் அதிமங்களமாய் அஸங்க்யேயமாயிருந்த வேதங்களாகிற மாலைகளைக்கொண்டு சதுர்முகாதி தேவர்களும் ஸநகாதிமுநிகளும் இறைஞ்சும்படி தன்னைக் கொடுத்துக்கொண்டு பாற்கடல் சேர்ந்த பரமனுடைய அழகிய திருவடிகளிலே யணிந்த செம்பொற்றுழா யென்று இவள் கூப்பிடா நிற்கும் என்கிறாள். (௩)

---

ஈடு ; — அவ ;—நாலாம்பாட்டு. பெருக்காறு வற்றினாற்போலே ஒருகால் எல்லாரையும் வாழ்வித்துப்போன அவதாரத்தி லுள்ளத்தை நான் இப்போது எங்கே தேடுவேன்? என்ன, அது தவிருகிறது, என்றுமொக்க ஏகரூபமாயிருக்கிற பரமபத நிலயன் திருவடிகளில் திருத்துழாய் பெறத் தட்டென்? என்னாநின்றாள் என்கிறாள்.

கோதில்வண்புகழ் கொண்டுசமயிகள் *
பேதங்கள்சொல்லிப் பிதற்றும்பிரான்பரன் *
பாதங்கள்மேலணி பைம்பொன்துழாயென்றே
ஓதுமால் * ஊழ்வினையேன் தடந்தோளியே. (௪)

---

(க) வி-த;மாங்களய ஸ்தவம்.

ப ;—அநந்தரம், ஸௌரிபோக்யனான ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளில் திருத்துழாயைச் சொல்லிப் பாராயணம் பண்ணாநின்றாள் என்கிறாள்.

| | |
|---|---|
| கோது — (ஸ்வோத்கர்ஷார்த்தமாகிற) கோது | பிரான்—மஹோபகாரகனான |
| இல—இன்றியே (பரார்த்தமாயே அநுபாவ்யமா)யிருக்கிற | பரன்—ஸர்வஸ்மாத்பரனுடைய |
| வண்—விலக்ஷணமான | பாதங்கள்மேல்—திருவடிகளிலே |
| புகழ்—குணங்களை | அணி — (குணவித்தரான ஸூரிகள்) சாத்தின |
| கொண்டு—கொண்டு | பை—பசுத்து |
| சமயிகள்—ஶீலாதிகளாயும் ஸௌர்யாதிகளாயும் ஆநந்தாதிகளாயுமிருக்கிற குணங்களிலே தனித்தனியே வ்யவஸ்திதராய் | பொன்—நன்றான |
| பேதங்கள் — (தத்தத் குணோத்கர்ஷ) பேதங்களை | துழாயென்றே—திருத்துழாயென்றே |
| சொல்லி—சொல்லி | ஓதும் — (எப்போதும்) சொல்லாநின்றாள், |
| பிதற்றும்—(ஸரஸமான) அக்ரமோக்திகளைப் பண்ணும்படி இவர்களை அநுபவிப்பிக்கிற | ஊழ்வினையேன் — அநாதிஸித்தமான மஹாபாபத்தையுடையேனானஎன்னுடைய |
| | தடம்—சுற்றுடைத்தான |
| | தோளி—தோளையுடையவள். |
| | ஊழ்வினை—பழவினை. ௪) |

அரு ;- (கோதில.) - ஒரொரு குணவிஶேஷத்தை அநுபவித்தால், "இந்தக்குணமல்லது மற்றொன்று அறியேன்" என்று அந்தக்குணத்துக்குத் தோற்று அடிமையாயிருக்கும் திவ்ய புருஷர்களாலே, இதராநுபூதகுணங்களைக் காட்டில் ஸ்வாநுபூதகுணத்துக்கு வைலக்ஷண்யத்தை விவஶராய்க்கொண்டு பரஸ்பரம்சொல்லிப் பிதற்றப்படுகிற எம்பெருமானுடைய பாதங்கள்மேலணி பைம்பொன் துழாயிலே யுள்ள ஆசையாலே அத்துழாயென்றே இவள் பலகாலும் அலற்றும் என்கிறாள். (௪)

---

ஈடு ;—அவ ;—அஞ்சாம்பாட்டு. 'ஸர்வஸ்மாத்பரனுப் பரமபத நிலயனுய் அப்ராப்யனு யிருக்கிறவன திருவடிகளில் சாத்தின திருத்துழாயை என்னாலே தேடப்போமோ?' என்ன, 'ஆனால், இங்கே என்னோட்டையா ளொருத்திக்காகத் தன்னைப்பேணாதே எருதேழடர்த்த க்ருஷ்ணன் திருவடிகளிற் சாத்தின திருத்துழாய் பெறத் தட்டு என் ? என்னாநின்றாள்' என்கிறாள்.

தோளிசேர்பின்னைபொருட்டெருதேழ்தழீ இக்
கோளியார்*கோவலனார் குடக்கூத்தனார் *
தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றே
நாளுநாள் * நைகின்றதால் என்தன்மாதரே. (ரு)

ப ;—அநந்தரம், எருதேழடர்த்த க்ருஷ்ணன் திருவடிகளில் திருத்துழாயைச்சொல்லி பரிதிலையாகா நின்றாள் என்கிறாள்.

| | |
|---|---|
| தோளி—(அவன் விரும்பும்படியான) தோளையுடையளாய் | குடக்கூத்தனார் — குடக்கூத்தாலே மநோஹர சேஷ்டித ரானவருடைய |
| சேர்—(ஸ்ரீலாதிகளால் அவனுக்கு) ஸத்ருசையான | தாளிணைமேல்—திருவடிகளிரண்டின் மேலே |
| பின்னைபொருட்டு—நப்பின்னைக்காக | அணி — (அந்த வீராபதாநத்துக்குத் தோற்று அவர்கள்) இட்ட |
| எருதுஏழ்—எருது ஏழையும் | தண்—குளிர்ந்து |
| தழீஇக்கோளியார் — (ஒருகாலே) தழுவிக்கொள்ளும் ஸ்வபாவராய் | அம்—அழகிய |
| கோவலனார் — (அவர்களுக்கு அநுரூபமான) கோபதலத்தை யுடையராய் | துழாயென்றே—திருத்துழாயென்றே |
| | நாளும்நாள்—நாடோறும் நாடோறும் |
| | என்தன் மாதர்—என்பெண்பிள்ளை |
| | நைகின்றது—நைகிறது. (ரு) |

ஆறு ;—(தோளிசேர்.) - தன் திருத்தோளி னழகாலே வண்டுவரைப் பெருமாளிலும் அதிகதரையாய் மற்றுமுள்ள தன்னுடைய திவ்யாவயவ ஸௌந்தர்யத்தினால் அவனோடு ஸத்ருசையா யிருந்த நப்பின்னைப் பிராட்டியைத் திருமணம் புணருகைக்காக எருதேழ் தழுவிக்கொண்டு ஆஸ்ரிதஜந நயநஸம்ருத்யர்த்தமாகக் குடக்கூத்தாடியருளின வண்துவரைப் பெருமானுடைய தாளிணைமேல் அணி தண்ணந்துழா யென்றே நாளும்நாள் நைகின்றதால் என்தன் மாதர் என்கிறாள். (ரு)

---

ஈடு ;—அவ ;—ஆறும்பாட்டு. மணிச்சுழியாடல் நப்பின்னைப்பிராட்டிக்கு உதவினாற்போலன்றிக்கே, ஸ்ரீபூமிப்பிராட்டிக்காகத் தன்னை யழிய மாறியும் உதவினவனுடைய திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

மாதர்மாமண்மடந்தைபொருட்டேனமாய் *
ஆதியங்காலத்தகலிடங்கீண்டவர் *
பாதங்கள்மேலணிபைம்பொன்துழாயென்றே
ஓதுமால் * எய்தினளென்தன்மடந்தையே. (௬)

ப ;—அநந்தரம், ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கு உதவின ஸ்ரீ வராஹநாயனார் திருவடிகளில் திருத்துழாயென்று எப்போதும் சொல்லும்படி இவள் பிச்சேறினாள் என்கிறாள்.

மாதர்—நாரீணாமுத்தமையாய்
மா—ஶ்லாக்யையான
மண்மடந்தைபொருட்டு — ஸ்ரீ பூமிப்பிராட்டிக்காக
ஏனம் ஆய் — (நீருக்கும் சேற்றுக்கும் இருயாத) வராஹவேஷத்தை யுடையனாய்
ஆதி—கல்பாதியாய்
அம் — (ப்ராதுர்ப்பாவ யோக்யதையாகிற) நன்மையையுடைய
காலத்து—காலத்திலே
அகல் இடம்—விஸ்தீர்ணையான ப்ருதிவியை
கீண்டவர்—(அண்டத்தினின்றும்) ஒட்டுவிடுவித்து எடுத்துக்கொண்டுஏறினவருடைய
பாதங்கள்மேல் — திருவடிகளின் மேலே
அணி—(ஸநகாதிகள் சாத்தின
பை—பசுத்த
பொன்—தர்ஶநீயமான
துழாய்என்றே—திருத்துழாயென்றே
ஓதும் — (எப்போதும்) சொல்லும்படியான
மால்—ப்ரமத்தை
எய்தினள்—அடைந்தாள்,
என்தன் மடந்தை — என் விலக்ஷணமான மடப்பத்தையுடையவள்.

ஆறு ;—(மாதர்) நிரதிஶய ஸௌந்தர்ய ஸௌஶீல்யாதி கல்யாணகுண மஹோதகதியான ஸ்ரீபூமிப்பிராட்டிக்காகப் போய்க் கல்பத்தினுடைய ஆதிகாலத்திலே அதிரமணீய திவ்ய வராஹரூபனாய்த் தன்னுடைய திவ்ய தம்ஷ்ட்ரையாலே ப்ரளயஸமயத்தில் ரஸாதலஸ்தமான பூமண்டலத்தை இடந்தெடுத்தருளினவன் பாதங்கள் மேலணி பைம்பொன் துழாயென்றே ஓதும் மாலெய்தினள் என்தன்மடந்தை என்கிறாள். (௬)

---

ஈடு ;—அவ ;—ஏழாம்பாட்டு அம்ருதமதநதஶையிலே பெரிய பிராட்டியாரைத் திருமார்பிலே வைத்தருளினவனுடைய திருவடிகளிற் சாத்தின திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

மடந்தையை வண்கமலத் திருமாதினைத் *
தடங்கொள் தார்மார்பினில் வைத்தவர் தாளின்மேல் *
வடங்கொள் பூந்தண்ணந்துழாய்மலர்க்கே இவள்
மடங்குமால் * வாணுதலீரென்மடக்கொம்பே. (எ)

**ப**;—அநந்தரம், அர்ருதமதநதைபையிலே பிராட்டியைத் திருமார்பிலே வைத்தவனுடைய திருவடிகளில் திருத்துழாய் நிமித்தமாக இவள் துவளா நின்றாள் என்கிறாள்.

மடந்தையை — (நித்யாநுபாவ்யமான) மடந்தைப்பருவத்தை யுடையளாய்
வண்—(க) "விகாஸிகமலே ஸ்திதா - விகாஸிகமலேஸ்திதா" என்கிறபடியே தர்ஸநீயமான
கமலம் — தாமரைப்பூவை இருப்பிடமாகவுடையளாய்
திரு—(க)"ஸ்ரீர்தேவீ - ஸ்ரீர்தேவீ" என்கிறபடியே) திருநாமத்தை யுடையளாய்
மாதினை --"ஸௌந்தர்யாதிபி ஸ்புரத்காந்திமதீ" என்கிறபடியே) மாதுமையாலுண்டான ஸௌந்தர்யாதிகளையுடையவளை
தடம் கொள்—பரப்பை உடைத்தாய்
தார்—(ஈஸ்வரத்வஸூசகமான) மாலையையுடைய
மார்பினில்—திருமார்பிலே
வைத்தவர்–(உ)"யயௌவக்ஷஸ்தலம் - யயௌவக்ஷஸ்தலம்" என்கிறபடியே அவளே றும்படி) வைத்தருளினவருடைய
தாளின்மேல்—திருவடிகளில் (தத்காலவர்த்திகளான தேவர்கள் சாத்தின)
வடம்—தொடையை
கொள்—உடைத்தாய்
பூ—தர்ஸநீயமாய்
தண்—குளிர்ந்த
அம்—செவ்விய
துழாய்மலர்க்கு—திருத்துழாய்ப்பூந்தாருக்கு
வாள் நுதலீர்—உஜ்ஜ்வலமான நெற்றியையுடையவர்களே !
என்—எனக்கு
மடம்—பவ்யையாய்
கொம்பு—வஞ்சிக்கொம்புபோலே தர்ஸநீயையான
இவள்—இவள்
மடங்கும்—(அவஸந்நையாய்ச்) சுருளா நின்றாள்
உங்களைப்போலே இவளையும் உஜ்ஜ்வலாவயவையாகக் காணவல்லேனே என்று கருத்து.
வடங்கொள்கை--தழைத்தலாகவுமாம்.

---

(க) வி-பு-க-கூ-கoo. (உ) வி.பு க-கூ-கoரு.

ஆறு ;—(மடந்தையை.) ஸர்வலோகேஶ்வரியாய் ஸௌந்தர்ய ஸௌகுமார்யாத்யநவதிககுணகணவிபூஷிதையாயிருந்த பெரிய பிராட்டியை, அதிவிஶாலமாய் அதிபரிமள துளஸீவிலஸிதமான திருமார்பில் வைத்தவர் தாளின்மேல் வடங்கொள்பூந் தண்ணந் துழாய்மலரை ஆசைப்பட்டுப் பெருமையாலே முடிந்தாளென்று அலற்றுகிறாள். (எ)

---

ஈடு ;—அவ ;—எட்டாம்பாட்டு, ஸ்ரீ ஜநகராஜன் திருமகளுடைய விரோதியைப் போக்கின சக்ரவர்த்தி திருமகன் திருவடிகளிற் சாத்தின திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் என்கிறாள்.

கொம்புபோல்சீதை பொருட்டிலங்கைநகர் *
அம்பெரியுய்த்தவர் தாளிணைமேலணி *
வம்பவிழ்தண்ணந்துழாய்மலர்க்கே இவள்
நம்புமால் * நானிதற்கென்செய்கேன் நங்கைமீர்! (அ)

ப ;—அநந்தரம், ஜநகராஜன் திருமகளுக்காக லங்காதிஹநம்பண்ணின சக்ரவர்த்திதிருமகன் திருவடிகளில் திருத்துழாய்க்கு விருப்பத்தையுடையளாகாநின்றாள் என்கிறாள்

கொம்புபோல்—வஞ்சிக்கொம்புபோலே அபிஜாதையாய்
சீதைபொருட்டு—(க) "ஸீதே[illegible] கேஷத்ரேஹலமுகக்ஷதே" என்கிறபடியே அயோநிஜையான ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்காக
இலங்கைநகர்—லங்காநகரத்திலே
அம்பு எரி—ஶராக்நியை
உய்த்தவர்—ப்ரவேஶிப்பித்தவருடைய
தாளிணைமேல்—திருவடிகளின்மேலே
அணி (உ) "ஸர்வாநுநாராயணோ தேவ: - பவாந்நாராயணோதேவ:" என்று ஸ்துதித்த ப்ரஹ்மாதிகள் சாத்தின
வம்பு அவிழ்—அபிநவபரிமளவிகாஸியாய்
தண்—குளிர்ந்து
அம்—அழகிய
துழாய்—திருத்துழாயினுடைய
மலர்க்கு—பூந்தாருக்கு
இவள்—இவள்
நம்பும்—விருப்பத்தையுடையளாகாநின்றாள்
நங்கைமீர்—பூர்ணைகளானவர்களே!
இதற்கு—இந்த அதீதவிஷயாபிநிவேஶத்துக்கு
நான்—நான்
என்செய்கேன்-எத்தைச் செய்வேன்?.

(க) ரா-ஸு-[illegible] கக கக. (உ) ரா யு [illegible]-கச.

அவன்தான் இன்னமும் அவதரித்து உபகரிக்குமதொழிய என்னுற் செய்யலாவதில்லையென்று கருத்து. (அ)

ஆறு ;—(கொம்பு.) அவையெல்லாம் ஆசைப்படலாம் ; திவ்யாத்ம குணங்களாலும் திவ்ய ரூபகுணங்களாலும் பரமபுருஷ திவ்ய மஹிஷியாய் ஸர்வ மஹேஶ்வரியான பெரியபிராட்டியிலும் உத்க்ருஷ்டதமையாயிருந்த ஸ்ரீ ஜநகசக்ரவர்த்தி திருமகளுக்காக இலங்கைநகர் அம்பெரியுய்த்த தயரதற்குமகன் திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படுவாருளரோ? இவள் திருத்துழாயை ஆசைப்படாநின்றாள் ; நான் இதற்கு என்செய்கேன் நங்கைமீர் ? என்று கூப்பிடுகிறாள். (அ)

---

ஈடு ;—அவ ;—ஒன்பதாம்பாட்டு. "அவனுடைய ஆயுதாதிகளைக் காணவேணும்" என்று சொல்லப்புக்கு முடியச் சொல்லமாட்டாதே நோவுபடாநின்றாள் என்கிறாள்.

நங்கைமீர்நீருமோர் பெண்பெற்றுநல்கினீர் *
எங்ஙனேசொல்லுகேன் யான்பெற்றவேழையை *
சங்கென்னும்சக்கரமென்னும் துழாயென்னும் *
இங்ஙனேசொல்லுமிராப்பக லென்செய்கேன் ? (கூ)

ப ;—அநந்தரம், அவனுடைய அஸாதாரணசிஹ்நங்களை எப்போதும் சொல்லாநின்றாள் என்கிறாள்.

நங்கைமீர்—பரிபூர்ணைகளான
நீரும்—நீங்களும்
ஓர் பெண் – ஒரு பெண்ணை
பெற்று—பெற்று
நல்கினீர் — ஸ்நேஹித்துவளர்த்திகோள் ;
யான்—நான்
பெற்ற—பெற்ற
ஏழையை—சபலையான இவளை
எங்ஙனம்—எப்படி
சொல்லுகேன்—சொல்லுவேன் ? (ஆனமட்டும்சொல்லில்)
சங்கு என்னும்—(அவனுக்கு அஸாதாரணசிஹ்நமான) சங்கென்பது
சக்கரமென்னும்—சக்கரமென்பது
துழாயென்னும்—(அவன் திருவடிகளில்) திருத்துழாயென்பதாய்க்கொண்டு
இராப்பகல்—அஹோராத்ர விபாகமில்லாதபடி
இங்ஙனே—இப்படி தனித்தனியே
சொல்லும் — சொல்லாநின்றாள் ;
என்செய்கேன்—இதற்கு ஏது செய்வேன் ?

ஸ்வரூபத்தைப்பார்த்து இவள் வாய்மூடும்படி பண்ணவோ? தாத்காலிக மான அஸாதாரண சிஹ்நத்தைச் சொல்லும்படி பலத்தையுண்டாக்கவோ? அவைதன்னை இப்போது ஸந்நிஹிதமாக்கவோ? ஒன்றும் செய்யமுடியாது என்று கருத்து. நீரும் ஓர்பெண்பெற்று நல்கினீரென்ற விடம் - இவ்வாழ்வா ருடைய ப்ரேமதசைக்கு அல்லாத ஆழ்வார்களுடைய ப்ரேமதசை ஒவ்வா தென்கிற பாவத்தை ஸூசிப்பிக்கிறது. (க)

ஆறு;—(நங்கைமீர்.) நங்கைமீர்! உங்களுடைய பெண்பிள்ளை களும் எம்பெருமானை ஆசைப்பட்டுப் பெருமையாலே அத்யந்தம் அவஸந்நைகளானவர்கள் இப்பாடுபட்டாரு முளரோ? இவள்பட் டது என்தான்? என்னில்,-எம்பெருமான் திருவாழியும் திருச்சங்க மும் ஏந்தியிருந்தருளும் அவ்வழகைக் காணவேணுமென்றும், மத் ஸ்ய கூர்ம வராஹாத்ய ஸங்க்யேய திவ்யாவதார விஶிஷ்டனும் திவ்யக்ரீடா விஶிஷ்டனும் ஸ்ரீவைகுண்டநாதனுமா யிருந்தவனு டைய திருவடிகளில் திருத்துழாயைத் தத்தத்தசையிலே பெற வேணுமென்று சொல்லப்புக்கு முடியச் சொல்லமாட்டாதே, சங் கென்னும், சக்கரமென்னும், துழாயென்னும்; இங்ஙனே இராப் பகல் கூப்பிடாநிற்கும்; என்செய்கேன்? என்கிறாள். (க)

---

ஈடு;— அவ;—பத்தாம்பாட்டு. உன்மகள் நீ யிட்ட வழக்கன் றோ? அவளுக்கு ஹிதம் சொல்லி மீட்கத் தட்டு என் உனக்கு? என்றவர்களைக்குறித்து நான் சொல்லிற்றுக் கேளாதே அவனையே ஆசைப்பட்டு மிகவும் அவஸந்நையாகா நின்றாள் என்கிறாள்.

என்செய்கேனென்னுடைப்பேதை என்கோமளம் *
என்சொல்லுமென்வசமுமல்லள் நங்கைமீர் *
மின்செய்பூண்மார்பினன் கண்ணன்கழல்துழாய் *
பொன்செய்பூண்மென் முலைக்கென்று மெலியுமே. (கம)

ப;— அநந்தரம், எனக்குவிதேயையன்றியே க்ருஷ்ணனுடைய ஆபரண ஶோபையிலே அகப்பட்டு அவனுடைய திருவடிகளில் திருத்துழாய் தன் முலைக்கு அலங்காரமாகவேணுமென்று உடம்பு இளையாநின்றாள் என்கிறாள்.

நங்கைமீர்—நங்கைமீர்!
என்னுடை—என்னுடைய
பேதை — (ஹிதம்கேட்கும்பருவமல்லாத) பேதையாய்
என்கோமளம்—(ஹிதஞ்சொல்லப் பொறுக்கமாட்டாத) மார்த்தவத்தை யுடைய இவள்
என்சொல்லு:—என்சொல்லிலும்

என்வசமும்—என்நினைவிலும்
அல்லள்—வருகிறிலள் ;
என்செய்கேன் — (நான் இதற்குச் செய்வதுண்டோ) ? (இவள் அவஸ்த்தை இருந்தபடி !
மின்செய்—ஒளியையுடைத்தான
பூண்—கௌஸ்துபாத்யாபரணஶோபி [தமான
மார்பினன்—மார்பையுடைய
கண்ணன்—க்ருஷ்ணன்
கழல்—திருவடிகளில்
துழாய்—திருத்துழாயை
பொன்—(விரஹவைவர்ண்யமாகிற) பொன்னமையாலே
செய்—செய்யப்பட்ட
பூண்—ஆபரணஶோபையையுடைய
மெல்—(விஶ்லேஷாஸஹமாய்த்) துவண்ட
முலைக்கு—முலைக்கு (அலங்காரமாக வேணும்)
என்று—என்று ஆசைப்பட்டு
மெலியும்—(அது கிடையாமலே) க்ருஶரீரையாகாநின்றாள். (கo)

ஆறு ;—(என்செய்கேன்.) விவேகரஹிதையாய் விரஹவ்யஸநாஸஹிஷ்ணுவாயிருந்த என்னுடைய பெண்பிள்ளை என்சொல்லும் என்வசமுமல்லள் ; நங்கைமீர் ! நிரதிஶயௌஜ்ஜ்வல்ய மௌக்திகஹாராதி திவ்யபூஷண பூஷித வக்ஷஸ்தலனாயிருந்த வண்டுவரைப் பெருமாள் திருவடிகளில் திருத்துழாய், தத்ஸம்ஶ்லேஷார்த்தம் மங்களமான பூஷணங்களாலே அலங்க்ருதமான தன்னுடைய மென்முலைக்கென்று மெலியாநிற்கும் ; என்செய்கேன் ? என்று அலற்றுகிறாள். (௰)

---

ஈடு ;—அவ ;—பதினோராம்பாட்டு. நிகமத்தில் - இத்திருவாய்மொழி அப்யஸிக்கவல்லார் நித்யஸூரிகளுக்கு ஸத்ருஶராவர் என்கிறார்.

மெலியும்நோய்தீர்க்கும் நம்கண்ணன்கழல்கள்மேல் *
மலிபுகழ்வண்குருகூர்ச் சடகோபன்சொல் *
ஒலிபுகழாயிரத்திப்பத்தும் வல்லவர் *
மலிபுகழ்வானவர்க்காவர் நற்கோவையே. (கக)

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

ப ;—அநந்தரம், இத்திருவாய்மொழி கற்றார் நித்யஸூரிகளோடு ஒரு கோவையாவர்கள் என்று பலத்தை அருளிச்செய்கிறார்,

| | |
|---|---|
| மெலியும்—இப்படி ஸ்திதிலராகைக்கு அடியான | ஒலி—கொண்டாடப்பட்ட |
| நோய்—விரஹவ்யதையை | புகழ்-குணபௌஷ்கல்யத்தையுடைத்தான |
| தீர்க்கும்—போக்கும் | ஆயிரத்து—ஆயிரந்திருவாய்மொழியிலும் |
| ம்—ஆஸ்ரிதஸுலபனை | இப்பத்தும்—இப்பத்தையும் |
| ண்ணன்—க்ருஷ்ணன் | வல்லவர்—(பாவயுக்தமாக அப்யஸிக்க) வல்லவர்கள் |
| மூல்கள்மேல்-திருவடிகள் விஷயமாக | மலி—அபிவ்ருத்தமான |
| லி—(விப்ரக்ருஷ்டாநுபவத்திலும் அபிநிவிஷ்டரென்னும்படி) வளர்ந்த | புகழ்—பகவதநுபவப்ரதையையுடைய |
| புகழ்—புகழையுடையராய் | வானவர்க்கு—ஸூரிகளுக்கு |
| வண்—ஸ்லாக்யமான | நல்—ஸ்லாக்யராய்க்கொண்டு |
| குருகூர்—திருநகரிக்கு நிர்வாஹகரான | கோவை ஆவர்—ஒருகோவையாவர்கள் |
| சடகோபன்—ஆழ்வார் | இது—கலிவிருத்தம் (கக) |
| சொல்—அருளிச்செய்த | |

ஆறு ;—(மெலியும்.) இப்படி தன்னோடு ஸம்ஸ்லேஷிக்க ஆசைப்பட்டுப் பெருமையாலே அத்யந்தம் அவஸந்நனை என்னுடைய அவஸாதமெல்லாம் போம்படி என்னோடே ஸம்ஸ்லேஷித்தருளின வண்துவரைப்பெருமாள் திருவடிகளிலே, தச்சேஷத்தைகரஸித்வ மஹாயஸஸ்ஸையுடையனை வண்குருகூர்ச்சடகோபன் சொல் ஒலிபுகழாயிரத்து இப்பத்தும் வல்லவர் அயர்வறும் அமரர்களுடைய திவ்யபரிஷத்துக்கு ஒருபூஷணமாவர் என்கிறார். (கக)

நாலாம்பத்து இரண்டாந்திருவாய்மொழி

முற்றிற்று.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# நான்காம் பத்து

## மூன்றாந்திருவாய்மொழி—கோவைவாயாள் ப்ரவேசம்.

ஆறு ;—(கோவைவாயாள்.) இப்படி அவஸந்நரான தம்முடைய அவஸாதமெல்லாம் போம்படி தம்மோடே கலந்தருளின எம்பெருமானுடைய ப்ரணயித்வகுணாநுபவ ஜநித ப்ரீதியாலே அந்த ப்ரணயித்வத்தைப் பேசுகிறார். *

ப ;—மூன்றாந்திருவாய்மொழியில் - இவருடைய ஆர்த்தி தீரும்படி ஸம்ஸ்லேஷித்த ஸர்வேஸ்வரன் இவருடைய அபிநிவேஸஹேதுவான அநுராக விஸேஷத்தைக்கண்டு அவனும் இவர்பக்கலிலே அத்யந்தாபிநிவிஷ்டனாம்படி அநுரக்தனாம்படியை அநுஸந்தித்த இவர், அவனுடைய ப்ராப்தி ப்ரதிபந்தக ஸமஸ்தவிரோதி நிவர்த்தகத்வத்தையும், ரக்ஷகத்வப்ரயுக்த ஸம்பந்தத்தையும், ஸர்வாத்மபாவாதியால் வந்த நாராயணத்வத்தையும், அநுகூலஸத்ரு நிரஸந ஸாமர்த்த்யத்தையும், ஸௌஸீல்யாதி குணயோகத்தையும், ரக்ஷணோபகாரணத்தையையும், அநந்யார்ஹமாக்கி அடிமைகொள்ளும் ஸ்வபாவத்தையும், ஸர்வவ்யாபகத்வத்தையும், பாரமார்த்திகபாதவௌஜ்ஜ்வல்யத்தையும், அபரிச்சேத்ய மாஹாத்ம்யத்தையும் அநுபவித்து, ஏவம்விதனான ஸர்வேஸ்வரன் தம்முடைய ஆத்மாத்மீயங்களெல்லாம் ஸ்ரக்வஸ்த்ராபரணங்காராதிகளோபாதி தனக்கு அதிஸயித போக்யமாம்படி விரும்பின ப்ரணயித்வத்தை அருளிச்செய்து ஸந்துஷ்டராகிறார்.

ஈடு ;—எல்லாத்தேசத்திலும் எல்லாக்காலத்திலுமுண்டான அவன்படிகளெல்லாம் இப்போதே பெற்று அநுபவிக்கவேணுமென்று விடாய்ப்பாரொருவரைப் பெறுகையாலே, இவர் ஸத்தையே தனக்கு எல்லாமாம்படியிருக்கிற தன் ப்ரணயித்வ குணத்தைக் காட்டிக்கொடுக்கக் கண்டு, இவரும் எல்லாம்பெற்றாராய் அநுபவிக்கிறார்.

ஸர்வேஸ்வரனுடைய பாலனை பேழலகு-இத்திருவாய்மொழி. இது தனக்கு மூன்றுபடியாக நிர்வஹிப்பர்கள் நம்முதலிகள் ; எம்பார், “ அம்புலியம்மானைப் பிடித்துத்தரவேணும், என்று அழுதப்ராஜைக்குத் தேங்காயைக்கொடுத்து அழுகையை ஆற்றுவாரைப் போலே, வேறொரு குணவிஷ்காரத்தைப்பண்ணி அநுபவிப்பிக்க அநுபவிக்கிறார் ” என்று அருளிச்செய்வர். திருமலைநம்பி, ‘ ஒரு

வன் ஒன்றை அபேக்ஷித்தால், அவனும் அதுசெய்வானாகத் தலை துலுக்கினால், பெற்றானைப் பின்பு பின்னிலிழவு தோன்றும்படி பன்று இருப்பது; ஆகையாலே, அவனும் 'அப்படி செய்கிறோம்' என்னக் கீழிலிழவை மறந்து எல்லாம் பெற்றாராய் அநுபவிக்கிறார்'' என்று;

ஸ்ரீகௌஸல்யையார், 'பெருமாள் வநத்துக்கு எழுந்தருளுகிறபோது "ஏகபுத்ரையான நான் உம்மைப் பிரிந்திருக்கமாட்டேன்; கூடப்போமித்தனை" என்ன, "ஆச்சீ, நீர் சொல்லுகிற இவை தர்மஹாநிகிடீர்" என்று முகத்தைப்பார்த்து ஒருவார்த்தை அருளிச்செய்ய, இழவை மறந்து மங்களாஶாஸநம்பண்ணி மீண்டாளிறே; க்ருஷ்ணன் (க) "மாஶுச:" என்று ஒருவார்த்தை அருளிச்செய்ய, அர்ஜுநன் (உ) "ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ:" என்று தரித்தானிறே.

பட்டர், "காலத்ரயத்திலுள்ளத்தையும் இப்போதே பெறவிடாய்த்த இவர்க்கு அப்படியே அநுபவிக்கலாம்படி, காலசக்ரத்தை வேணுமென்று தானாகையாலே காலோபாதியைக் கழித்து, வர்த்தமாநகாலத்திற்போலே அநுபவயோக்யமாம்படி காலத்தை ஒருபோகியாக்கிக்கொடுக்க அநுபவிக்கிறார்" என்று அருளிச்செய்வர்.

---

ஈடு;—முதற்பாட்டில் - நப்பின்னைப்பிராட்டி, ஸ்ரீ ஜநகராஜன் திருமகள் தொடக்கமானார் உனக்கு ப்ரணயிநிகளாயிருக்க, நீ அவர்கள்பக்கலிலே யிருக்குமிருப்பை என்பக்கலிலே யிருக்கும்படி என் ஸத்தையே உனக்கு எல்லாமாய்விட்டது என்கிறார். அன்றிக்கே, ஆஶ்ரிதவிரோதிகளை நிரஸிக்கிற விடங்களில் அவ்வவஸமயங்களில் வந்து முகங்காட்டி அடிமைசெய்யப்பெற்றிலேன் நான்; இங்ஙனே யிருக்கவும் என்ஹ்ருதயத்தையே உனக்கு போக்யமாகக் கொள்ளுவதே! என்கிறாராதல்.

கோவைவாயாள்பொருட்டேற்றின் னெருத்தமிறுத்தாய் * மதிளிலங்கைக்
கோவைவீயச்சிலைகுனித்தாய் குலநல்யானைமருப்பொசித்தாய் *
பூவைவீயாநீர்தூவிப் போதால்வணங்கேனேலும் * நின்
பூவைவீயாம்மேனிக்குப் பூசுஞ்சாந்தென்னெஞ்சமே. (க)

(க) கீதை - கஅ. (உ) கீதை - கஅ.

ப ;—முதற்பாட்டில், ப்ராப்திவிரோதிகளை யழிக்கும் ஸ்வபாவனான ஸர்வேஸ்வரனை நோக்கி, 'என்நெஞ்சை உனக்கு அங்கராகமாகக் கொண்டாய்' என்கிறார்.

கோவை—கோவைப்பழம்போலே சிவந்த
வாயாள்பொருட்டு—அதரத்தையுடைய நப்பின்னைப் பிராட்டிக்காக
ஏற்றின்—எருதுகளினுடைய
எருத்தம்—பிடரை
இறுத்தாய்—முறித்தவனாய்,
மதிள்—மதிளையுடைய
இலங்கை—லங்கைக்கு
கோவை—நிர்வாஹகனான ராவணனை
வீய—முடியும்படியாக
சிலை—வில்லை
குனித்தாய்—வளைத்தவனாய்,
குலம்—ஜாதிவைலக்ஷண்யத்தையும்
நல்—லக்ஷண வைலக்ஷண்யத்தையுமுடைய
யானை—குவலயாபீடத்தினுடைய
மருப்பு—கொம்பை
ஒசித்தாய்—(அநாயாஸேந) முறித்தவனே!
(இப்படி நப்பின்னைக்கும் ஜநகராஜன் திருமகளுக்கும் மதுரையில் பெண்பிள்ளைகளுக்கும் ப்ராப்திவிரோதியைப் போக்கின உன்னை),
பூவை—புஷ்பத்தை
வீயா—அகலாத
நீர்—ஜலத்தை
தூவி—(ப்ரேமத்தாலே அக்ரமமாகப்) பணிமாறி
போது—உக்தகாலங்களிலே
வணங்கேனேலும்—வணங்கிற்றிலேனேயாகிலும்
நின்—உன்னுடைய
பூவை வீயாம்—பூவைப்பூநிறத்தையுடைய
மேனிக்கு—திருமேனிக்கு
பூசும்—சாத்தத்தகுதியான
சாந்து—அங்கராகம்
என்நெஞ்சமே—என்நெஞ்சாவதே!

ஆஸ்ரயதோஷம்பாராதே அநுராகலேஸமே பற்றாசாக அங்கராகமாக்கினாய்; அதுக்கு அடி - அவஸ்தா ஸப்தகவிகாரத்தையும் கழித்து, தயோந்த்ரியாகமான தீமனத்தையும் கெடுத்து, ப்ரவேஸவிரோதியான தூர்மானத்தையும் அழிக்குமவனாதலால் என்று கருத்து. (க)

ஆறு ;—அதிபலவ்ருஷரூப அஸுரஸப்தக ஸபுத்ரஜநபாந்தவதஸாஸ்ய குவலயாபீட கம்ஸாத்யாஸ்ரிதவிரோதி நிரஸநஜநிதமான உன்னுடைய ப்ரமாபநோதநார்த்தமான ஸிஸிரோபசாரங்களைத் தத்தத்காலங்களிலே உன்திறத்தில் நான் செய்யாதிருக்கச்செய்தேயும், என்னுடைய மநஸ்ஸானது ஸீதளமாய் நிரதிஸய ஸுகந்தமாய் புஷ்பஹாஸ ஸுகுமாரமான உன்னுடைய திருவுடம்புக்கு ஸத்ருஸ

மாய் ஸர்வஸ்ரமாபநோதநமான திவ்யாங்கராகமாவதே! இது என்ன ப்ரணயித்வம்? என்கிறார். (௧)

---

ஈடு ;—இரண்டாம்பாட்டு. என்னுடைய கரண கார்யமான ஸ்ம்ருத்யாதிகளே பரிபூர்ணனானவனுக்கு போகோபகரணங்களெல்லாமாயிற்று என்கிறார்.

பூசும்சாந்தென்னெஞ்சமே புனையுங்கண்ணியெனதுடைய *
வாசகம்செய்மாலையே வான்பட்டாடையுமஃதே *
தேசமானவணிகலனு மென்கைகூப்புச்செய்கையே *
ஈசன்ஞாலமுண்டுமிழ்ந்த எந்தையேகமூர்த்திக்கே. (உ)

ப ;—அநந்தரம், 'ஸர்வநியந்தாவாய் ஸர்வரக்ஷகனான ஸ்வாமிக்கு என் கரணத்ரயமும் போக்யமாகாநின்றது' என்கிறார்.

ஈசன்—நிருபாதிகநியந்தாவாய்
ஞாலம் உண்டு உமிழ்ந்த—(ப்ரளயாபத்திலே) உண்பது உமிழ்வதாகையாலே ஸமஸ்தபதார்த்தத்துக்கும் ஸர்வ ப்ரகார ரக்ஷகனாய்
எந்தை—(இவ்வபதாநத்தாலே என்னையடிமைகொண்ட) அஸ்மத் ஸ்வாமியாய்
ஏகம்—(நிரதிசயபோக்யமாகையாலே) அத்விதீயமான
மூர்த்திக்கு—விக்ரஹத்தையுடையவனானவனுக்கு
பூசும்—(கூனியிட்ட சாந்துபோலே) தகுதியான
சாந்து—சாத்துப்படி
என்நெஞ்சம்—என்நெஞ்சமாகாநின்றது;
புனையும்—(ஸ்ரீமாலாகாரர் மாலைபோலே உகந்து) சாத்தும்
கண்ணி—திருமாலை
எனதுடைய—என்னுடைய
வாசகம்—வாக்வ்ருத்தியான பதத்தாலே
செய்—தொடுக்கப்பட்ட
மாலை — மாலையாயிராநின்றது ; (௧) "பூம்பட்டாம்" என்கிறபடியே திருவநந்தாழ்வான் ஸமர்ப்பித்த தென்னலாம்படி)
வான்—சீரியதான
பட்டாடையும்—பரிவட்டமும்
அஃதே—அந்த வாக்வ்ருத்தியே :
தேசமான—தேஜஸ்கரமாம்படி
அணி—அணியப்பட்ட
கலனும்—ஆபரணமும்
என்—என்னுடைய
கைகூப்புச்செய்கையே—அஞ்சலிபந்தமே.

---

(௧) க - திருவ - இஉ.

வாசகம் பட்டாடையாவது - ஒப்பனைக்குப் பௌஷ்கல்யகரமானவை. அஞ்ஜலி ஆபரணமாகையாவது - இவர் தலையிலேவைத்த அஞ்ஜலி அவன் திருமுடியில் அபிஷேகாத்யாபரணங்களோபாதி அவனுக்கு ஔஜ்ஜ்வல்யாவஹமாகை.

ஆறு ;—(பூசும்சாந்து.) நிகிலபுவந நிர்மாணைக்நிர்வாஹக ஸர்வேஶ்வர ஸ்வபாவனாய், ஸதைகரூபனாய்க்கொண்டு ஸ்ரீவைகுண்டநிலயனாயிருந்த எம்பெருமானுக்கு, ஸ்வவிஷயமாக மத்க்ருதமான ஸ்ம்ருதிகீர்த்தநாஞ்ஜலி ப்ரப்ருதி ஏகைக வ்ருத்தியே திவ்யகந்தாநுலேபந திவ்யமால்யாம்பர நிரதிஶயதீப்தியுக்த திவ்யபூஷணாதி ஸர்வபோகோபகரணங்களுமாயின; ஒருவனுடைய வ்யாமோஹம இருக்கும்படியே! என்கிறார். (உ)

---

ஈடு ;—மூன்றாம்பாட்டு. 'இத்தலையை உனக்காக்கி அத்தாலே க்ருதக்ருத்யனாயிருக்கிறாயே' என்கிறார்.

ஏகமூர்த்தி யிருமூர்த்தி மூன்றுமூர்த்தி பலமூர்த்தி
யாகி * ஐந்துபூதமா யிரண்டுசுடரா யருவாகி *
நாகமேறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனே * உன்
ஆகமுற்றும் அகத்தடக்கி ஆவியல்லல் மாய்த்ததே. (௩)

ப ;—அநந்தரம், ஸர்வாத்மபாவாதியால் வந்த ஸம்பந்தத்தையுடைய உன் வடிவழகை இப்படியநுபவித்து என் ஆத்மாவானது கீழ் ப்ராக்ருததுக்கம் தீரப்பெற்றதே என்கிறார்.

ஏகமூர்த்தி—(ஸூக்ஷ்மசிதசித் விஶிஷ்டமாய் (க) "ஸதேவ- ஏகமேவ" என்கிறபடியே காரணரூபத்தையுடையனாய் இருமூர்த்தி — (அந்த அவ்யக்தகார்யமான) மஹதஹங்காரங்களை வடிவாகவுடையனாய் மூன்றுமூர்த்தி—(உ) "ஸாத்விகோ ராஜஸஶ்சைவ தாமஸஶ்ச த்ரிதா மஹாந்" என்றும், "வைகாரி கஸ்தைஜஸஶ்ச பூதாதிஶ்சைவ தாமஸ:" என்றும் அந்த மஹதஹங்காரங்களினுடைய த்ரைவித்யஹேதுவான) ஸத்த்வ ரஜஸ் தமோரூபகுணத்ரயவைஷம்யங்களை ப்ரகாரமாகவுடையனாய் பலமூர்த்தியாகி—(வைகாரிககார்யமான) ஏகாதஶேந்த்ரியங்களை ப்ரகாரமாகவுடையனாய்

---

(க) சாந்தோ - உ.                (உ) வி - பு - க - உ - ௩௪.

சொல்லப்படுகிற அவனை ஈஶ்வரனாகிறான்' என்று, அநுமாநத்தாலும் ஸமாக்யையாலுமாக பகவத்வ்யதிரிக்தனொருவனுக்கு உத்கர்ஷத்தை ஸாதித்தார்கள்; அவர்களைப் பார்த்து :—'நீங்கள் சொல்லுகிற அநுமாநம் ஶ்ருதியின்முன்பு நேர்நில்லாது; லிங்கத்தின் முன்பு ஸமாக்யை நேர்நில்லாது' என்று ஶ்ருதி லிங்கங்களாலே அநுமாநத்தையும் ஸமாக்யையையும் தள்ளி பகவத் பரத்வத்தை ஸாதிக்கிறார்

அது செய்கிற வழிதான் என்? என்னில் - (௧) [யவேதாதௌ யத்வேதாந்தே] - வேதாதியிலும் வேதாந்தத்திலும் சொல்லப்பட்ட ஸ்வரமாகிறது - ப்ரணவம்; லோகத்தில் வாசகஜாதமடைய அதிலே லீநமாயிருக்கிறது; அதுதான் ஸ்வப்ரக்ருதியான அகாரத்திலே லீநமாயிருக்கிறது; அதுக்கு வாச்யதயா பரனாயிருக்கிறான் யாவனொருவன், அவன் மஹேஶ்வரன் என்கிற ஶ்ருதியாலும்; 'ஈஶன், ஈஶாநன்' என்கிற ஸமாக்யைகளால் தோற்றுகிறவர்களும் தலையறுப்புண்பாரும் தலையறுத்துப் பாதகியாய் நிற்பாருமாயிரா நின்றார்கள்; இவன் அவர்களுக்கு து:க்கநிவர்த்தகனாயிராநின்றான்; ஆனால் அவர்களை 'பரன்' என்னவோ? இவனை 'பரன்' என்னவோ? என்று, ஶ்ருதியாலும் லிங்கத்தாலுமாக அநுமாநத்தையும் ஸமாக்யையையும் தள்ளி பகவத் பரத்வத்தை ஸ்தாபிக்கிறார். ஆக, இப்படிகளாலே ஸகலோபநிஷத்ப்ரஸித்தனான நாராயணனே பரதத்த்வம் என்று நிஷ்கர்ஷித்து காலாத்யயாபதிஷ்டமாகிற தூஷணத்தாலே அவர்களை நிராகரிக்கிறார்.

பேசநின்றசிவனுக்கும் பிரமன்தனக்கும்பிறர்க்கும்
நாயகனவனே * கபாலநன்மோகத்துக்கண்டுகொண்மின் *
தேசமாமதிள்சூழ்ந்தழகாய திருக்குருகூரதனுள் *
ஈசன்பாலோரவம்பறைதலென்னாவதிலிங்கியர்க்கே. (௪)

**ப**—அநந்தரம், ஈஶ்வரதயா ப்ரஸித்தமான தேவதாந்தரங்களுக்கும் ஈஶ்வரனாக நிர்த்தோஷப்ரமாணைகஸமதிகம்யனான ஸர்வேஶ்வரன் விஷயத்தில் அநீஶ்வரத்வம் சொல்லுகிற ஆநுமாநிகேஶ்வரவாதிகளான நையாயிகாதிகளுக்கு என்ன ப்ரயோஜநமுண்டு? என்கிறார்.

(௧) தை-நாரா-௧௦

பேசநின்ற — (ப்ரமாணாபாஸங்களாலும் ஸமாக்யைகளாலும் ஈஸ்வரத்வஸங்கைபண்ணச்) சொல்லப்பட்ட

சிவனுக்கும் — ருத்ரனுக்கும்

பிரமன் தனக்கும் — (அவனுக்கும் உத்பாதகனாய் ஸ்வஸ்ருஜ்யமானவிஸ்தீர்ண விபூதியுக்தனான) ப்ரஹ்மாதனக்கும்

பிறர்க்கும் — (இவர்களுக்கும் ஏவிற்றுச்செய்யும்) அல்லாத தேவாதிகளுக்கும்

நாயகன் — (தத்ஸ்வரூபவிபூதிநிர்வாஹகனாய்க்கொண்டு) நாயகனானவன்

அவனே — (நிர்த்தோஷ ப்ரமாணவேதாந்த ஸித்தனான) ஸர்வேஸ்வரனே; (இவ்வர்த்தத்தை;

கபாலம் — (ப்ரஹ்மாவினுடைய ஶிரஸ்ஸையறுத்துப் பாதகியான ருத்ரன் கையில் பிக்ஷார்த்தமான) அந்தஶிர:கபாலத்தை

நல் — (ஸஹஸ்ரதாவாக ஸ்புடிதமாம்படி) நன்றாக

மோக்கத்து — போக்கின (அபதாநத்தையெழுதுகிற பஞ்சமவேதமான) மஹாபாரதத்திலே

கண்டுகொண்மின் — அபரோக்ஷித்துக் கண்டுகொள்ளுங்கோள்; (இப்படி யிருக்க)

தேசம் — தேஜோமயமாய்

மா — அத்யுந்நதமான

மதிள் — மதிளாலே

சூழ்ந்து — சூழப்பட்டு

அழகாய — அத்தாலே அழகையுடைத்தான

திருக்குருகூரதனுள் — திருநகரிக்குள்ளே

ஈசன்பால் — அந்தக் கபாலவிமோசகத்வம் தோற்ற எழுந்தருளியிருக்கிற) நிருபாதிக ஸர்வேஸ்வரன் விஷயத்திலே

ஓர் அவம் — அநீஸ்வரத்வாபக்ருஷ்டோக்திகளை

பறைதல் — பண்ணுகிற இத்தால்

இலிங்கியர்க்கு — லிங்கப்ரமாணவாதிகளான ஆநுமாநிகர்க்கு

என்னாவது — என்னலாபமுண்டு

ப்ரபல ப்ரமாணபாதிதமாகையாலே அநுமாநத்தால் ஸ்வாபிமதேஸ்வர ஸித்தியில்லையென்று கருத்து. (௪)

ஆறு; — (பேசநின்ற) ப்ரஹ்மருத்ரர்களுடைய ஸர்வேஸ்வரத்வம் அநுமாநஸித்தமிறே யென்னில்; — அந்த அநுமாநம், (௧) "தத்ர நாராயணஶ்ஶ்ரீமாந் மயா பிக்ஷாம் ப்ரயாசித: । ததஸ்தேந ஸ்வகம் பார்ஶ்வம் நகாக்ரேண விதாரிதம் ॥ மஹதீ ஸ்ரவதீ தாரா தஸ்ய ரக்தஸ்ய நிஸ்ஸ்ருதா । [illegible] வொ

(௧) மாத்ஸ்யபுராணம்

[illegible] - தத்ரநாராயணஶ்ஶ்ரீமாந் மயாபிக்ஷாம்ப்ரயாசித: । ததஸ்தேநஸ்வகபார்ஶ்வம் நகாக்ரேண விதாரிதம் । மஹதீஸ்ரவதீதாரா தஸ்யரக்தஸ்ய நிஸ்ஸ்ருதா । நஸம்பூர்ணம்கபாலந்து கோரமத்புததர்ஶநம் । திவ்யம்வர்ஷஸஹஸ்ரந்து ஸாதாராத்ரப்ரவாஹிதா । ததோஹம்ஸமநுப்ராப்த அவிமுக்தம் மஹாஶயம் । அவஸ்திதஸ்ஸ்வகேஸ்தாநேஶாபஸ்சவிகதோமம । விஷ்ணுப்ரஸாதாத்ஸுஶ்ரோணி கபாலம்தத்ஸஹஸ்ரதா । ஸ்புடிதம் பஹுதாயாதம் ஸ்வப்நலப்தம்தநம்யதா” (க) “[illegible] - ததஸ்ஸஶங்க்ரோதேவஸ்த்வந்த கைராகுலீக்ருத: । ஜகாம ஶரணம்தேவம் வாஸுதேவமஜம்விபும் । ததஸ்ஸபகவாந்விஷ்ணுஸ் ஸ்ருஷ்டவாந்ஶுஷ்கரேவதீம் । யாபபௌஸகலம்தேஷா மந்தகாநாமஸ்ருக்க்ஷணாத்” (உ) “[illegible]-ப்ரஹ்மணஹம்புராஸ்ருஷ்ட:” இத்யாதிஶாஸ்த்ர பாதிதமாகையாலே, உங்களால் ஈஶ்வரத்வேந சொல்லப்படுகிற ப்ரஹ்மருத்ரர்களுக்கும் நாயகன் அந்தநாராயணனே என்கிறார். (ச)

---

ஈடு ;—அவ ;—அஞ்சாம் பாட்டு. லிங்கபுராணம் தொடக்கமான குத்ருஷ்டி ஸ்ம்ருதிகளையும் பாஹ்யஸ்ம்ருதிகளையும் ப்ரமாணமாகக்கொண்டு வந்தவர்களை நிஷேதிக்கிறார்.

இலிங்கத்திட்டபுராணத்தீரும் சமணரும்சாக்கியரும் *
வலிந்துவாதுசெய்வீர்களும் மற்றுநுந்தெய்வமுமாகிநின்றான்*
மலிந்துசெந்நெல்கவரிவீசும் திருக்குருகூரதனுள் *
பொலிந்துநின்றபிரான்கண்டீரொன்றும்பொய்யில்லைபோற்றுமினே.

---

(க) (உ)

ப.—அநந்தரம், பாஹ்யகுத்ருஷ்டிகளை நிரஸித்து, திருநகரியில் நிற்கிற ஸர்வேஶ்வரனே ஸர்வஸ்மாத்பரன் என்கிறார்.

இலிங்கத்து இட்ட—லிங்கார்ச்சநத்தை உத்தேஶ்யமாக ப்ரதிபாதிக்கிற
புராணத் தீரும்—தாமஸபுராணநிஷ்டராகையாலே குத்ருஷ்டிகளான நீங்களும்
சமணரும் — (பாஹ்ய ஸ்ம்ருதிநிஷ்டரான) அமணரும்
சாக்கியரும்—பௌத்தரும்
வலிந்து—ஶுஷ்கதர்க்கங்களாலே மேலிட்டு
வாதுசெய்வீர்களும் — வாதஞ்சொல்லுகிற வைசேஷிகாதிகளானநீங்களும்
மற்றும்—வேறு
நும்—உங்களுக்கு உத்தேஶ்யமாக ப்ரதிபத்திபண்ணியிருக்கிற
தெய்வமும்—தத்தத் தேவதாவிசேஷங்களும்
ஆகி — ஸ்வாதீநமாம்படி ப்ரவர்த்திப்பித்து
நின்றான்— நின்றான்,
செந் நெல்—செந்நெலானது
மலிந்து—மிகுந்து
கவரிவீசும் — (தன் கதிர்க்கனத்தாலே) கவரிபோலே அசைகிற
திருக்குருகூர் அதனுள்—திருநகரிக் குள்ளே
பொலிந்து நின்ற — (பரத்வப்ரகாஶகமான குணங்களோடே ஶீல ஸௌலப்யாதிகளுங் கூடி ப்ரகாசிக்கும்படி) பரிபூர்ணனாய் நிற்கிற
பிரான் கண்டீர் — ஸர்வேஶ்வரனே காணுங்கோள்.
(அர்ச்சாவதாரத்தில் பரத்வம்ப்ரகாசிக்குமோ என்று ஶங்கிக்க வேண்டா; (க) "...தாமர்ச்சயே த்" இத்யாதிப்ரமாணத்தாலே இவ்வர்த்தத்தில்)
ஒன்றும்—ஒன்றும்
பொய் இல்லை—பொய் இல்லை;
போற்றுமின் — (ஆகையால் உங்கள் பாஹ்ய குத்ருஷ்டிகள் பரஶங்களைவிட்டு அவனையே) ஸ்துதியுங்கோள் (ரு)

ஆறு ;—(இலிங்கத்திட்ட.) லைங்கபுராண நிஷ்டரான நீங்களும், மற்றும் ஶாக்யோலூக்யாக்ஷபாத க்ஷபண கபில பதஞ்ஜலிமதாநுஸாரிகளானவர்களும், மற்றும் உங்களுடைய தைவங்களுமெல்லாம் நாராயணாத்மகம்; இவ்வர்த்தத்தில் ப்ரமாணமென்? என்னில் ;—(உ) "... தா-அந்த: ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தாஜநாநாம் ஸர்வாத்மா" (ந) "...

(க) ஶௌநகஸ்ம்ருதி (உ) யஜு-ஆர-ந (ந) வி பு-ரு க-உக.

ஸை ஷேஹு ஸவ-ிம் நாராயணாத்மகஃ- அஹம்பவோபவந்தஸ்ச ஸர்வம்நாராணாத்மகம்" (௩) "தவா ஷேராத்மாஜீவு யெவா நெஷெஹிஸம்ஜ்ஞிதாஃ•தவாந்தராத்மாமமச யேசாந்யேதேஹஸம்ஜ்ஞிதா:" இத்யாதி வாக்யங்கள். ஆதலால், அவனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார். (௫)

---

ஈடு;—ஆறும் பாட்டு. பகவத்பரத்வம் நீர் அருளிச்செய்யக் கேட்டபோது வெளிச்சிறந்து அல்லாதபோது தேவதாந்தர ப்ராவண்யம் உண்டாகாநின்றது; இதுக்கு அடி எது? என்ன,—உங்கள் பாபமென்கிறார். எம்பெருமானே ஸர்வேஶ்வரனாகில் எங்களை தேவதாந்தர ப்ரவணராக்கிவைப்பானென்? என்ன;—உங்களை இங்ஙனே வைத்தது ஸதஸத்கர்மகாரிகளான ஜந்துக்கள் அவ்வோகர்மாநுகுணபலங்களை யநுபவிக்கக்கடவதான ஶாஸ்த்ரமர்யாதை யழியுமென்று; ஆனபின்பு, அத்தையறிந்து எம்பெருமானை ஸமாஶ்ரயித்து அவன் வஞ்சநத்தைத் தப்புங்கோள் என்கிறார்.

போற்றிமற்றோர்தெய்வம் பேணப்புறத்திட்டும்மைஇன்னே *
தேற்றிவைத்ததெல்லீரும் வீடுபெற்றாலுலகில்லையென்றே *
சேற்றிற்செந்நெல்கமலமோங்கு திருக்குருகூரதனுள் *
ஆற்றவல்லவன்மாயங்கண்டு ஈதறிந்தறிந்தோடுமினோ. (௬)

ப—அநந்தரம், இவ்வர்த்தம் உங்களுக்கு ப்ரகாஶியாதொழிகிறது கர்மாநுரூபமாக அவன் ஸம்ஸாரத்தை நிர்வஹிக்கிற ஸாமர்த்த்யம் என்கிறார்.

மற்று ஓர்—வேறு ஒரு
தெய்வம்—தேவதையை
போற்றி—ஸ்தோத்ரம்பண்ணி
பேண—ஆதரிக்கும்படியாக
புறத்திட்டு—(தனக்குப்)புறம்பாக்கி
உம்மை—(தத்ப்ரவணரான) உங்களை
இன்னே—(நான் தன்விஷயத்திலே விஶ்வஸித்திருக்குமா போலே) இப்படி
தேற்றிவைத்தது—(இதரதேவதா விஷயத்திலே) விஶ்வஸிப்பித்து வைத்தது
எல்லீரும்—எல்லாரும்
வீடுபெற்றால் — பகவத் ப்ராப்திரூப மோக்ஷத்தைப்பெற்றால்
உலகு—('கர்மாநுரூபமாக பலபோக்தாக்களாய்நடக்கக்கடவர்கள் என்கிற) லோகமர்யாதை

---

(௩) பார-மோக்ஷ-௧௭௪

இல்லை—துலையும்
என்றே—என்றாயிருக்கும்;
(அதுக்குமூலம்)
சேற்றில்—சேற்றுநிலத்தில்
செந்நெல்—செந்நெலும்
கமலம்—கமலமும்
ஓங்கு—இசலி வளரக்கடவ
திருக்குருகூரதனுள் — திருநகரியிலே வர்த்திக்குமவனாய்
ஆற்றவல்லவன் — அதிஶயித விவித ஶக்தியுக்தனாய்க் கொண்டு கர்மபலாநுபவத்தைப்பண்ணுவிக்கிறவனுடைய
மாயங்கண்டீர் — (லீலோபகரணமாய் தூரத்யயையாய்) மாயாஶப்தவாச்யமான ப்ரக்ருதியோடு உண்டான ஸம்பந்தமாயிருக்கும்;
அது—அத்தை
அறிந்து அறிந்து—அறிந்து (தந்நிஸ்தரணோபாயமான ப்ரபத்திஜ்ஞாநத்தை)உடையீர்களாய்
ஓடுமின் — (அந்தமாயாநிஸ்தரணத்தைப் பண்ணிக்) கடக்கப் பாருங்கோள்;)
உலகில்லையென்றே யென்று—லோகமில்லையாமென்று நினைத்தோ; அதல்லவிறே ப்ரக்ருதிஸம்பந்த மிறே யென்றுஞ்சொல்லுவர்

ஆறு ;—(போற்றி.) இப்படி நாராயணனே ஸர்வநியந்தாவாகில், தன்னையே ஆஶ்ரயிக்கும்படி எங்களைப்பண்ணாதே வேறொரு தெய்வங்களை யாஶ்ரயிக்கும்படி பண்ணுவானென்? என்னில் ;— போற்றி மற்றோர் தெய்வம் பேணப் புறத்திட்டு உம்மை இன்னே தேற்றி வைத்தது எல்லீரும் வீடுபெற்றால் ஸதஸத்கர்மயுக்த ஜந்துக்கள் தத்தத்கர்மாநு குணபலங்களை அநுபவிக்கக் கடவதான இந்தலோகமர்யாதை யழியுமென்று இந்த லோகமர்யாதாஸித்யர்த்தமாக, அஸத்கர்மகாரிகளான உங்களை அந்த அஸத்கர்மாநுகுணமாக இப்படி தேவதாந்தரத்தை ஆஶ்ரயித்து ஸம்ஸரிக்கும்படி ஸர்வஶக்தியான பரமபுருஷன் தானே பண்ணி யருளினான் ; ஆதலால், அத்தை யறிந்து, இந்த ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகமான பரமபுருஷ கைங்கர்யார்த்தமாக அவனை ஈண்டச்சென்று ஆஶ்ரயியுங்கோள் என்கிறார். (௬)

---

ஈடு ;—ஏழாம் பாட்டு. 'இது செய்கிறோம், இதரதேவதைகளுக்கும் சில உத்கர்ஷமுண்டு' என்று நெடுநாள் அவற்றுக்குப் பச்சையிட்டுப் போந்தோம் ; அப்பச்சை வெறுமனாகாமே இன்னம் சிலநாள் அவை பலிக்கும்படி கண்டு பின்னை பகவத்ஸமாஶ்ரயணம்

பண்ணுகிறோம்' என்ன, 'அவையும் எல்லாம் செய்து கண்டிகோ ளிறே; இனி அவையும் காணுங்கோள்' என்கிறார்.

ஓடியோடிப்பலபிறப்பும்பிறந்து மற்றோர்தெய்வம்
பாடியாடிப்பணிந்து * பல்படிகால்வழியேறிக்கண்டீர் *
கூடிவானவரேத்தநின்ற திருக்குருகூரதனுள் *
ஆடுபுட்கொடியாதிமூர்த்திக் கடிமைபுகுவதுவே. (எ)

ப.—அநந்தரம், நீங்கள் இதற்குமுன்பு ஆஶ்ரயித்துப்பெற்ற பலமிறே இனி ஆஶ்ரயித்தாலும் பெறுவது; ஆனபின்பு, பரத்வசிஹ்நமான கருடத்வஜத்தையுடைய ஸர்வகாரண பூதனுக்கு அடிமைபுகுங்கோள் என்கிறார்.

மற்று ஓர்தெய்வம்—வேறேசொல்லப் பற்றாததொரு தேவதையை
பாடியாடி—(ப்ரீதிப்ரேரிதராய்க் கொண்டு) பாடுவது ஆடுவதாய்
பணிந்து—வணங்கி
பல்படிகால்—பலப்ரகாரத்தாலும்
வழி—(ஆஶ்ரயிக்கச்சொல்லுகிற) ஶாஸ்த்ரமார்க்கத்தாலே
ஏறி—மேன்மேலும் ஆஶ்ரயித்து
ஓடி யோடி—(அஸ்பலமான கர்ப்ப நரகங்களிலே) ஓடி
பலபிறப்பும்பிறந்து—பல வகையாகப் பிறந்து
கண்டீர் — அபரோக்ஷித்துக் கண்டீர் (ஆனபின்பு)
வானவர்—(நீங்கள் ஆஶ்ரயிக்கிற) தேவர்களெல்லாரும்
கூடி—கூடி
ஏத்த — (தங்களாபந்நிவருத்யாதிகளுக்காக) ஸ்தோத்ரம்பண்ணி ஆஶ்ரயிக்கும்படி
திருக்குருகூரதனுள்—திருநகரியிலே
நின்ற—நிற்குமவனாய்
ஆடு—(பகவதநுபவ ப்ரீதியாலே) ஆடி வருகிற
புள்—பெரியதிருவடியை
கொடி—(பரத்வப்ரகாஶகமான) கொடியாக வுடையனாய்
ஆதி மூர்த்திக்கு-ஸர்வகாரணபூதனான ஸர்வேஶ்வரனுக்கு
அடிமைபுகுவது—அடிமைபுகுங்கோள்
புகுவதென்றது — புகுக வென்றபடி விதியாயிருக்கிறது. (எ)

ஆறு;—(ஓடியோடி.) தேவதாந்தரத்தை ஆஶ்ரயித்தால் மோக்ஷாதி ப்ரயோஜநங்கள் ஸித்தியாதோ வென்னில்;—'இவ்வளவும் வர இவ்வநாதிகாலமெல்லாம் தேவதாந்தரத்தை ஆஶ்ரயித்து என்னப்ரயோஜநம் பெற்றீர்? ஆனபின்பு, இந்த தேவதாந்தரங்களை விட்டு, பொலிந்துநின்ற பிரான் திருவடிகளை ஆஶ்ரயிப்பது' என்கிறார். (எ)

ஈடு ;—எட்டாம் பாட்டு. இங்ஙனே யிருக்கச் செய்தேயும், இதரதேவதாஸமாஶ்ரயணம் பண்ணியன்றோ மார்க்கண்டேயாதிகள் ஸ்வாபிலஷிதம்பெற்றது என்ன,—ஆகில் அது இருந்தபடியைக் கேட்கலாகாதோ? என்கிறார்.

புக்கடிமையினால் தன்னைக்கண்ட மார்க்கண்டேயனவனை *
நக்கபிரானுமன்றுய்யக்கொண்டது நாராயணனருளே *
கொக்கலர் தடந்தாழைவேலித் திருக்குருகூரதனுள் *
மிக்கவாதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம்விளம்புதிரே. (அ)

ப—அநந்தரம், மார்க்கண்டேயனுக்கு ருத்ரன் பலப்ரதனாயிற்றும் ஈஶ்வரன்க்ருபையாலே யென்று, 'இதரதேவதைகளுக்கும் பலப்ரதாநஶக்தியாதாயகன் அவனே' என்னுமிடத்தை உதாஹரணநிஷ்டமாக்கி அருளிச்செய்கிறார்.

அடிமையினால்—ஶேஷவ்ருத்தி முகத்தாலே
புக்கு—உட்புக்கு
தன்னை—ஆஶ்ரயணீயனான தன்னை
கண்ட—அபரோக்ஷித்துக்கண்ட
மார்க்கண்டேயன் — மார்க்கண்டேயனென்று
அவனை—புராணப்ரஸித்தனானவனை
நக்கன் — திகம்பரனாகையாலே நக்நனென்று பேராய்
பிரானும்—(ஆஶ்ரிதருக்கு ம்ருத்யுவை ஜயித்து நித்யத்வத்தைக் கொடுத்த) உபகாரகனானவனும்
அன்று—ப்ரளயதசையிலே
உய்யக்கொண்டது—பிழைப்பித்து பகவத்பரனாக்கி உஜ்ஜீவிப்பித்தது
நாராயணன் — (அந்தராத்மபூதனான) நாராயணன்
அருளே—(அவனுக்குபலப்ரதனாம்படி தன்னைப் பண்ணிவைத்த) க்ருபையாலேயாயிருக்கும்; ஆதலால்
கொக்கு—கொக்கின்நிறம்போலே
அலர்—அலருகிற பூவையுடைய
தடம்—பெரிய
தாழை—தாழைகளை
வேலி—வேலியாக வுடைய
திருக்குருகூரதனுள் — திருநகரிக்குள்ளேநிற்கிற
மிக்க—ஸர்வாதிகனாய்
ஆதி—நிரபேக்ஷகாரணபூதனான
பிரான்—மஹோபகாரகன்
நிற்க—நிற்க
மற்றுத்தெய்வம்—வேறு தத்ஸாபேக்ஷமான எத்தைதைவமாக
விளம்புதிர்—சொல்லுகிறீர்கோள் (அ)

ஆறு ;—(புக்கடிமையினால்.) ருத்ரனை யாஶ்ரயித்தன்றோ மார்க்கண்டேயன் ஸ்வாபிலஷிதம்பெற்றது என்னில்,—அவனும் ஸ்வா

பிலஷிதம்பெற்றது நாராயணனுடைய ப்ரஸாதத்தாலே; அவ்விடத்தில் ருத்ரன் புருஷகாரமாத்ரமே; ஆகலால், இப்படி ஸர்வேச்வரனை நாராயணனையொழிய மற்றென்ன தைவத்தைக் கொண்டாடுகிறீர்? என்கிறார். (அ)

---

ஈடு;—ஒன்பதாம் பாட்டு. உங்களுடைய உஜ்ஜீவநத்துக்கு அவ்வளவும் சொல்லவேணுமோ? அவன்வர்த்திக்கிற திருநகரியை உங்கள் ஜ்ஞாநத்துக்கு விஷயமாக்க அமையுமென்கிறார்.

விளம்புமாறுசமயமு மவையாகியும்மற்றும்தன்பால் *
அளந்துகாண்டற்கரியனாகிய வாதிப்பிரானமரும் *
வளங்கொள் தண்பணைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனை *
உளங்கொள்ஞானத்துவைம்மினும்மை உயக்கொண்டுபோகுறிலே.

ப—அநந்தரம். இதர தூரவபோதன் வர்த்திக்கிற திருநகரியை உங்களுக்கு உஜ்ஜீவநார்த்தமாக அநுஸந்தியுங்கோள் என்கிறார்.

| | |
|---|---|
| விளம்பும்—(தர்க்ககோலாஹலத்தாலே) ஶப்தமாத்ரஸாரமாயிருக்கிற | ஆதிப்பிரான்—ஸர்வகாரண பூதனை மஹோபகாரகன் |
| ஆறு சமயமும்—(சார்வாக ஶாக்ய க்ஷபணக வைஶேஷிக ஸாங்க்ய பாசுபத ரூபமான) ஆறு பாஹ்யஸமயமும் | அமரும்—பொருந்தி வர்த்திக்கும்தேஶமாய் |
| | வளம்கொள்—தர்ஶநீயமாய் |
| | தண்—ஶ்ரமஹரமான |
| | பணை—நீர்நிலங்களாலே |
| மற்றும்—மற்றுமுள்ள குத்ருஷ்டிவர்க்கமும் | சூழ்ந்து—சூழப்பட்டு |
| | அழகாய—நிரதிஶயபோக்யமான |
| அவையாகியும்—ஸபையாகத்திரண்டாலும் | திருக்குருகூரதனை—திருநகரியை (நீங்கள்) |
| | உம்மை—உங்களை |
| தன்பால்—(அபரிச்சிந்நஸ்வபாவனை) தன்விஷயத்தில் | உய்யக்கொண்டு — உஜ்ஜீவிப்பித்துக்கொண்டு |
| அளந்து—(நிஷேத்யதயாவும், பரிச்சேதித்து | போகுறில்—நடக்கவேண்டியிருந்தீர்களாகில் |
| காண்டற்கு—காண்கைக்கு | உளம்கொள் ஞானத்தை—உங்கள்மாநஸஜ்ஞாநத்துக்குள்ளே |
| அரியனாகிய — அரிதான ஸ்வபாவத்தையுடைய | வைம்மின்—வையுங்கோள். (கூ) |

ஆறு ;—(விளம்பும்.) க்ஷுத்ர தைவங்களை விட்டு, வேதபாஹ்யகுத்ருஷ்டி ப்ரப்ருதி ஸமஸ்த துஸ்தர்க்க தூரபஹ்நவ ஸ்வரூப ரூபகுண விபூதிகனான பரமபுருஷன் எழுந்தருளியிருக்கிற திருநகரியை ஆஸ்ரயியுங்கோள், உஜ்ஜீவிக்க வேண்டியிருந்தீகோளாகில் என்கிறார். (௯)

---

ஈடு ;—பத்தாம் பாட்டு. தன் ஐஸ்வர்யத்தி லொன்றுங் குறையாமல் வந்து திருநகரியிலே நின்றருளின பொலிந்துநின்ற பிரானுக்கு அடிமைசெய்கையே உசிதம் என்கிறார்,

உறுவதாவதெத்தேவு மெவ்வுலகங்களும்மற்றுந்தன்பால் *
மறுவின்மூர்த்தியோடொத்தித்தனையும் நின்றவண்ணம்நிற்கவே *
செறுவிற்செந்நெல்கரும்பொடோங்கு திருக்குருகூரதனுள் *
குறியமாணுருவாகிய நீள்குடக்கூத்தனுக்காட்செய்வதே. (௧௦)

ப.—அநந்தரம், ஸர்வஸரீரியாய் நிரதிஸயஸீலவானாய் ஸர்வமநோஹர சேஷ்டிதத்தை யுடையனானவனுக்கு அடிமைசெய்வதே உத்தேஸ்யமாய் உசிதமுமான புருஷார்த்தமென்கிறார்.

எத்தேவும்—ஸகலதேவதாவர்க்கமும்
எவ்வுலகங்களும்—ஸமஸ்தலோகமும்
மற்றும்—மற்றுமுண்டான சித்சித்வர்கமுமான
இத்தனையும்—இவையித்தனையும்
தன்பால்—தன்ஸ்வரூபத்திலே
மறு இல்—நிரவத்யமான
மூர்த்தியோடொத்து — அஸாதாரண விக்ரஹத்தோபாதி அத்தலைக்கு அதிஸயகரமான ப்ரகாரமாய்க் கொண்டு
நின்றவண்ணம்—தான்நிற்கிற ஸ்வரூபபேதமும் குலையாதபடி
நிற்கவே—நிற்கச்செய்தே (அம்மேன்மையோடொக்க
செறுவில்—விளைநிலங்களில்
செந்நெல்—செந்நெலானது
கரும்பொடு—கரும்பொடொக்க
ஓங்கு—வளரும்படியான
திருக்குருகூரதனுள் — திருநகரிக்குள்ளே நிற்குமவனாய்
குறிய — (ஆஸ்ரிதர்க்குச் சிறும்பித்து அநுபவிக்கலாம்படி) வாமநனாய்
மாணுருவாகிய—(அர்த்தித்வமே நிரூபகமென்னலாம்படியான) ப்ரஹ்மசாரிவேஷத்தையுடையனாய்
நீள்—(கேட்டாரெல்லாரும் ஈடுபடும்படியான) நிரதிஸயபோக்யதா மாஹாத்ம்யத்தையுடைய
குடக்கூத்தனுக்கு — குடக்கூத்தைப் பண்ணினக்ருஷ்ணனுக்கு
ஆள்செய்வதே— அடிமைசெய்வதே
உறுவது ஆவது—சீரியதாயும் உசிதமாயுமுள்ள புருஷார்த்தம்

ஆறு ;—(உறுவதாவது.) ஸ்வாஸர்தாரண விக்ரஹம்போலே விதேயமான ஸர்வஜகத்தையு முடையனும் அஜஹத்ஸ்வபாவனுமாய்க் கொண்டு, செறுவில் செந்நெல் கரும்பொடோங்கு திருக்குருகூரத னுள் நின்றருளின குறிய மாணுருவாகிய நீள்குடக்கூத்தனுக்கு ஆட்செய்வதே உறுவதாவது என்கிறார். (கo)

---

ஈடு ;—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார்க்குப் பரம பதம் ஸுலப மென்கிறார்.

ஆட்செய்தாழிப்பிரானைச்சேர்ந்தவன் வண்குருகூர்நகரான் *
நாட்கமழ்மகிழ்மாலைமார்பினன் மாறன்சடகோபன் *
வேட்கையாற்சொன்னபாட லாயிரத்துளிப்பத்தும்வல்லார் *
மீட்சியின்றிவைகுந்தமாநகர் மற்றதுகையதுவே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை அப்யஸித்தவர்களுக்குப் பரம பதம் கையிலேயென்று பலத்தை அருளிச்செய்கிறார்.

ஆள்செய்து—(பரோபதேஶமுகமான) வாசிக கைங்கர்யத்தைப் பண்ணி
ஆழிப்பிரானை — (ஆஶ்ரிதாநு பாவ்ய மான திருவாழியைக் கையிலேயுடைய உப காரகனை
சேர்ந்தவன்—ப்ராபித்தவராய்
வண்குருகூர்நகரான்—விலக்ஷணமான திருநகரிக்கு நிர்வாஹகராய்
நாள்கமழ்—அபிநவ பரிமளத்தையுடைய
மகிழ்மாலை—திருமகிழ்மாலையை
மார்பினன்—மார்பிலேயுடையராய்
மாறன்—மாறனென்கிற குடிப்பேரையும்
சடகோபன்—(பாஹ்யகுத்ருஷ்டிகளா னஶடரை நிரஸிக்கையாலே ஶடகோபனென்னும் திருநாமமுடைய ஆழ்வார்
வேட்கையால்—(பகவத் விஷயத்திலே) அபிநிவேசத்தாலே
சொன்ன—அருளிச்செய்த
பாடல்—காநரூபமான
ஆயிரத்துள்—ஆயிரம் திருவாய்மொழியிலும்
இப்பத்தும்—(பரோபதேஶமான) இப் பத்துப்பாட்டையும்
வல்லார் — (அர்த்தாநு ஸந்தாநத்தோடே) அப்யஸிக்கவல்லார்கள்
கையது—கையது
மற்று—இதினுடைய அப்யாஸமாகிற ப்ரயோஜநத்துக்குமேலே
அது—அவ்வருகுண்டாய்
மீட்சியின்றி—புநராவ்ருத்தியில்லாத
வைகுந்தம்—ஸ்ரீவைகுண்டமாகிற
மாநகர்—மஹாநகரமானது
இது—அறுசீராசிரிய விருத்தம் (கக)

ஆறு ;— (ஆட்செய்து) பகவத்கைங்கர்யாதி ஶ்ரீதளாம்ருதமய தடாகாவகாஹந ஸுப்ரஸந்நாத்ம ஸ்வரூபகாத்ர நிரதிஶயஸுகந்த விகஸத்கேஸரமாலாலங்க்ருத வக்ஷஸ்தலரான ஆழ்வார் பரமபுருஷ விஷய நிரதிஶயபக்தியாலே சொன்ன ஆயிரத்துள் இப்பத்தும் வல்லர்க்கு இதுவே வல்லராமதுவே பரமப்ராப்யம் ; மற்றுத் திருநாடு வேண்டியிருக்கில் அது இவர்கள் கையது என்கிறார். (கக)

திருவாய்மொழி நான்காம் பத்து பத்தாம் திருவாய்மொழி

முற்றிற்று.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வார்

திருவாய் மலர்ந்தருளிய

# திருவாய்மொழி

## ஐந்தாம்பத்து

இதற்கு

* தெள்ளாரும் ஞானத்திருக்குருகைப்பிரான் பிள்ளான்

அருளிச்செய்த ஆறாயிரப்படியும்,

* அன்போடழகிய மணவாளச்சீயரருளிச் செய்த

பன்னீராயிரப்படி உரையும்

* தெள்ளியதா நம்பிள்ளை செப்புநெறிதன்னை

வள்ளல் வடக்குத்திருவீதிப் பிள்ளை அருளிச்செய்த

ஈடு ப்ரதி திருவாய்மொழியின்

ப்ரவேசங்களும்

ப்ரதி பாசுரங்களின் அவதாரிகைகளும்

ஸபாபண்டிதரான

**ஸ்ரீமான், புதுப்பட்டு-திருவேங்கடாசார்யரால்**

பரிசோதிக்கப்பட்டு

ஸ்ரீ வைஷ்ணவ கிரந்த முத்ராபக சபையாரால்

சென்னை.

ஸ்ரீநிகேதன முத்ராக்ஷர சாலையில்

அச்சிட்டு ப்ரகாசம் செய்யப்பட்டது.

பிரபவ௵

1927



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# திருவாய்மொழி.

## ஐந்தாம்பத்து.

### முதல்திருவாய்மொழி—கையார்சக்கரம் ப்ரவேஶம்.

ஆறு: —(கையார்சக்கரம்.) இப்படி "எம்பெருமானை ஆஶ்ரயி யுங்கோள்" என்று பிறரைக் குறித்து அருளிச்செய்தருளி; தம் பக்கலுள்ள ப்ராதிகூல்யங்களொன்றும் பாராதே நிர்ஹேதுகமாக எம்பெருமான், ஸ்வஸர்வேஶ்வரத்வ ஜ்ஞாநத்தையும் ஸ்வகைங்கர்யப்ராப்யத்வ ஜ்ஞாநத்தையும் தமக்குக் கொடுத்தருளித் தம்மை ஸ்வாநுபவைகதாரக போஷக போக்யராக்கித் தம்பக்கல் நிரதிஶய வ்யாமுக்தனாய்க்கொண்டு தம்மோடு ஸம்ஶ்லேஷித்தபடியை ப்ரீத்யதிஶயத்தாலே அருளிச்செய்கிறார். *

ப: —முதலிரண்டுபத்தாலே - ப்ராப்யபூதனை ஶேஷியினுடைய ரக்ஷகத்வபோக்யத்வங்களைச்சொல்லி அநந்தரம் மூன்றாம்பத்தாலும் நாலாம்பத்தாலும்- ப்ராப்தாவான பகவச்சேஷபூதனுடைய ததேகாநுபவத்வத்தையும் ததேகப்ரியத்வத்தையுஞ் சொல்லி; ஆக, நாலுபத்தாலும் - ஸித்தரூபமான பராவராத்ம யாதாத்ம்யத்தை அருளிச்செய்தாராய்; அநந்தரம் அஞ்சாம்பத்தாலும் ஆறாம் பத்தாலும் - ஸித்தோபாயபூதனை ஈஶ்வரவிஷயத்தில் சேதநனுக்கு ஸாத்யமான உபாயஸ்வீகாரத்தை அருளிச்செய்கிறார்.

அதில், இந்த அஞ்சாம்பத்தில் - ஸித்தமான உபாயஸ்வரூபத்தினுடைய யாதாத்ம்யத்தை நிரூபிக்கிறது; எங்ஙனேயென்னில்;—கீழ்ச்சொன்ன ததேகப்ரியத்வத்தாலே "பகவத்கைங்கர்யமே உத்தேஶ்யம்" என்று பிறர்க்கு உபதேசிக்கும்படி தமக்கு அவ்விஷயத்தில் பிறந்த ப்ராவண்யத்தை அநுஸந்தித்து, "இதுக்கடி அவனுடைய உபாயபாவம்" என்று நிஷ்கர்ஷித்து, உபாயபூதனுடைய க்ருபாபாரவஶ்யத்தையும், அதடியாக ஆஶ்ரிதரைபாகவதரையிட்டுத் திருத்திக் கொள்ளும் ஆகாரத்தையும், நிரதிஶயப்ரேமத்தையுண்டாக்கி ப்ராப்யத்வரையை ஜநிப்பிக்கும்படியையும், ப்ராப்யாலாபதசையில் ஆர்த்திபிறந்தார்பக்கல் அவனுடைய ரக்ஷகத்வ ஸாமர்த்யத்தையும், அப்ராப்யவ்யநத்தோடே ஹார்த்தமான அநுபவம் நடக்கையாலேப்ரீத்யப்ரீதிகளை ஸமமாக உண்டாக்கும்படியையும், ஆர்த்த்யதிஶயத்தாலே அநுகரிக்கும்படி அவன்

இவனுக்கு அஹம்பாவ விஷயமாம் படியையும், இப்படி ஆர்த்திபிறந்தால் அகிஞ்சநரானார்க்குத் தன் உபாயபாவத்தை ப்ரகாசிப்பிக்கும்படியையும், போகாகாங்க்ஷை யுடையார்க்கு அவ்வுபாயத்தில் ப்ரதிபத்திவிசேஷ கர்த்வத்தையும், பரிபூர்ணாநுபவப்ராவண்யம் பிறந்தால் ப்ரதிபந்நமான உபாயத்தில் விஸ்வாஸ ஜநகத்வத்தையும், அதிசயிதஸக்தியான உபாயவிஷயத்தில் அபிநிவிஷ்டரானார்க்கு அந்த விஸ்வாஸத்தை யாவத்ப்ராப்தி அநுவர்த்திப்பிக்கும்படியையும் அருளிச்செய்து நிரபாயோபாயபூதனுடைய யாதாத்ம்யத்தைநிஷ்கர்ஷித்து அருளுகிறார்.

அதில் முதல் திருவாய்மொழியில் - உபாயபூதனான ஈஸ்வரனுடைய க்ருபாபாரவஸ்யத்தை ப்ரதிபாதிப்பதாக ; க்ருத்ரிமாநுகூல்யவான்கள் பக்கலிலும் ஸர்வ ஸுலபனான ஈஸ்வரனுடைய க்ருபை அவ்யபிசாரிதை என்னுமிடத்தையும், அந்த க்ருபாபாரவஸ்யத்தாலே அஹ்ருதயோக்தியே பற்றாசாக அவன் அபிநிவிஷ்டனாய் மேல்விழும்படியையும், ஆஸ்ரிதருடைய கிலேசத்தையையும் போக்கித் தன்னை யநுபவிப்பிக்கும்படியையும், அநுபவப்ரதிபந்தக தோஷ நிவர்த்தகத்வத்தையும், தோஷரூபஸரீராதிகள் நிவர்த்தகனுக்கு விதேயமென்னுமிடத்தையும், தோஷரூப ப்ரக்ருதியோடேகூட விருக்கச்செய்தேயும் அந்த தோஷம் நெஞ்சிற்படாதபடிவிலக்ஷணவிக்ரஹத்தை அநுபவிப்பிக்கும்படியையும், போக்தாவின் நிகர்ஷம்பாராதே ப்ரேமத்தை ஜநிப்பித்துத் தானும் மேல்விழுந்தநுபவிக்கு மென்னுமிடத்தையும்,[1] அநுபவிக்குமளவில் ஸர்வவிதபந்துவாய் புஜிப்பிக்கும்படியையும், இப்பந்தத்தோடே அஸாதாரணாகாரசிஹ்நவிஸிஷ்டனாய் அநுபவிப்பிக்கும் ஆகாரத்தையும், அந்தவாகாரத்தை அழியமாறியும் ஆஸ்ரிதார்த்தமாக அநேகாவதாரங்களைப் பண்ணும்படியையும் அநுஸந்தித்து, இப்படி உபாயபூதனான ஈஸ்வரனுடைய க்ருபாபாரவஸ்யத்தை அநுபவிக்கிறார். *

ஈடு;—*நண்ணாதார்முறுவலிப்பவிலே ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை யநுஸந்தித்து அதுக்குப் பரிஹாரமாக, "பகவத்பரத்வஜ்ஞாநத்தை யுண்டாக்குவோம்" என்று பகவத்பரத்வத்தை உபதேசித்தார்-கீழ் ; இரண்டுகிட்டம் தன்னிலே சேரக்கிடக்க அதிலேயொன்று பொன்னாயிருக்குமாபோலே அவர்களிலே ஒருவராயிருக்கிற தாம், "அவர்களையும் திருத்தும்படி தமக்குப்பிறந்த நன்மைக்கு அடியென்?" என்றுபார்த்து, தன்னுடைய நிர்ஹேதுக க்ருபையாலே செய்தானத்தனை யென்கிறார். அநாதிகாலம் ஸம்ஸரித்து, புத்திபூர்வம் விரும்புவது ஸப்தாதி விஷயங்களையேயாய், தன்பக்கல் எனக்குள்ளது அஹ்ருதயமான உக்திமாத்ரமேயாயிருக்க,

நான் புத்திபூர்வம் பண்ணிப் போந்த ப்ராதிகூல்யங்களை விஸ்மரித்து, ஜ்ஞாநம்பிறந்தபின்பு ப்ராமாதிகமாக வந்தவற்றில் அஜ்ஞனாய், என்னை இவ்வளவாக விஷயீகரித்தான்; பிறரையும் நான்திருத்தவல்லேனாம்படி பண்ணினான்" என்று தாம் பெற்றபேற்றின் கனத்தைச் சொல்லி ஈடுபட்டு அநுபவிக்கிறார்.

பகவத்பரத்வஜ்ஞாநத்தைத் தம் நெஞ்சிலே படுத்தினபடியையும், அதுக்கு உறுப்பாயிருப்பதொரு நன்மை தமக்கின்றிக்கேயிருந்தபடியையும், அநாதிகாலம் தாம் விபரீதங்களையே அநுஷ்டித்துப் போந்தபடியையும், புருஷார்த்தோபாயமாகச் சொல்லுகிறவற்றில் தாம் ஒன்றும் கணக்கண்டறியாதேயிருக்கிறபடியையும், இழந்து நோவுபடாநிற்கச் செய்தே புருஷார்த்தம் வேணுமென்னும் ப்ரதிபத்தியுமின்றிக்கே யிருந்தபடியையும், ஸம்ஸாரத்திலே தரைகாணவொண்ணாதபடி ஆழ்ந்து நோவுபடாநிற்கச் செய்தே "நோவுபடாநின்றோம்" என்று அறிவிக்கவும் மாட்டாதே உணர்த்தி யற்றிருக்கிறபடியையும், அம்ருதமிருக்க விஷத்தை விரும்புவாரைப்போலே ஆராவமுதைவிட்டு இன்னமுதெனத் தோன்றின ஸப்தாதிவிஷயங்களை விரும்பிப்போந்தபடியையும், அதுக்குமேலே அவன்பக்கல் இச்சையின்றிக்கே யிருக்க அவனையுகந்தார் சொல்லும் வார்த்தைகளைச் சொல்லிப்போந்தபடிகளையும் அநுஸந்தித்து; இப்படி ஸர்வப்ரகாரத்தாலும் தண்ணியேனாயிருக்கிற என்னை, அவையொன்றும்பாராதே, "தான் ஸர்வசேஷி" என்னுமிடத்தையும் "தன்திருவடிகளில் கைங்கர்யமே புருஷார்த்தம்" என்னுமிடத்தையும் என்நெஞ்சிலேபடுத்தி என்பக்கலிலே வ்யாமுக்தனாய் என்னோடேவந்து கலந்தானென்று தாம்பெற்றபேற்றைச்சொல்லி ஹ்ருஷ்டராகிறார்.

ஈடு; அவ: —முதற்பாட்டு. என்பக்கலுள்ளது அஹ்ருதயமான உக்தியாயிருக்க, இத்தைஸஹ்ருதயமாகக்கொண்டு விரும்பி, "இனி இதுக்கு அவ்வருகில்லை" என்னும்படியான பேற்றைப் பண்ணித் தந்தா னென்கிறார்.

கையார்சக்கரத்தென்கருமாணிக்கமேயென்றென்று*
பொய்யேகைம்மைசொல்லிப் புறமேபுறமேயாடி*
மெய்யேபெற்றொழிந்தேன் விதிவாய்க்கின்றுகாப்பாரார்*
ஐயோகண்ணபிரான் அறையோவினிப் போனாலே. (க)

ப:—முதற்பாட்டில் க்ருத்ரிமமான அநுகூலோக்திகளைப் பண்ண, ஸர்வ ஸுலபனான வனுடைய தப்பவொண்ணாத க்ருபாவைபவத்தாலே அக்ருத்ரி மப்ரேமபரர் பெறும்பேற்றைப் பெற்றேன் என்கிறார்.

கை—திருக்கையோடு
ஆர்—பொருந்தின
சக்கரம்—திருவாழியை யுடையவனாய் (அச்சேர்த்தியோடே)
என் கருமாணிக்கமே—நீலரத்நம்போலே தர்ஶநீயமான வடிவை எனக்கு அநுபாவ்யமாக்கினவனே
என்றென்று—என்று என்று பாரமார்த்திக ப்ரேமயுக்தரைப் போலே பலகாலும்
பொய்யே—அந்தப்ரீதியின்றி யிருக்கச் செய்தே
கைம்மை—(எதிரியும் ஸத்யபுத்திபண்ணும்படி) க்ருத்ரிமோக்தியை
சொல்லி—பண்ணி, (உக்திவிருத்தமாம்படி)
புறமேபுறமே—பாஹ்ய விஷயங்களிலே ஒன்றைவிட்டு ஒன்றைப்பற்றி
ஆடி—ஸர்வதா ஸஞ்சரித்துவைத்து
மெய்யே—பாரமார்த்திகப்ரேம யுக்தர் பெறறபேற்றை
பெற்றொழிந்தேன்-பெற்றுவிட்டேன்
விதி—(இதுக்கு ஹேதுவாய். பொய்யையும் மெய்யாக நீ ப்ரதிபத்திபண்ணும்படி பண்ணக்கடவதாய், நீ "அல்லேன்" என்னிலும் தவிரவொண்ணாதபடி ப்ரவர்த்திப்பிக்கையாலே விதி ஶப்தவாச்யையான) உன்னுடைய க்ருபை,
வாய்க்கின்று-(பலோந்முகியாகிற)இது
ஆர்—ஆராலே
காப்பார்—விலக்கலாம்? (அதுக்கடியென்னென்னில்)
கண்ணன்—ஸர்வ ஸுலபனாய்க்கொண்டு
பிரான்—எனக்கு உபகரித்த நீ, (உன்ஸ்வாதந்த்ர்யத்தாலே ஶக்தனென்னு)
இனி—க்ருபை பலித்த பின்பு
போனாலே-கால்வாங்கிப் போகலாமோ
ஐயோ—ஐயோ
அறையோ-வல்லையாகில்போய்க்காண்
ஐயோவென்றது—அதுகாண்போமென்கிற ஹர்ஷோக்தி.
அறையோவென்றது—அத்யுயானகர்வோக்தி (க)

ஆ:—ஸ்வசரணயுகள ஸ்நேஹ சுந்தரஹிதனாய், ப்ராக்ருதவிஷய ப்ரவணனாயிருந்து வைத்து, ஸ்வவிஶ்லேஷத்தில் ஆத்மதாரணக்ஷமரல்லாதாரைப்போலே கையார்சக்கரத்து என்கருமாணிக்கமே யென்றென்று நான்சொல்ல, என்னுடைய இந்த அதிதுஸ்ஸஹமான ப்ராதிகூல்யத்தை ஒன்றும்பாராதே என்னை மெய்யாக ஸ்வாநுபவைக போகனாக்கி என்னோடே கலந்தருளினான். எம்பெருமானுடைய நிரவதிககாருண்ய ஸமுத்ரம் கரையுடைந்து பெருகப்

புக்கால் எம்பெருமான் தன்னாலும் தடுக்கமுடியாதாகாதே. அவன் ஸர்வஶக்தனல்லனோ, அவனால் முடியாததுண்டோ வென்னில்; வல்லனாகில் போவதிறே யென்கிறார். (க)

---

ஈடு; அவ:—அஸ்தாநேபயஶங்கிகள் சொல்லும்வார்த்தைதனை நான் அஹ்ருதயமாகச் சொல்ல ஸர்வஜ்ஞனானவன் அத்தை மெய்யாகக் கொண்டு தன்விபூதியோடே கூட நானிட்டவழக்கானானென்கிறார்.

போனாய்மாமருதின்நடுவே என்பொல்லாமணியே*
தேனேயின்னமுதே என்றென்றேசிலகூத்துச்சொல்ல*
தானேயெலம்பெருமான வனென்னாகியொழிந்தான்*
வானேமாநிலமே மற்றுமுற்றுமென்னுள்ளனவே. (உ)

ப:—அநந்தரம், அஹ்ருதயமான ப்ரேமோக்தியே பற்றாசாக ஸவிபூதிகனான ஸர்வேஶ்வரன் என்பக்கலிலே அபிநிவிஷ்டனானா னென்கிறார்.

மா—மஹாகாயங்களாய் அஸுராவிஷ்டங்களாய்க்கொண்டு நலிகைக்குத் தன்னில்தான் செறிந்த
மருதின்—மருதுகளின்
நடுவே—நடுவே
போனாய்—போனவனே! (அவற்றை நிரஸித்து அவ்வருகுபட்ட போதை ஔஜ்ஜ்வல்யத்தாலே
பொல்லா—தொளையாத
என்மணியே—ரத்நம்போலே அவிகல தேஜஸ்ஸை யுடையையாய்க்கொண்டு) எனக்கு தர்ஶநீயனானவனே
தேனே—தேன்போலே ரஸிப்பிக்கும் வடிவில் ஸௌகுமார்யத்தை யுடையவனே
இன் அமுதே—(விரோதி பலத்தை நினைத்து ஸத்தை யழிந்து என்னை) உஜ்ஜீவிப்பிக்கும் அம்ருதமானவனே
என்றென்றே—என்றென்று தனித்தனியே
சில—(பாரமார்த்திக ப்ரேமத்தாலே) சொல்லுவன சில,
கூற்று—பாசுரத்தை
சொல்ல—பாவித்துப் பலகாலுஞ்சொல்ல
எம்—எனக்கு
பெருமான்—ஸ்வாமியான
அவன்—அவன்
தானேல்—தான் செய்தபடியாகில்
என்—என் அபிமாநத்துக் குள்ளே
ஆகியொழிந்தான்—ஆம்படியாய் விட்டான்;
வான்—ஆகாசம்
மாநிலம்—பூமிமுதலான பூதபஞ்சகங்களும் தத்கார்யமான லீலாவிபூதியும்

மற்றும்—அபரிச்சிந்ந மாஹாத்ம்யத்தையுடைய நித்யவிபூதியும்
முற்றும்—எல்லாம்
என்—எனக்கு
உள்ளன—உள்ளே யிருந்து நடத்தும்படி யாயிற்று (உ)

ஆறு;—(போனும்.) தன்திறத்திலே ப்ரேமகந்தரஹிதனை யிருந்துவைத்து, நிரதிசயப்ரேமயுக்தர் சொல்லும் பாசுரங்களை நான் சொல்ல, ஸர்வேச்வரனான தான், அத்யந்த நிஹீநதானை என்னுள்ளே ஸபரிகரமாக வந்து புகுந்தருளினுனென்கிறார். (உ)

---

ஈர; அவ.—பொய்பேகைம்மைசொல்லி" என்றும், "சிலகூத்துச்சொல்ல" என்றும் சொன்னவார்த்தையை விவரியாநின்றுகொண்டு, இப்படி வாங்மாத்ரத்தாலே உன்னைப்பெற்ற நான் உன்னையொழிய வேறொன்றை ஆசைப்படுவேனோ வென்கிறார்.

உள்ளனமற்றுளவாப் புறமேசிலமாயஞ்சொல்லி*
வள்ளல்மணிவண்ணனே யென்றென்றேயுன்னையும் வஞ்சிக்கும்*
கள்ளமனந்தவிர்ந்தே யுன்னைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன்*
வெள்ளத்தணைக்கிடந்தாயினியுன்னைவிட்டென்கொள்வனே. (ரு)

ப:—அநந்தரம், ஸர்வஜ்ஞனை உன்னையும் வஞ்சிக்கும்நெஞ்சில் க்ருத்ரிமஸ்வபாவம் தீர்ந்து காணப்பெற்றேன்; இப்படி உபகாரகனை உன்னையொழிய அபாஶ்ரயமுண்டோ? என்கிறார்.

உள்ளன—அந்தர்க்கதங்கள்
மற்று—உன்னையொழிந்த ப்ராக்ருதவிஷயங்களாய்
உளவா—நடக்க.
புறமே-கண்டாதுபரியாம்படி புறம்பே
வள்ளல்—உதாரனானவனே
மணிவண்ணனே — விலக்ஷணவிக்ரஹயுக்தனே
என்றென்று என்றுஎன்று பலகாலும்
சில—சில
மாயம்—மித்யோக்திகளை
சொல்லி—பண்ணி
உன்னையும்—ஸர்வஜ்ஞனை உன்னையும்
வஞ்சிக்கும்—விப்ரலம்பிக்கும்படி
கள்ளம்—க்ருத்ரிமஸ்வபாவமான
மனம்—நெஞ்சு
தவிர்ந்து—தவிர்ந்து
உன்னை—(ஆநுகூல்யபாவனையே பற்றாசாக அங்கீகரிக்கும்)உன்னை
கண்டுகொண்டு—அபரோக்ஷித்து அநுபவிக்கப்பெற்று
உய்ந்தொழிந்தேன்—அஸத்கல்பனை நான் உஜ்ஜீவித்துவிட்டேன்(இப்படிஎன்னைத்திருத்துகைக்காக)
வெள்ளம்—க்ஷீரார்ணவத்திலே

அணைக் கிடந்தாய்—கண்வளர்ந்தருளினவனே
இனி—உன்க்ருஷி பலித்தபின்பு
உன்னை—(நித்யாவஸாப்ரதீக்ஷனாய்நிரதிஶயபோக்யனான) உன்னை
விட்டு—விட்டு
என்-நஶ்வரமாய் தாராதமமான எத்தை
கொள்வன்—கைக்கொள்ளுவேன்? (௩)

ஆறு;—(உள்ளன.) அந்தஃகரணம் ப்ராக்ருதவிஷய ப்ரவணமாயிருக்கச்செய்தே, ஸர்வஜ்ஞனான நீயுங்கூட "மெய்" என்றிருக்கும்படி "வள்ளல்மணிவண்ணனே" என்றென்று புறமே சிலமாயஞ் சொல்லி வஞ்சிக்க, நான் இப்போது உன்னுடைய ப்ரஸாதத்தாலே அந்தக்கள்ளம் தவிர்ந்து அக்ருத்ரிமநிரவதிகபக்தியுக்தனாய் உன்னைக் கண்டுகொண்டொழிந்தேன். வெள்ளத்தணைக்கிடந்தாய், இனி நான் ஆத்மாந்தமாக, உன்னையல்லது மற்றொரு ப்ராப்யம் வேண்டேனென்கிறார். (௩)

---

ஈடு; அவ;—நாலாம் பாட்டு. "'பொய்யேகைம்மைசொல்லி' என்றும், 'சிலகூத்துச்சொல்ல' என்றும், 'உள்ளனமற்றுளவாப் புறமே சிலமாயஞ்சொல்லி' என்றும்-பகவத்விஷயத்திலேயும் பொய் சொல்லிப்போந்தேனென்றார்; 'இப்படி பொய்யனாகைக்கு நிபந்தநமேது' என்றுபார்த்தார்; ப்ரக்ருதி ஸம்ஸர்க்கமாயிருந்தது; மெய்யேபெற்றொழிந்தேன் 'கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன்' என்றவற்றை மறந்தார்; இந்த ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே இதரவிஷயங்களிலே ப்ரவணமான மநஸ்ஸை அவற்றில் நின்றும் மீட்டு உன் பக்கலிலே ப்ரவணமாம்படிபண்ணி, தேஹத்திற்காட்டில் ஆத்மாவைப்பிரிய அநுஸந்திக்கைக்குக்ஷமனாகிறிலேன், நீயே என்விரோதியைப்போக்கி உன் திருவடிகளிலே அழைத்துக்கொண்டருளவேணுமென்கிறார்" என்று பட்டர் அருளிச்செய்யும்படி.

அன்றிக்கே, "'கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன்' என்றார்; அது ஜ்ஞாநாநுஸந்தாநமான காட்சியாயிருந்தது; காட்சிக்கு அநந்தரம் பாஹ்ய ஸம்ஶ்லேஷாபேக்ஷை பிறந்து கையைநீட்டினார், கைக்குள் அகப்படக்கண்டிலர், அத்தாலேதளர்ந்து, இதுக்குஅடி-தேஹஸம்பந்தமாயிருந்தது, இத்தைக் கழித்துக்கொள்ளுகைக்கு ஈடாயிருப்பதொரு ஸாதநாநுஷ்டாநக்ஷமனாகிறிலேன் பக்திபாரவஶ்யத்தாலே; ஆனபின்பு நீயே என்விரோதியைப்போக்கி உன்திரு

வடிகளிலே அழைத்துக் கொண்டருளவேணு மென்கிறார்" என்று நிர்வஹிப்பாரு முண்டு. க்ரமத்திலேவரும் பக்தி தமக்கு உண்டாக நினைத்திராரிறே.

என்கொள்வனுன்னைவிட்டென்னும் வாசகங்கள்சொல்லியும்*
வன்கள்வனேன்மனத்தைவலித்துக் கண்ணநீர்கரந்து*
நின்கண்நெருங்கவைத்தே எனதாவியை நீக்ககில்லேன்*
என்கண்மலினமறுத்தென்னைக் கூவியருளாய்கண்ணனே! (ச)

**ப:**—அநந்தரம், இந்த விப்ரலம்போக்த்யாதிமூலமான தோஷத்தைப் போக்கி அங்கீகரிக்கவேணு மென்கிறார்.

(அநந்யப்ரயோஜநர்சொல்லுமாபோலே)
உன்னை — (பரமப்ரயோஜநபூதனுன) உன்னை
விட்டு—விட்டு
என்—என்னப்ரயோஜநத்தை
கொள்வன்—கொள்வேன்?
என்னும்—என்கிற
வாசகங்கள்—ப்ராஸுரங்களை
சொல்லியும்—பலபடியாகச்சொல்லுவதும்செய்து
வல்—அநாதி ஸித்தமாக ஆத்மாவை அபஹரித்த
கள்வனேன்—க்ருத்ரிமனுன நான்
மனத்தை — (விஷயாந்தரங்களிலே போன) நெஞ்சை
வலித்து—வரவலித்து
கண்ணநீர் — (அவற்றின் இழவால் பிறக்கும்) கண்ணநீரையும்
கரந்து — (வாஸநாநிவ்ருத்தியாலே) மாற்றி
மனத்தை—அந்நெஞ்சை
நின்கண்-(நிரதிஶயபோக்யனுன) உன்னிடத்திலே
நெருங்கவைத்து—நெருங்கவைத்து
எனது ஆவியை—என் ஆத்மாவை
நீக்க கில்லேன்—ஸம்ஸாரத்தில்நின்றும் விடுவிக்க மாட்டுகிறிலேன் (இதுக்கு ஹேதுவான)
என்கண்—என்னுடைய
மலினம்—அவித்யாதி தோஷத்தை
அறுத்து—போக்கி
என்னை—அஶக்தனுன என்னை
கண்ணனே—ஶோகித்தாரை (க) 'மா ஶுச:' என்னும் க்ருஷ்ணனே!
கூவியருளாய்—(உன்பக்கலிலே) அழைத்துக்கொண்டருளவேணும்.
(அன்றியே)
வன்—அநாதிஸித்தமாக
கள்வனேன்—க்ருத்ரிமனுன நான்
உன்னை—உன்னை
விட்டு—ஒழிய
என்—வேறு என்னப்ரயோஜநத்தை
கொள்வன்—கொள்வேன்?
என்னும்—என்று
வாசகங்கள் சொல்லியும்—செல்லாமை தோன்றச் சொல்வதும்செய்து

(க) கீதை-கஅ-சுசு.

மனத்தை—உன்னைப் பெறுமையாலே ஶிதிலமாகிற நெஞ்சை
வலித்து—யோகயோக்யமாம்படி சிக்கெனப்பண்ணி
கண்ணநீர்- அநுபவாலாபத்தாலேவந்த கண்ணநீரையும்
கரந்து—மாற்றி, தாரணுகிமுகத்தாலே
நின்கண்—உன்பக்கலிலே
நெருங்க—ஸமாதிபர்யந்தமாம்படி சிக்கென [கென
வைத்து—வைத்து
எனது ஆவியை—என் ஆத்மாவை
நீக்க—உபாஸநமுகத்தாலே முக்தமாம்படி பண்ணிக்கொள்ள
கில்லேன்—மாட்டுகிறிலேன்;
என்கண் மலினமறுத்து என்னைக்கூவியருளாய்—நீயேபண்ணித்தந்தருளவேணுமென்றுமாம். (ச)

ஆறு;—(என்கொள்வன்.)-த்வத்ப்ராப்த்யபேக்ஷை யுண்டாயிருக்கச்செய்தேயும், த்வத்குணாநுஸந்தாநத்தாலே ஶிதிலமநஶ்சக்ஷுராதி ஸர்வகரணனாகையாலே, அவற்றை நிலைநிறுத்தித்வதேகப்ரவணமாக்கிவைக்க நான் க்ஷமனாகிறிலேன். ஆனபின்பு, நீயே உன்னுடைய நிரவதிக க்ருபையாலே என்னை இப்போது த்வதிதரஸகலவிஷயவிமுக ஸர்வகரணனாய் த்வதேகதாரகனாய் த்வத்விஶ்லேஷாஸஹிஷ்ணுவாம்படி பண்ணியருளினாய். இனி இந்த ப்ரதிபந்தகத்தையும் போக்கி உன் திருவடிகளிலே என்னை வாங்கியருளாயென்கிறார். (ச)

---

ஈடு.—அஞ்சாம்பாட்டு நீர் ''மலினம்'' என்கிறது எத்தையென்ன, இன்னதென்கிறார்.

கண்ணபிரானை விண்ணோர்கருமாணிக்கத்தையமுதை*
நண்ணியும்நண்ணகில்லேன் நடுவேயோருடம்பிலிட்டு*
திண்ணமழுந்தக்கட்டிப் பலசெய்வினைவன்கயிற்றால்*
புண்ணைமறையவரிந்தென்னைப் போரவைத்தாய்புறமே. (ரு)

ப:—அநந்தரம், கீழ் தோஷரூபமாகச்சொன்ன ப்ராக்ருதாதிகளிலே பந்தித்தாய் நீயன்றோவென்று, நிவர்த்த்யம் அவனுக்கு விதேயமானபடியை அருளிச்செய்கிறார்.

கண்ணன்—கிருஷ்ணனாய்அவதரித்து
பிரானை—(க) ''ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ'' என்று உபாயோபதேஶத்தைப்பண்ணி உபகரித்து (ஆஶ்ரயித்தவர்களை)
விண்ணோர்—நித்யஸூரிகளுக்கு தாஶநீயமான

(க) கீதை - ௧அ ௬௬.

கருமாணிக்கத்தை — விலக்ஷணவிக்ரஹத்தை அநுபவிப்பித்து
அமுதை—நித்யபோக்யமான உன்னை
நண்ணியும்—நீ தந் தஜ்ஞாநமுகத்தாலே கிட்டியிருக்கச்செய்தேயும் (போகாலாபத்தாலே)
நண்ணகில்லேன் — கிட்டாதார்கணக்கானேன்; அதுக்கடி)
நடுவே — நிர்வாணமயனான ஆத்மாவோடும் ஸ்வதஸ்ஸம்பந்தமற்று ஹேயப்ரத்யநீகனான உன்னோடும் துவக்கற்று இருவரையும் அகற்றுகைக்கு) நடுவேபுகுந்தது
ஓர்—ஓர்
உடம்பில்—உடம்பிலே
இட்டு—ஸம்ஸர்க்கிப்பித்து,
பல—பலவகையாய்,
செய்—காயிகபர்யந்தமாக அநுஷ்டிதமான
வினை—கர்மங்களாகிற
வல் கயிற்றால்—ப்ரபல பாபங்களாலே
திண்ணம்—த்ருடமாம்படி
அழுந்த—துர்விவேசமாக
கட்டி—கட்டி
புண்ணை—ஆந்தரதோஷத்தை
மறைய—காணவொண்ணாதபடி
வரிந்து—நிரந்தரமாகச் சூழ்ந்து
என்னை—(இக்கட்டு அவிழ்க்கைக்கு அஶக்தனாய் அப்ராப்தனான) என்னை
புறமே—உனக்குப்புறம்பான விஷய ப்ரசுர ஸம்ஸாரத்திலே
போர—போர
வைத்தாய் — இட்டுவைத்தாய்;
நீ நினைத்தால் விடுவிக்கலாமென்று கருத்து. (ரு)

ஆறு;—(கண்ணபிரானை.) ஸ்ரீ வைகுண்டநிலயனாய் * அயர்வறுமமரர்களதிபதியாயிருந்துவைத்து ஸர்வபோக்யனும்படிவந்து வஸுதேவக்ருஹே அவதீர்ணனான உன்னைக் கண்டுவைத்தும் உன் திருவடிகளை ப்ராபிக்கப்பெறுகிறிலேன். என்றுனென்னில்; நடுவேயோருடம்பிலிட்டுப் பலசெய்வினைவன்கயிற்றால் திண்ணமழுந்தக் கட்டிப் புண்ணைமறையவரிந்து என்னைப்போரவைத்தாய் புறமே, அதினாலே யென்கிறார். (ரு)

---

ஈடு;—அவ;—ஆறும்பாட்டு. "போரவைத்தாய்புறமே" என்று-இவர் நொந்தவாறே, 'இவருடைய இழவை மறப்பித்து உளராக்கி நடத்தவேணும்" என்றுபார்த்துத் தன்வடிவழகைக்காட்ட, அவ்வடிவழகைக் கண்டவாறே தம் உடம்பை மறந்து ப்ரீதராய், கண்டுகொண்டேனென்கிறார். இவரை மெய்ம்மறக்கப் பண்ணிற்று அவன் வடிவு.

புறமறக்கட்டிக்கொண்டிரு வல்வினையார்குமைக்கும்*
முறைமுறையாக்கை புகலொழியக் கண்டுகொண்டொழிந்தேன்*
நிறமுடைநால்தடந்தோள் செய்யவாய்செய்யதாமரைக்கண்*
அறமுயலாழியங்கைக் கருமேனியம்மான்தன்னையே. (கூ)

ப:—அநந்தரம் இத்தோஷத்தோடே யிருக்கச்செய்தே அது நெஞ்சிற் படாதபடி அவன் ப்ரகாஶிப்பித்த விலக்ஷணவிக்ரஹத்தை அநுபவிக்கப் பெற்றேனென்கிறார்.

புறம்—புறம்புஒருதலை
அற—தெரியாதபடி
கட்டிக்கொண்டு-பந்தித்துக்கொண்டு
இரு — (புண்யபாபரூபமான இருவகையையுடைய
வல்—ப்ரபலமான
வினையார்—கர்மத்தினுர்
குமைக்கும்—பீடிக்கைக்குஸ்தலமாய்
முறைமுறை — தேவாதிக்ரமவிஶிஷ்டமான
ஆக்கை—ஶரீரத்திலே
புகல்-பஹுப்ரகாரமான ப்ரவேஶத்தை
ஒழிய—தவிரும்படியாக
நிறம்—தர்ஶநீயமான வேஷத்தை
உடை—உடைத்தாய்
நால்—நாலுவகையாய்
தடம்—சுற்றுடைத்தான
தோள்—தோள்களையும்
செய்ய—சிவந்த
வாய்—}

செய்ய—சிவந்த
தாமரை—தாமரைப்போன்ற
கண்—கண்களையும்
அறம்—ரக்ஷணதர்மத்தில்
முயல்—உத்யுக்தமான
ஆழி — திருவாழியை யுடைத்தாகையாலே
அம்—பேரழகுடைய
கை—திருக்கையையு முடைத்தாய்
கரு—ஶ்யாமளமான
மேனி—வடிவையுடைய
அம்மான்தன்னை—ஶேஷியானவனை
கண்டுகொண்டொழிந்தேன் } என் இழவெல்லாம் தீரும்படி அபரோக்ஷித்து அநுபவித்து விட்டேன்;
ஆந்தரமான விக்ரஹாநுபவ ப்ரீதி "இனி ஶரீரஸம்பந்தம் நமக்கில்லை" என்கிற ப்ரதிபத்தியைப் பிறப்பித்த ... (கூ)

ஆறு:—(புறமற.) தம்முடைய இந்த தேஹஸம்பந்த ப்ரதிபந்தகம் போயிற்றென்று தோற்றும்படி தமக்கு எம்பெருமான் தன்னையுள்ளபடியே காட்டியருள, அப்படியேகண்டு ப்ரீதராய் அந்த ப்ரீத்யதிஶயத்தாலே தாம் கண்டபடியைப் பேசுகிறார். (கூ)

ஈடு:—ஏழாம்பாட்டு. அவன் க்ருபையாலே தாம் பெற்றபேற்றைக்கண்டு விஸ்மிதராய், பகவத்க்ருபை நடையாடாநிற்க, சிலர்க்கு "நான் அயோக்யன்" என்று இழக்க வேண்டாகிடிகோளென்கிறார்.

அம்மானாழிப்பிரா னவனெவ்விடத்தான்யானார்*
எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்குங்கண்டீர்*
கைம்மா துன்பொழித்தாயென்று கைதலைபூசலிட்டே*
மெய்ம்மாலாமொழிந்தேனெம்பிரானுமென்மேலானே. (எ

ப:—அநந்தரம் தன்க்ருபாதிஶயத்தாலே, எத்தனையேனும் நிக்ருஷ்டர்க்கும் ஸ்வவிஷயத்தில் ஆசையைப்பிறப்பித்துத் தானும் விரும்புமென்று, ஸ்வலாபமுகத்தாலே அருளிச்செய்கிறார்.

ஆழி—கையுந்திருவாழியுமாய்
பிரான்—ஆஶ்ரிதரை அநுபவிப்பிக்கும் மஹோபகாரகனான
அம்மான்—நிருபாதிக ஸ்வாமியான
அவன்—அவன்
எவ்விடத்தான்—(அபரிச்சிந்ந ஜ்ஞாநரான ஸூரிகளும் அளவிட்டு அநுபவிக்க வொண்ணாதபடி) எந்நிலத்திலே நிற்கிறான்?
யான்—(இவ்விஷயத்திலே க்ருதக்ரி மோக்ஷ்யாதிகளைப்பண்ணும் நிக்ருஷ்டனான) நான்
ஆர்—எவ்வளவாயிருப்பானொருவன்? (இப்படியிருக்க)
கைம்மா—(உன் திருவடிகளிலே ஆராதனத்திலே உத்யுக்தமான) ஆனையினுடைய ஜந்மாத்யபகர்ஷம் பாராதே
துன்பு—க்லேஶத்தை
ஒழித்தாய்—போக்கினவனே!
என்று—என்று
கை—கை
தலை—தலையிலேயாம்படி
பூசலிட்டே—ப்ரஸித்தமாகக் கூப்பிட்டே
மெய்ம்மால்—பாரமார்த்திக ப்ரேமத்தையுடையேன்
ஆயொழிந்தேன்—ஆய்விட்டேன்;
எம்—என் தண்மைபாராதே இப்படி திருத்தின
பிரான்—உபகாரகனானவனும்
என்மேலான்—என்பக்கலிலே அபிநிவிஷ்டனானான்:
(ஆதலால்)
எ—எத்தனையேனும்
மா பாவியர்க்கும்—மஹா பாபிகளாயிருப்பார்க்கும்
விதி—தப்பவொண்ணாத பகவத்க்ருபாரூபவிதியானது
வாய்க்கின்று—பலோந்முகமாமளவில்
வாய்க்குங்கண்டீர்—பலித்தேவிடுங்கிடிகோள். (எ)

ஆறு;—(அம்மான்.) ஸர்வப்ரகாரத்தாலும் அத்யந்தநிஹீனனாய் கைம்மாதுன்பொழித்தாயென்று பொய்யே தொழுது அலற்றுகை

யாகிற ப்ராதிகூல்யயுக்தனுமா யிருந்த என்னை, ஸர்வப்ரகாரேணுபி நிரஸ்தஸமாப்யதிகனுயிருந்ததான் தன்னுடைய நிரவதிககாருண் யத்தாலே ஸ்வவிஷய நிரதிசயா க்ருத்ரிமபக்தியுக்தனுக்கித்தா னும் நிரதிசயாபிநிவேசயுக்தனுய்க் கொண்டு என்னுள்ளேவந்து புகுந்தருளினு னென்கிருர். (எ)

---

ஈடு;—எட்டாம்பாட்டு. உபயவிபூதிநாதனானவன் என்பக்க லிலே மேல்விழுந்து என்னைவிடாதே ஹ்ருதயத்திலே புகுந்திருந் தான்; நானும் இனி நித்யஸூரிகளைப்போலே நித்யஸம்ஸாரத்தை விட்டு, அவனையே எல்லாவுறவுமுறையுமாகப் பற்றப் பார்த்தே னென்கிருர்.

மேலாத்தேவர்களும் நிலத்தேவரும்மேவித்தொழும் *
மாலார்வந்தினநாளடியேன்மனத்தேமன்னினுர்*
சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வ மும்நன்மக்களும்*
மேலாத்தாய்தந்தையுமவரேயினியாவாரே. (அ)

**ப:**—அநந்தரம், உபயவிபூதிநாதனை மேன்மையையுடையவன் என் நெஞ்சில் வந்துபுகுந்து தன் ஸர்வவிதபந்துத்வத்தையும் அநுபவிப்பியாநின் ருன் என்கிருர்.

மேலாம் — ஸர்வப்ரகாரோத்க்ருஷ்டரான
தேவர்களும்—ஸூரிகளும்
நிலம்—இவ்விபூதியில்
தேவரும் — பகவத்ஜ்ஞாநப்ரேமாதிகளாலே உஜ்ஜ்வலஸ்வபாவரான பாகவதரும்
மேவி — அநந்யப்ரயோஜநத்வாதிகளாலேஒருநீராகப்பொருந்தி
தொழும்—அநுபவிக்கும்படியான
மாலார் — ஸர்வாதிகாரானவர் (தம்முடைய மேன்மைநிற்கச்செய்தே)
இனநாள்—இப்போது
வந்து — என்பக்கலிலே அபிமுகராய் வந்து
அடியேன் — ஸர்வகாலமும் தமக்கு சேஷபூதனை என்னுடைய ஸம்பந்தமே பற்றுசாக
மனத்தே—நெஞ்சுக்குள்ளே
மன்னினுர்—ப்ரதிஷ்டிதரானுர்;
இனி—இனிமேற்பட்டு (ஔபாதிக பந்துக்கள்போலன்றியே)
சேலேய்கண்ணியரும்— விலக்ஷணத் ருஷ்டிகளான ஸ்த்ரீகளும்
பெரும்—அதிசயிதமான
செல்வமும்—ஐஶ்வர்யமும்
நல் —குணுதிகரான
மக்களும்—புத்ரர்களும் பட்ட
மேலாம் — ப்ரியஹிதங்களால் மேற்

தாய் தந்தையும்—மாதாபிதாக்களும்
அவரே—அவரே.
ஆவார்—ஆகிநிற்பர்;
இவ்வோவிஷய ஸித்திகளாற்பிறக்கும் ப்ரீதி தம்மை அநுபவித்துப்பிறக்கும்படி யாகாநின்ற றென்று கருத்து (அ)

ஆறு;—(மேலாத்தேவர்களும்) நித்ய ஸித்த புருஷர்களாலும், கர்மபூமியிலே வர்த்தமாநராய் ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்டராயிருந்து வைத்து ஸ்வாநுபவைகபோகரான திவ்யபுருஷர்களாலும் அபிவந்த்யமாநனுன எம்பெருமான் இனநாள் அடியேன்மனத்தே மன்னினுன் இனி ஸர்வகாலமும் எனக்கு, சேலேய்கண்ணியரும் பெரும் செல்வமும் நன்மக்களும் மேலாத்தாய் தந்தையும் மற்றுமெல்லாம் ஆவான் அவன் என்கிருர். (அ)

---

ஈடு;—ஒன்பதாம்பாட்டு. பலசொல்லியென்? நான் ஸம்ஸாரத்தில் பட்ட க்லேசமெல்லாந் தீரும்படி தன்க்ருபையாலே அப்ராக்ருதமான வடிவோடேவந்து கலந்தானென்கிருர்.

ஆவாரார்துணையென்றலைநீர்க்கடலுளழுந்தும்
நாவாய்போல்* பிறவிக்கடலுள் நின்றுநான்துளங்க*
தேவார்கோலத்தொடும் திருச்சக்கரம்சங்கினொடும்*
ஆவாவென்றருள்செய்தடியேனொடுமானனே. (கூ)

ப:—அநந்தரம், இப்படி ஸர்வவித பந்துவானவன் தன் அஸாதாரணவிக்ரஹத்தோடேகூட என்னோடே கலந்தா னென்கிருர்.

துணை—துணை
ஆவார்—ஆவார்
ஆர்—ஆர்
என்று—என்று சொல்லி
அலை—அலைகிற
நீர்—நீரையுடைத்தான
கடலுள்—கடலிலே
அழுந்தும்—அழுந்துகிற
நாவாய்போல்—நாவாய்போலே
பிறவிக்கடலுள்—ஸம்ஸாரஸமுத்ரமத்யத்திலே
நின்று—நின்று
நான் — (கரையேறிக்கொள்ள மாட்டாத) நான்
துளங்க—நடுங்க (அவ்விழவிலே)
தேவு—திவ்ய ஸௌந்தர்யாதிகளாலே
ஆர்—பூர்ணமான
கோலத்தொடும்—வடிவோடும்
திருச்சக்கரம் சங்கினொடும்—அவ்வடிவுக்கு ஸமாபாவஹமான திவ்யாயுதங்களோடுங்கூட
ஆஆ என்று—ஐயோ ஐயோ என்று
அருள்செய்து—க்ருபைபண்ணி
அடியேனொடும் - தன்னுடைமையான வென்னுடனே
ஆனன்—கூடினன்.
கீழ் "விதி" என்று சொல்லிப்போந்தத்தை இங்கே "அருள்" என்று வெளியாக்கினாராயிற்று.
தேவு—அழகு; திவ்யமாய் அப்ராக்ருதமென்றபடி (க)

ஆறு;—(ஆவாரார்) ஆவாரார்துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய்போல் பிறவிக்கடலுள்ளே அதிதயநீயனும் படி நின்று நான்நடுங்க, எம்பெருமான் தன்னுடைய நிரவதிக காருண்யத்தாலே யாவாவென்று அருள்செய்து தன்னுடைய ஸர்வலோகேஶ்வரத்வ ஸூசகமான நிரவதிகஸௌந்தர்யத்தோடும் திருவாழி திருச்சங்கு தொடக்கமாகவுள்ள திவ்யாயுதங்களோடுங் கூட வந்து, அவர்களோடு கலந்தருளுமாபோலே அடியேனோடும் கலந்தருளினா னென்கிறார். (கூ)

---

ஈடு; அவ;—பத்தாம்பாட்டு. அவன் தன் க்ருபையாலே ஶப்தாதிவிஷய ப்ராவண்யத்தை யறுத்துத் தன்பக்கலிலே ருசியைப்பிறப்பித்த மஹோபகாரத்தையநுஸந்தித்த க்ருதஜ்ஞதைபேபற்றாசாக வந்து, என்னோடே நிரவதிகஸம்ஶ்லேஷத்தைப் பண்ணினானென் கிறார்.

ஆறனுடையானென்றஃதேகொண்டுகந்துவந்து*
தானேயின்னருள்செய்தென்னை முற்றவுந்தானான்*
மீனாயாமையுமாய் நரசிங்க முமாய்க்குறளாய்*
கானேனமுமாய்க் கற்கியாமின்னங்கார்வண்ணனே. (கO)

ப:—அநந்தரம், இப்படி அஸாதாரணவிக்ரஹ விஶிஷ்டனானவன் தன்னுடைய ஸர்வாவதாரங்களையும் அநுபவிப்பித்துக்கொண்டு என்பக்கலிலே கலந்தானென்கிறார்.

(ஜகத்ரக்ஷணார்த்தமாக)
மீன் ஆய்—மத்ஸ்யமும்
ஆமையும்ஆய்—கூர்மமும்
நரசிங்கமும்ஆய்—நரஸிம்ஹமும்
குறளாய்—வாமனமும்
கானேனமும்—வநவராஹமும்
ஆய்—ஆய்
இன்னம்—இன்னமும்
கற்கி—கல்கியும்
ஆம்—ஆவதான
கார்—காளமேகம் போலே ஶ்யாமளமான
வண்ணன் — அஸாதாரண விக்ரஹத்தை யுடையவன் (என்னை)
ஆள்—அடிமையாக
உடையான்—உடையன்
ஆறன் — ஆறன்;
என்று —என்கிற
அஃதே—அந்த உக்திமாத்ரமே
கொண்டு—பற்றாசாகக்கொண்டு
உகந்து—அதிப்ரீதனாய்
வந்து—வந்து
தானே — அபேக்ஷா நிரபேக்ஷமாகத் [தானே
இன்—நிரதிஶயபோக்யையான

அருள்—க்ருபையை
செய்து—பண்ணி
என்னை—என்னைப்பற்ற
தான்—தான்
முற்றவும் — ஸகலாவதார விஶிஷ்டனாய்க்கொண்டு
ஆனான்—ஸம்ஶ்லேஷித்தான்
அவ்வவதாரவைலக்ஷண்யங்களை யநுபவிப்பித்தானென்று கருத்து (க0)

ஆறு;—(ஆனானுடையானென்று.) தான் என்னோடே பண்ணின ஸம்ஶ்லேஷத்தை அநுஸந்தித்தவித்தனைபுமேகொண்டு உகந்துவந்து தானே இன்னருள்செய்து, இதுக்கு முன்பு என்னோடு ஒன்றும் ஸம்ஶ்லேஷியாதானாய்க்கொண்டு என்னை வேறுபடக்காணவொண்ணாத தொருபடி ஸம்ஶ்லேஷித்து, இதுக்குமுன்பு தான் பண்ணியருளின ஸர்வதிவ்யாவதாரங்களையும் எனக்குபோக்யமாகக் காட்டியருளினான்; ஆதலால், இதற்குமுன்பு தான்பண்ணியருளின இந்தத் திருவவதாரங்களெல்லாம் என்பக்கலுள்ள அபிநிவேஶத்தாலே; வேறுமெனக்காகப்பண்ண எண்ணினதுக்கும்முடிவுண்டோ வென்கிறார். (கூ0)

---

ஈடு; அவ;—நிகமத்தில்-இப்பத்தை அப்யஸிக்கவல்லார், நிரவதிக ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயையுடையராய் அவன் திருவடிக்கீழே புகப்பெறுவரென்கிறார்.

கார்வண்ணன் கண்ணபிரான் கமலத்தடங்கண்ணன்தன்னை*
ஏர்வளவொண்கழனிக் குருகூர்ச்சடகோபன்சொன்ன*
சீர்வண்ணவொண் தமிழ்களிவையாயிரத்துளிப்பத்தும்*
ஆர்வண்ணத்தாலுரைப்பாரடிக் கீழ்ப்புகுவார்பொலிந்தே. (கக)

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

ப:—அநந்தரம், இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லவர்கள் ஆவிர்ப்பூதஸ்வரூபகுண ஸம்பத்விஶிஷ்டராய்க்கொண்டு க்ருஷ்ணன் திருவடிகளை ப்ராபிப்பர்களென்று பலத்தை அருளிச்செய்கிறார்.

கண்ணன்-க்ருஷ்ணனாய்வந்தவதரித்த
பிரான்—மஹோபகாரகனாய் (ஆஶ்ரிதர்க்குஉபகரிக்கும்
கார்-காளமேகம் போலேஶ்ரமஹரமான
வண்ணன்—வடிவையும்
கமலம்—தாமரைபோலே
தடம்—பெருத்த
கண்ணன்தன்னை—கண்களையுமுடையவனை
ஏர்—ஏர்களின்
வளம்—மிகுதியையுடைத்தாய்
ஒண்—ஶ்லாக்யமான
கழனி—கழனியை யுடைத்தான
குருகூர்—திருநகரிக்கு நிர்வாஹகரான

சடகோபன்—ஆழ்வார்
சொன்ன—அருளிச்செய்த
சீர்—சீரும்
வண்ணம்—சந்தமுமுடைத்தாய்
ஒண்—அர்த்த ப்ரகாஶகமாகையாலே நலல்
தமிழ்கள்—த்ராமிடரூபமாயிருக்கிற
இவை—இவை
ஆயிரத்துள் — ஆயிரந்திருவாய்மொழியிலும்
இப்பத்தும்—இப்பத்தையும்
ஆர்வணணத்தால்—(க)"ஙவ ப யாய யஞ்தி- ஙவயோத யந்தி" என்கிற படியே) அம்ருத பாநம் பண்ணுவாரைப்போலே
உரைப்பார்—சொல்ல வல்லவார்கள்
பொலிந்து—ஆவிர்ப்பூதமான ஸ்வரூப குணபிவ்ருத்தியை யுடையராய்க்கொண்டு
அடிக்கீழ்—அந்த க்ருஷ்ணன் திருவடிகளை
புகுவார்—ப்ராபிப்பர்கள்.
ஆர்வண்ணத்தா லுரைப்பாரென்று—ஸ்வச்சந்தத்தாலே உரைக்குமவர்களார், அவர்கள் அடிக்கீழ்ப்புகுவார்க ளென்றுமாம்.
இது—கலித்துறை. (கக)

ஆறு;—(கார்வண்ணன்.) *நீலமேகநிபனாய் புண்டரீகதளாமலாயதேக்ஷணனாய் ஆஶ்ரிதஸுலபனான எம்பெருமானைச் சொன்ன இத்திருவாய்மொழியை ஆர்வண்ணத்தாலுரைப்பார் பகவச்சேஷைதகரதிகளாய்க் கொண்டு அவன் திருவடிகளின்கீழே புகப்பெறுவரென்கிறார். (கக)

அஞ்சாம்பத்து முதல் திருவாய்மொழி
வ்யாக்யாநம் முற்றிற்று.

---

(க) ஶ்ரீகுண-எ.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## இரண்டாந்திருவாய்மொழி — பொலிகபொலிக ப்ரவேசம்.

ஆறு;— *ஒன்றுந்தேவில் தம்முடைய உபதேசத்தாலே வைஷ்ணவீக்ருதரான ஜநங்களைக் கண்டு நிரதிஶயஹர்ஷயுக்தராய், அந்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலே அவர்களைத் திருப்பல்லாண்டு பாடுகிறார். *

**ப:**— இரண்டாந் திருவாய்மொழியில், கீழ்-பகவத்க்ருபாபாரவஶ்யத்தை அநுஸந்தித்து ஸந்துஷ்டரான ஆழ்வாருடைய ப்ரீதியை அநுபவிக்கைக்கு, பகவத்குணாநுபவவித்தராய் ஸூரிஸமரான பாகவதர்கள் ஸம்ஸாரத்தில் துரிதமெல்லாம் நீங்கும்படி ப்ரேமபரவஶராய்த் திரண்டுவந்தபடியைக் கண்டு, "ஈஶ்வரன் இவர்களையிட்டு ஜகத்தைத் திருத்த நினைத்தானாகக்கூடும்" என்று திருவுள்ளம்பற்றி; அவனுடைய நிரதிஶயமாஹாத்ம்யத்தையும், மாஹாத்ம்யப்ரகாஶகமான ஶ்ரிய:பதித்வாதி சிஹ்நத்தையும், ஆஶ்ரிதோபகாரகமான விக்ரஹாதியோகத்தையும், உபகாரார்த்தமான ஸமுத்ரஶாயித்வத்தையும், அதுக்குமடியான ஸ்ரீவைகுண்டவாஸத்தையும், ஆஶ்ரிதரக்ஷணார்த்தமான ஆயுதவத்தையையும், அவதாரதசையிலுண்டான அதிஶயிதாதிக்யத்தையும், ஆதிக்யலக்ஷணமான ஸ்ரீவத்ஸசிஹ்நத்தையும், ஆஶ்ரிதவிஷயத்தில் அப்ரச்யுதஸ்வபாவத்தையும், அதிஶயிதஶீலவத்தையையுமநுஸந்தித்து, 'இவ்வோ ஸ்வபாவங்களில் வித்தரான பாகவதர் இங்கே ஸந்நிஹிதராகப்பெறுவதே!" என்று ஹ்ருஷ்டராய் மங்களாஶாஸநம்பண்ணி, இவர்களையநுவர்த்தித்து ஶாந்தஸ்வபாவராய் இவர்களோடொக்க நீங்களும் பகவத்விஷயத்தை யநுபவிக்கப் பாருங்கோளென்று லௌகிகரைக்குறித்து உபதேஶித்தருளுகிறார். *

ஈடு அவ;— இத்திருவாய்மொழியை ஆளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி — "ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயைக் காண்கைக்காக நித்யஸூரிகள் இங்கேவர, அவர்களைக்கண்டு மங்களாஶாஸநம்பண்ணுகிறார்" என்று. *"நண்ணாதார் முறுவலிப்பவிலே-ஸம்ஸாரிகள் படுகிற க்லேஶத்தை யநுஸந்தித்து, அதுக்குப் பரிஹாரமாக, *ஒன்றுந்தேவிலே-பகவத்பரத்வத்தை உபபாதித்துத் திருத்த, அத்தாலே திருந்தி ஸம்ஸாரபரமபதவிபாகமற்று அங்குள்ளாரும் இங்கே வரலாம்படியிருக்கிற இருப்பைக் கண்டு மங்களாஶாஸநம் பண்ணுகிறார்" என்று, இங்

குள்ளார் பக்கலிலே ப்ராதாந்யந்தோற்ற எம்பெருமானார் அருளிச்செய்யும்படி.

தாம் பகவத்பரத்வத்தை உபபாதிக்க, அத்தாலேதிருந்தின ஸாத்விகரடைய விஸ்த்ருதராயிருக்கிறபடியையும், ராஜஸராயும் தாமஸராயு முள்ளார் அநவதாநத்தாலும் அஜ்ஞாநத்தாலும் ஸங்குசிதராயிருக்கிறபடியையும், ஸாத்விகர் பரிக்ரஹித்ததாகையாலே உத்தமதர்மமான வைஷ்ணவதர்மமே ப்ரஸித்தமாய்ப் போருகிற படியையும், அதுக்கு விருத்ததர்மங்கள் அபிபூதமாய்ப் போருகிற படியையும், தேசகாலங்கள் அதிகாரிகள் அங்கங்கள் என்கிற வற்றுக் குண்டான நன்மைகள், (க) "ஸர்வேஷாம் கிலதர்மாணாம் உத்தமோ வைஷ்ணவோவிதிः- ஸர்வேஷாம்கிலதர்மாணாமுத்தமோ வைஷ்ணவோவிதி:" என்கிறபடியே - பகவத்ஸ்பர்ஶத்தாலேயாயிருக்கிறபடியையும், அது இல்லையாகில் எல்லாநன்மைகளு முண்டாறுலும் அவையடையத் தண்ணிதாயிருக்கிறபடியையும் சொல்லி, தம்மாலே திருந்தின ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவடிகளிலே விழுந்தும், திருந்துகைக்கு யோக்யதையுடையாரைத் திருத்தியும், திருந்தாதாரை உபேக்ஷித்தும், இப்படி பாகவத ஸம்ருத்திக்கு மங்களாஶாஸநம் பண்ணுகிறார்.

ஈடு; அவ;—முதற்பாட்டு. ஸ்ரீவைஷ்ணவ ஸம்ருத்தியைக் கண்டு மங்களாஶாஸநம் பண்ணுகிறார்.

பொலிகபொலிகபொலிக போயிற்றுவல்லுயிர்ச்சாபம்*
நலியும்நரகமுந்நைந்த நமனுக்கிங்கியாதொன்றுமில்லை*
கலியுங்கெடுங்கண்டுகொண்மின்கடல்வண்ணன்பூதங்கள்மண்மேல்*
மலியப்புகுந்திசைபாடி ஆடியுழிதரக்கண்டோம். (க)

முதற்பாட்டில், நிரவதிக மாஹாத்ம்யயுக்தனை ஸர்வேஶ்வரனாலே லப்தஸத்தாகரான பாகவதருடைய ஸம்ருத்தியைக் கண்டு மங்களாஶாஸநம்பண்ணுகிறார்.

| | |
|---|---|
| கடல்—ரத்நாகரமாய்தர்ஶநீயமானகடல் போலே | த்மயனை ஸர்வேஶ்வரனாலே |
| வண்ணன் — குணவைலக்ஷண்யத்தாலும் ரூபவைலக்ஷண்யத்தாலும்அபரிச்சிந்நமாஹா | பூதங்கள் - (லப்தஸ்வரூபஸத்தாகரான) பாகவதரானவர்கள் |

(க) பாரத-மோக்ஷ-அ-

மண்மேல் — (பகவத் குணங்களுக்கு மேட்டுமடையான) பூமியிலே
மலிய—ஸம்ருத்தமாம்படி
புகுந்து—வந்துபுகுந்து (பகவத்குணங்களை)
இசை—இசையிலே
பாடி—பாடி
ஆடி—(ஹர்ஷப்ரகர்ஷத்தாலே ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணி
உழிதர—எங்கும்வ்யாபரிக்க
கண்டோம்—கண்டோம்; (ஆதலால்)
வல்லுயிர்ச்சாபம்—ஆத்மாவுக்கு வந்தேறியாய் அநுபவவிநாஶ்யமாய் ப்ரபலமான அவித்யாதிரூபமான சாபமானது
போயிற்று—நஶித்துப்போயிற்று; (அவித்யாகர்மாதிகள் போகையாலே)
நலியும்—தத்பலமாய் நலியும்
நரகமும்—நரகங்களும்
நைந்த—இற்றலமாயிற்றின; (ஆதலால்)
நமனுக்கு — தந்நிர்வாஹகனை யமனுக்கு
இங்கு—இந்தவிபூதியில்,
யாது — நிர்வாஹ்ய மாயிருப்பதேதேனும்
ஒன்றும்—ஒரு அம்ஶமும்
இல்லை—இல்லை,
கலியும் — இதுக்கெல்லாம் அடியான காலதோஷமும்
கெடும்—நஶியாநிற்கும்
கண்டுகொண்மின்—இது (க) "கலௌ க்ருதயுகம் தஸ்ய"
என்கிறபடியே கார்த்தயுகதர்மவ்ருத்திகளான பாகவதஸந்நிதியாலே வந்தது" என்னுமிடம் ப்ரத்யக்ஷித்துக் கொள்ளுங்கோள்
பொலிக பொலிகபொலிக—இது ஸம்ருத்தமாகவேணும்.
த்ரிராவ்ருத்தி—(உ) "ஶாந்தி ஶாந்தி ஶாந்தி:-ஶாந்தி ஶ்ஶாந்தி ஶ்ஶாந்தி:" என்கிற ஶ்ருதிச்சாயையாலே. பூதஸப்தம் கபும்ஸகமாகையாலே அஃறிணை. (க)

ஆறு; —(பொலிக.) ஸர்வாத்மாக்களுடைய ஸர்வபாபங்களும் போய், தத்பல பூமியான நரகங்களும் தத்பல யாதநாரஹிதங்களாய், தத்பலாநுபவப்ரயோஜகனை யமனும் ஸ்வகர்த்தவ்யரஹிதனாய், இனிமேலும் ரௌரவாதிநரகயாதநாஸ்பதமான அவைஷ்ணவஜந்துக்கள் உளவாகாதபடியாகவும், எம்பெருமானுடைய அபரிமித கார்பிர்யௌதார்யாதி கல்யாணகுணாநுபவ லப்தஸத்தாகரான ஸ்ரீவைஷ்ணவர்கள் இந்தஜகத்தெல்லாம் நிறையும்படி வந்து புகுந்து, எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுணவிபவ சேஷ்டிதங்களைப் பாடி யாடி வர்த்திக்கக் காணப்பெற்றோம்; இந்த ஸம்ருத்தி நித்யஸித்தையாகவேணுமென்கிறார். (க)

---

(க) விஷ்ணுதர்மம்-கoக-ருஎ. (உ) தை-ஶீ

ஈடு அவ;—இரண்டாம் பாட்டு. இவ்வைஷ்ணவ ஸம்ருத்தியை அநுபவிக்கைக்கு அநுகூலரெல்லாரும் வாருங்கோ ளென்கிறார்.

கண்டோங்கண்டோங்கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம்*
தொண்டீரெல்லீரும்வாரீர் தொழுதுதொழுதுநின்றார்த்தும்*
வண்டார்தண்ணந்துழாயான் மாதவன் பூதங்கள்மண்மேல்*
பண்தான்பாடிநின்றாடிப் பரந்துதிரிகின்றனவே. (உ)

ப:—அநந்தரம், பாத்வப்ரகாஶகமான ஶ்ரிய:பதித்வாதிகளையுடைய ஸர்வேஶ்வரன்குணங்களிலே வித்தரான பாகவதரைக் கண்டுகந்து, மங்களாஶாஸநம்பண்ண வாருங்கோளென்று அநுகூலவர்க்கத்தைக் கூட்டிக்கொள்ளுகிறார்.

வண்டு—வண்டுகளாலே
ஆர்—பூர்ணமாய்
தண் அம்—செவ்வியையுடைத்தான
துழாயான் — திருத்துழாய்மாலையையுடையனுய்
மா—அவ்வழகையநுபவிக்கிற லக்ஷ்மிக்கு
தவன் — வல்லபனுன ஸர்வேஶ்வரனுக்கு
பூதங்கள்—பேஷபூதரானவர்கள்
மண்மேல்—(இந்தபோக்யதைக்கு நிலவரில்லாத) பூமியின்மேல்
(அநுபவபாவஶராய்க்கொண்டு)
பண்தான்—பண்மிகும்படி
நின்று—நின்று
பாடி—பாடி
ஆடி—(ப்ரேமபார வஶ்யத்தாலே) ஆடி
பரந்து—எங்கும்பரந்து
திரிகின்றன—வ்யாபரியாநின்றார்கள்;
கண்ணுக்கு—நம்கண்ணுக்கு
இனியன—போக்யமானஸம்ருத்திகளை
கண்டோம்—காணப்பெற்றோம்.
கண்டோம் கண்டோம் கண்டோம் — ஒருகால்கண்டு விடுகையன்றியே, (க)"ஸஹஸ்ரநாத: அஹமந்நாத:" என்று த்ரிராவ்ருத்திபோலே நிரந்தராநுபவம் பண்ணப்பெற்றோம்.
தொழுதுதொழுது—இந்தப்ரீதிபரவஶராய்க்கொண்டு நிரந்தராநுவ்ருத்திபண்ணி
நின்று—நின்று
ஆர்த்தும் — ஸஹர்ஷகோலாஹலம் பண்ணுவோம்;
தொண்டீர்—பகவத்பாகவத விஷயத்தில் அநுகூலரானவர்களே!
(இப்போகத்தையிழவாதே)
எல்லீரும்—எல்லாரும்
வாரீர்—வாருங்கோள். (உ)

ஆறு;—(கண்டோம்.) கண்டோம் கண்டோம் கண்டோம்,கண்ணுக்கினியன கண்டோம், தொண்டீரெல்லீரும்வாரீர், தொழுது தொழுது நின்றார்த்தும். அது என்? என்னில்:—வண்டார்தண்ணந்துழாயான் மாதவன்பூதங்கள் மண்மேல் பண்தான்பாடி நின்றாடிப் பரந்து திரிகின்றனவென்கிறார். (உ)

---

(க) தை-ப்ருகு-கo.

ஈடு; அவ;—மூன்றும்பாட்டு. நித்யஸூரிகளுக்கும் புகுந்து பரி மாறலாம்படி ஸம்ஸாரமடைய ஸ்ரீவைஷ்ணவர்களே யாயிற்றுஎன் கிறார். (௩)

திரியுங்கலியுகம்நீங்கித் தேவர்கள்தாமும்புகுந்து*
பெரியகிதயுகம்பற்றிப் பேரின்பவெள்ளம் பெருக*
கரியமுகில்வண்ணனெம்மான் கடல்வண்ணன்பூதங்கள்மண்மேல் *
இரியப்புகுந்திசைபாடி எங்குமிடங்கொண்டனவே. (௩)

ப:—அநந்தரம், ஆஸ்ரிதார்த்தமான வடிவையுடையனான ஸர்வேஸ்வர னுடைய ஸௌந்தர்யாதிகளில் வித்தரான பாகவதர், இந்தவிபூதி ஸூரிகளுக் கும் நிலமாம்படி ஸர்வப்ரதேசத்திலும் அவஷ்டம்பித்தார்க ளென்கிறார்

திரியும்—சேதநருடைய ஸ்வபாவங்கள் அதரோத்தரமாம்படியான
கலியுகம்—கலியுகம்
நீங்கி—கடக்கப்போய்
தேவர்கள்— (அஸ்கலிதஜ்ஞாநைஸ்வர்யத்தையுடைய) ஸூரிகளும்
தாமும்—ஸ்வயமேவ
புகுந்து—ப்ரவேஶித்து
பெரிய — (யுகாந்தரவிச்சேதமில்லாதபடி) ஏகாகாரமாய்வளர்ந்த
கிதயுகம்—க்ருதயுகமானது
பற்றி—கைக்கொண்டு
பேரின்பவெள்ளம் - பகவதநுபவஜநிதமான அபரிச்சிந்நாநந்த ஸாகரம்
பெருக—மேன்மேலும் பெருகும்படியாக
கரிய—ஶ்யாமளமான
முகில் — மேகம்போலே அநுபாவ்யமான
வண்ணன்—வடிவை யுடையனாய்க்கொண்டு
எம்மான்—எனக்கு ஸ்வாமியாய்
கடல்வண்ணன் -அநவதிககுண ஸாகரனான ஸர்வேஸ்வரனுடைய
பூதங்கள் — ஸ்வபாவங்களிலே வித்தரான பாகவதர்
மண்மேல்—இப்பூமியிலே
இரிய—ப்ரீதிகோலாஹலம் பிறக்கும்படி
புகுந்து—ப்ரவேசித்து (ஹர்ஷத்தாலே)
இசை—கீதங்களை
பாடி—பாடிக்கொண்டு
எங்கும்—ஸர்வப்ரதேஶங்களும்
இடம் கொண்டன— தங்களுக்கிடமாம்படி கைக்கொண்டார்கள்.
தொழுது தொழுது நின்றார்த்தும்—வாரீரென்று அந்வயம். (௩)

ஆறு:—(திரியும்.) வைஷ்ணவதர்ம விபர்யயஹேதுவான கலியு கம் நீங்கி, ஸர்வகாலமும் கலியுகாத்ய வ்யவஹிதமாய்க்கொண்டு கேவல க்ருதயுகமேயாய்ச் செல்லும் படியாகவும், *அயர்வறுமமரர் களும் புகுந்து பேரின்பவெள்ளம் பெருகும்படியாகவும், கரியமுகில்

திருக்கோளூர்க்கே—திருக்கோளூர்க்கே
கசிந்தநெஞ்சினளாய்—ஆர்த்ரசித்தையாய்
எம்மை—என்னை
நீத்த—விட்ட
எம்காரிகை—அபிஜாதையான என் பெண்பிள்ளை
ஒசிந்த—பண்டேதளர்ந்த
நுண்—மெல்லிய
இடைமேல்—இடையின்மேலே (தன் இளைப்பாலே)
கையை—கையை
வைத்து—வைத்து, (அதுதானே யடியாக)
நொந்துநொந்து—மேன்மேலும் நொந்து
கசிந்தநெஞ்சினளாய்—நெஞ்சிலீரப் பாடே துணையாகவுடையளாய்
கண்ணநீர்—கண்ணநீர்
துளும்ப—அலையும்படி
செல்லுங்கொல்—சென்றுவிடக்கூடுமோ? (அ)

ஆறு ;—(ஒசிந்த.) - வண்டாலே துகையுண்ட பூமாலைபோலே எம்பெருமானோடுள்ள கலவியாலே ஒசிந்ததிருமேனியையுடைய பிராட்டியோடே திருக்கோளூரிலே அவன் கண்வளர்ந்தருளுகிற படியைக் காணவேணுமென்னும் ஆசையாலே என்னைப் பொகட்டுப் போன என் காரிகை, வ்யஸநத்தாலே மெலிந்தநுண்ணிடைமேலே ப்ரமாதிஶயத்தாலே கையைவைத்து நொந்துநொந்து கண்ணீர் துளும்ப, அவ்வழிநிவேஶமே துணையாக, அவ்வூரிலேபுக்குமுடியவல்லளேயோ? என்கிறாள். (அ)

---

ஈடு ; அவ ;—ஒன்பதாம்பாட்டு. அவன் பக்கலிலே அத்யந்த ப்ரவணையாயிருக்கிற இவள், சேரியிலுள்ளார் சொல்லும்பழியே பாதேயமாகத் திருக்கோளூர்க்கே போனாளென்கிறாள்.

காரியம்நல்லனகளவைகாணி லென்கண்ணனுக்கென்று *
ஈரியாயிருப்பாளிதெல்லாங்கிடக்க வினிப்போய் *
சேரியல்பழிதூயிரைப்பத் திருக்கோளூர்க்கே *
நேரிழை நடந்தாளெம்மையொன்றும்நினைத்திலளே. (கூ)

ப.—அநந்தரம். நல்லது கண்டால் தனக்கு ஸாலபனான க்ருஷ்ணனுக்கு என்றிருக்குமவள், ஊரார்சொல்லும் பழியை மதியாதேபோனாளென்கிறாள்.

நல்லனகள்—நன்றாய்
காரியம்—செய்திப்பாட்டையுடைத்தான
அவை—பதார்த்தங்களானவற்றை
காணில்—காணில்
என்—எனக்குபவ்யனான
கண்ணனுக்கு—க்ருஷ்ணனுக்கு
என்று—என்று

சரியாய்——ஆர்த்ரஸ்வபாவையாய்
இருப்பாள்——இருப்பாளாய்
நேர்——மெல்லிய (இவள்
இழை——ஆபரணத்தையுடையவளான
இது——ததர்த்தமாகத் தான் ஸங்கல்பித்த இவ்விபூதி
எல்லாம்——எல்லாம்
கிடக்க——கிடக்க
இனி——பின்னையும்
போய்——விட்டுப்போய்
சேரி——சேரியில்உள்ளார்
பல——பலவகையும்
பழி——பழி
தூஉய்——தூற்றி
இரைப்ப——கோஷியாநிற்க
திருக்கோளூர்க்கே——திருக்கோளூர்க்கே
நடந்தாள்——நடந்துசென்றாள்;
எம்மை——என்னையும்
ஒன்றும்——ஒருபடியும்
நினைத்திலள்——நினைத்திலள்;
ஊராராகவும் நினைத்திலள் ; உடன்பாடையாகவும் நினைத்திலள் என்று கருத்து. (கூ)

ஆறு ;—(காரியம்) - அதிமநோஹரமான போக்யவஸ்துக்களைக் காணில், இவையெல்லாம் என்கண்ணனுக்கென்று சொல்லாநிற்கும் இப்பெண்பிள்ளை, தனக்காக நாங்கள் கொண்டுவந்த போக்யபதார்த் தங்களையும் எங்களையும் ஒரு த்ருணமாக நினையாதே பொகட்டு, லோகமெல்லாம் "இவள் தனியேபோனாளே" என்று பழிசொல்லி இரைக்கும்படியாகத் திருக்கோளூரிலே போனாள் என்கிறாள். (கூ)

---

ஈடு ; அவ ;—பத்தாம்பாட்டு. இக்குடிக்குவரும் பெரும்பழி யைநினையாதே, திருக்கோளூரிலேபுக்கு அவனையொருகாலும் விடு கிறிலளென்கிறாள்.

நினைக்கிலேன்தெய்வங்காள்! நெடுங்கணிளமானினிப்போய் *
அனைத்துலகுமுடைய வரவிந்தலோசனனை *
தினைத்தனையும்விடா ளவன்சேர் திருக்கோளூர்க்கே *
மனைக்குவான்பழியும்நினையாள் செல்லவைத்தனளே. (கo)

ப.—அநந்தரம், அகிலஜகத்ஸ்வாமியான அரவிந்தலோசநனை ஏகதேசமும் விடாளாகக்கொண்டு குடிப்பழியும்பாராதே அவ்வூரிலே புக்குவிட்டாளென்கிறாள்.

தெய்வங்காள் —தெய்வங்காள்!
நினைக்கிலேன்——(இவளுடைய அதிப்ரவ்ருத்தி) நினைக்கமாட்டுகிறிலேன்;
நெடு—— அவன்பெருமையை எல்லாம் தன்னகவாயிலேயாக்கும்படி) பெரிய
கண்——கண்ணையுடையளாய், (பருவத்தைப்பார்த்தால்)

| | |
|---|---|
| இளம்—முக்தமான | அவன்—அவன் |
| மான்—மான்போலேயிருக்கிற இவள் | சேர்—வர்த்திக்கிற |
| இனி—(தன்கண்ணழகு தனக்குண்டாயிருக்கப்) பின்னையும் | திருக்கோளூர்க்கே—திருக்கோளூர்க்கே |
| போய்—போய் | செல்லவைத்தனள்—சடக்கெனச்சென்றாள்; (தான் செல்லுகை) |
| அனைத்துலகும்—ஸர்வலோகத்துக்கும் | மனைக்கு—குடிக்கு |
| உடைய—ஸ்வாமியானவைக்குத் தகுதியான | வான்—மிக்க |
| | பழி—பழியென்றும் |
| அரவிந்தலோசநனை—அரவிந்தலோசநனை | நினையாள்—நினைக்கிறிலள். |
| | "செல்லவைத்தனள்" என்று லோகோக்தியாலே கடுகச்சென்றாள் என்று கருத்து. (௧0) |
| தினைத்தனையும்—சிறிதுபோதும் | |
| விடாள்—விடாளாய்க்கொண்டு | |

ஆறு ;—(நினைக்கிலேன்.) - தன் திருக்கண்களின் அழகாலே ஸர்வலோகங்களையும்தோற்பித்து அடிமையாக்கிக்கொண்டிருக்கிறவனுடைய திருக்கண்களைக் கண்டல்லது ஒரு க்ஷணமாத்ரமும் தரிக்கமாட்டாதிருக்கிற நெடுங்கண் இளமான், இனி இது குடிப்பழி என்னுமிடமொன்றும் நினையாதே, அவன்சேர் திருக்கோளூர்க்கே போய்ப்புக்காள்; இவளைப்பிரிந்த வ்யஸநாதிஶயம் நினைக்கவும் கூடுகிறதில்லையென்று சொல்லி, பின்னையும் தன்செயலறுதியாலே தெய்வங்காள்! என்று கூப்பிடுகிறாள். (௧0)

---

ஈடு ; அவ ;—நிகமத்தில் இப்பத்தும் கற்றார் இட்டவழக்கு திருநாடு என்கிறார்.

வைத்தமாநிதியாம்மதுசூதனையேயலற்றி *
கொத்தலர்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
பத்துநூற்றிளிப்பத்தவன்சேர்திருக்கோளூர்க்கே *
சித்தம்வைத்துரைப்பார் திகழ்பொன்னுலகாள்வாரே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை ஸஹ்ருதயமாகச் சொல்ல வல்லவர்கள், பரமபதத்துக்கு நிர்வாஹகராவரென்று பலத்தை அருளிச்செய்கிறார்.

| | |
|---|---|
| வைத்த—சேமித்துவைத்த | அலற்றி—(அலாபநிபந்தநமான) ஆர்த்தியாலேயலற்றி |
| மாநிதியாம்—மஹாநிதிபோலே, (நிரதிஶயப்ராப்யபூதனாய்) | கொத்து—பூங்கொத்து |
| மதுசூதனை—போகப்ரதிபந்தகவிரோதிநிரஸநஶீலனானவனை | அலர்—அலருகிற |
| | பொழில்—சோலையாலே |

சூழ்—சூழப்பட்ட
குருகூர்—திருநகரிக்கு நிர்வாஹகரான
சடகோபன்—ஆழ்வார்
சொன்ன—அருளிச்செய்த
பத்து—(ஒரோ அர்த்தவிசேஷங்களுக்கு வாசகமான) பத்தான
நூற்றுள்—நூற்றினுள்ளும்
இப்பத்து—ப்ராப்யத்வாப்ரகாசகமானவிப்பத்தை
அவன்—அவன்
சேர்—வர்த்திக்கிற
திருக்கோளூர்க்கே—திருக்கோளூர்க்கே
சித்தம்—நெஞ்சை
வைத்து—வைத்து
உரைப்பார்—சொல்லவல்லார்
திகழ்—பகவதநுபவௌஜ்ஜ்வல்யத்தையுடைத்தாய்
பொன்—ஶ்லாக்யமான
உலகு—பரமபதத்தை
ஆள்வார்—தாங்கள் நினைத்தபடி நிர்வஹிக்கப்பெறுவர்கள்.
இது—கலித்துறை (கக)

ஆறு ;—(வைத்தமாநிதி) - ஆழ்வார், விஶ்லேஷமாகிற ஆபத்துக்குத் தமக்கு வைப்பாகவைத்த மஹாநிதியாயிருந்த எமபெருமானையே அலற்றிச்சொன்ன இத்திருவாய்மொழியை, திருக்கோளூர்க்கே ப்ரவணமான மநஸ்ஸையுடையராய்க்கொண்டு சொல்லுவாரிட்ட வழக்காம் திருநாடு என்கிறார். (கக)

ஆறும்பத்து ஏழாந்திருவாய்மொழி வ்யாக்யானம் முற்றுபெற்றன.

---



ஸ்ரீபதேராமாநுஜாயநம:

எட்டாந்திருவாய்மொழி — பொன்னுலகு ப்ரவேசங்கள்.



*ஆறு ;—(பொன்னுலகாளீரோ.) - திருக்கோளூரிலே போய்ப் புக்கு எம்பெருமானோடு ஸம்ச்லேஷித்ததெல்லாம் மநோரதமாத்ர மாய், பழையபடியே எம்பெருமானைக் காணப்பெறாமையாலே தத் விரஹஸஹமாநராய், அந்யாபதேசத்தாலே ஒரு பிராட்டியாய் அவனைக்குறித்து தூதப்ரேஷணம்பண்ணுகிறார் ; இப்படித் திருக் கோளூரிலே எழுந்தருளின பிராட்டிபோடுள்ள சிரகால ஸம்ச் லேஷ ஜநிதாநவதிகாநந்த மஹார்ணவாந்தர்நிமக்நனான எம்பெரு மான், அந்த வாநந்தவெள்ளம் தனக்கு அஸாத்ம்யமானவாறே அது ஸாத்மிக்கைக்காக விச்லேஷித்து நெடுங்காலமெழுந்தருளாதிருந்த வாறே, தத்விச்லேஷத்தாலே அத்யந்தம் அவஸந்நையானபிரா ட்டி, தன்னுடைய ஆற்றாமையாலே அவனைக்குறித்துச் சிலபக்ஷி களைத் தூதாகவிடுகிறாளென்றுமாம். "திருக்கோளூரிலே போய்ப் புகவேணும்" என்று புறப்பட ...ப்பிராட்டி, தன்னுடைய அவ ஸாதத்தாலே பின்னைப்போக க்ஷமையன்றியே, அங்கே உத்யாநத் திலேயிருந்து எம்பெருமானைக்குறித்து தூதப்ரேஷணம்பண்ணு கிறாளென்றுமாம்.* *

**ப** — *எட்டாந்திருவாய்மொழியில், கீழே-ப்ராப்யவிஷயத்தில் அதித்வ ரிதரான இவர்க்கு, த்வராநுரூபமான ப்ரவ்ருத்தியில் யோக்யதையில்லாமையா லே கடகமுகத்தாலே ப்ராபிக்கையிலே அபேக்ஷைபிறந்து, கடநாநுரூபமான அவனுடைய ஸ்ருஷ்ட்ருத்வாத்யாகாரத்தையும், அநுபாவ்யமான அஸாதாரண சிஹ்நத்தையும், ஆச்ரித விரோதிநிவர்த்தநத்தையும், அதிசயிதபுருஷாநு பாவ்யமான போக்யதாவைலக்ஷண்யத்தையும், ஔதார்யஸ்வபாவத்தையும், அத் யந்தபவ்யதையையும் அபிரூபனாய் அகிலாத்ம பூதனானவனுடைய அநிஷ்ட நிவர்த்தகத்வத்தையும், ஸர்வாதிகத்வத்தையும், அந்த பரத்வத்தோடேகூடின ஸௌலப்யாதிசயத்தையும், உபயப்ரகாசகமான ச்ரிய:பதித்வத்தையும் அநு ஸந்தித்து, "ஏவம்விதஸ்வபாவனான ஸர்வேச்வரனைகடிப்பித்த மஹோபகாரத் தின் ப்ரீத்யதிசயத்தாலே ஐஹிகாமுஷ்மிக ஸகலபதார்த்தங்களும் கடகருக்கு ஸமர்ப்பணீயம்" என்கிற அதிசயிதாதரத்தை, நாயகனான ஈச்வரனைப்பிரிந்து ஆற்றாமையாலே தூதுவிடத்தேடின நாயகி, தூதுபோகிற பக்ஷிகளைக்குறித்து ப்ரத்யுபகார ப்ரதர்சநம்பண்ணின பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.* *

ஈடு ;—கீழில் திருவாய்மொழி இரண்டும் மோஹமும் உணர்த்தியுமாய், இதில், தூதப்ரேஷணமாயிறே யிருக்கிறது ; * மயர்வற மதிநலம் அருளப்பெற்ற இவர்க்கு (க) "ஜ்ஞாநாயாஸ ஸம்பத்தி: - மாணுபார்த்தஸம்பத்தி:" என்னும் மோஹமில்லையே ; இனி இவர்க்கு மோஹமாவது - பாஹ்யபதார்த்தாநுஸந்தாநக்ஷமரன்றிக்கே விஷயங்களில்நின்றும் அந்தஃகரணம் நிவ்ருத்தமாய், மநஸ்ஸுக்கு அவனே விஷயமாய், அவன் குணங்களையே அநுபவிக்கை: அதாவது - ஶரீரியானவவனே ஜ்ஞாநத்துக்கு விஷயமாய்த் தன்னை மறக்கை.

(உ) கீழ் - "அஹம்மநுரபவம்" - அஹம்மநுரபவம்" என்றும், (ங) "ஸர்வகத்வாதநந்தஸ்ய - ஸர்வகத்வாதநந்தஸ்ய" என்றும் சொல்லுகிற நிலைபோலே. உணர்த்தியாவது - (ச) "ப்ரஹ்லாதோஸ்மீதிஸஸ்மார - ப்ரஹ்லாதோஸ்மீதிஸஸ்மார" என்கிற ஶ்ரீப்ரஹ்லாதனைப்போலே தம்மையுமுணர க்ஷமராய் ஜகத்வ்ருத்தாந்தத்தையும் அநுஸந்திக்க க்ஷமராகை. நிர்க்குணமான விஷயத்திலேயன்றே இவர் அவகாஹித்தது ; குணாதிகவிஷயத்திலேயிறே. ஶேஷிபக்கலிலே அநுஸந்தாநமாறுல் ஶேஷபூதனை தன்னையும் காணுமிறே. கீழ், நெடும்போது அவன் குணங்களை அநுஸந்திக்கையாலே தரித்து பலஹாநிநீங்கி பாஹ்யபதார்த்தாநுஸந்தாந க்ஷமரானர் ; அவ்வளவிலே, இவர் தரித்தவாறேபழைய அலாபமே தலையெடுத்து ஒரு பிராட்டி தஶையை ப்ராப்தராய் அந்யாபதேஶத்தாலே பேசுகிருர்.

கீழில் திருவாய்மொழியில், திருத்தாயார் "எங்ஙனே புகுங்கொல்?" என்று நொந்ததுவேபலித்து, தன் சாபலத்தாலே புறப்பட்டாள் ; முடியப்போய்ப்புகமாட்டாமை தன்னுடைய நகரோபவநத்திலே விழுந்து கிடந்து, அவ்வளவிலும் அவன் வரக்காணுமையாலே, கண்ட பக்ஷிகளைத் தூதுவிடுகிருள். ("செல்ல வைத்தனளே' என்றது - செல்லுகையிலே யொருப்பட்டாளென்றதாய், முட்டப்போகாமல்கிடந்து ஜகரஸ்யம் பற்ருசாகத் தூதுவிடுகிருள்" என்று பட்டர்.) தனிவழியே புறப்பட்டுப்போம்படியாய் விழுந்த விவளுக்குத் தூதுபோவா ரில்லையே ; உண்டாலுலும் இவள் தனக்கு முன்னே ஈடுபட்டுக்கிடப்பர்களை ; இனித் தன்பரிஸரத்தில்

(க) ஶ்ரீபாஷ்யம்-ங-உ-கo.
(உ) ப்ருஹ-உ-ங-ச.
(ங) வி-பு-க-கசு-அங.
(ச) வி-பு-க உo எ.

வர்த்திக்கிற பக்ஷிகளுக்கு மேற்படக் கால்நடை தந்துபோக வல்லாரில்லையே; இவ்வளவில் நீங்கள் என் தசையை அறிவிக்கவேணுமென்று அவற்றின் காலிலேவிழுகிறாள்.

* அஞ்சிறைய மடநாரையில்—என்னை நினைத்தானத்தனை, தன்னை மறந்தானென்றாள்; இத்தலையில் அபராதம் பாராதே, அத்தலையில் அபராத ஸஹத்வம் பற்றாசாக, அபராத ஸஹத்வத்தைப் பார்த்து வருவதென்று ஆள்விட்டாள். வைகல் பூங்கழிவாயில் - இருவரையும் அவ்வூரில் போக்யதை மறக்கப்பண்ணிற்று என்றாள்; விஶேஷஜ்ஞதையாலே ஆர்த்தியை அறிவிக்கவருமென்று ஆர்த்தரக்ஷணம் பற்றாசாகத் தூதுவிட்டாள். இத்திருவாய்மொழியில்- வாராமைக்குஅடி பரப்பறுகையென்று பார்த்தாள்; "தன்மன்னு நீள்கழல்மேல் தண்டுழாய் நமக்கன்றி நல்கான்" என்கிறபடியே அஸாதாரணமானதன்றிறே வடிவு; ஆஶ்ரிதரோடு ஏகரஸனாகையிறே என்று பார்த்து ஐகரஸ்யம் பற்றாசாகத் தூதுவிடுகிறாள்.

பலபாட்டுக்களிலும் "இதுவோ தக்கவாறு" என்கையாலே, ஆந்ருஶம்ஸ்யம் பற்றாசாகத் தூதுவிடுகிறாள்" என்று பிள்ளான் பணிக்கும்படி. (க) '. ஸ்ராஜ்ஞா நார்ந் தன்ஷ்யாக் ஜெனமாக் ஸவ-கார்ஸெஸ்ஞி நீ । ஸீரா ஶுர ஸ து ஹஸ்ரீ - புஞ்ஜாநாமாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ । ஸமாத்வா தஶத்ராஹம் " என்கிறபடியே பன்னிரண்டாண்டு தண்ணீர்த்துரும்பறக்கலந்து பிரிந்த பிராட்டியைப்போலே, அங்கேபுக்கு நெடுங்காலம் அவனை யநுபவித்துப் பிரிந்து தூதுவிடுகிறாள்' என்று பிள்ளான். "புறப்பட்டவள் முடியப்போகமாட்டாமே நகரோபவநத்திலே கிடந்து தூதுவிடுகிறாள்" என்று பட்டர் அருளிச்செய்யும்படி. (உ) "ஜீவந்தீம் ஶாயாராராஶலஹாவய தீகீ தி-ஶாத் - ஜீவந்தீம்மாம்யதாராமஸ்ஸம்பாவயிதுமர்ஹஸி" - பரபரிபவம் பொறாதகுடிப்பிறப்புடையவரிறே. அதிலே தமக்குவந்த வவ்யம் பரிஹரிக்கச் சொல்லவேண்டாவே. கடலையணைசெய்து ராவணாதிகளைநிரஸித்துத் தாம் வரக்கொள்ள, இத்தலை வெறுந்தரையாய்க் கிடவாமேசெய்ய நினைத்தாராகில், ஏற்கவே பரிஹரித்துத் தம்புகழைநோக்கிக்கொள்ளச்சொல்லென்று சொன்னாளிறே. அப்படியே இவளும் தன்தசையையறிவித்து விடுகிறாளாயிருக்கிறது.

---

(க) ரா-ஸு-ருரு-கஅ. (உ) ரா-ஸு-ரு.௬-௧0

ஈடு ; அவ ;—முதற்பாட்டு. சில புள்ளினங்களைக் குறித்து, எம்பெருமானுக்கு என் தசையை அறிவித்து விபூதித்வயத்தை யும் நான்தர நீங்கள் ஆளவேணுமென்று இரக்கிருள்.

பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ ? *
நன்னலப்புள்ளினங்காள் வினையாட்டியேன்நானிரந்தேன் *
முன்னுலகங்களெல்லாம்படைத்த முகில்வண்ணன்கண்ணன் *
என்னலங்கொண்டபிரான் தனக் கென்நிலைமையுரைத்தே. (க)

ப—முதற்பாட்டில், தன்னுடைய காரணத்வாதி ஸ்வபாவங்களைக்காட்டி என்னைவசீகரித்துக்கொண்டவனுக்கு என்னுடைய அவஸ்த்தையைச்சொல்லி அதுக்குப் பரிசிலாக உபயவிபூதியும் நீங்களிட்டவழக்காம்படி நிர்வஹிக்க வேணுமென்று சில புள்ளினங்களைச் சொல்லுகிருள்.

நன்னலம்—* அர்த்திக்தார்க்குக் காரியஞ்செய்கைக்கடியான விலக்ஷணஸ்நேஹாகியுக்தங்களாய்

புள்ளினங்காள்—(ப்ரவ்ருத்திஹேதுவானபக்ஷத்வயாந்வயத்தையுடைய) புள்ளினங்காள்!

வினையாட்டியேன்—பிரிந்து தூதுவிடுகைக்கடியான பாபத்தையுடைய

நான்—நான்

இரந்தேன்—அவன் விஷயத்திலாப்தர்பண்ணும்ப்ரார்த்தனையை உங்களிகள்பக்கலிலே பண்ணினேன் ; (எதுக்காக என்னில்?)—

முன்—ப்ரதமத்திலே

உலகங்கள்—லோகத்தை

எல்லாம்—எல்லாம்

படைத்த—ஸ்ருஷ்டித்து, (ஸ்ருஷ்டமானலோகத்துக்கு ரக்ஷகமாய்)

முகில்—காளமேகநிபமான

வண்ணன்—திருமேனியையுடையனாய்

கண்ணன்—ஆச்ரிதர்க்கு ஸுலபனாய், (அந்தஆகாரங்களாலே)

என்—என்னுடைய

நலம்—விலக்ஷணாகாரங்களை யடங்க

கொண்ட—ஸ்வாதீனமாக்கிக்கொண்ட

பிரான் தனக்கு—உபகாரகனுக்கு

என்—என்னுடைய

நிலைமை—அவஸ்தையை

உரைத்து—சொல்லி (அதமயாகச் சேர்ந்திருக்கிற நாங்களிருவரும் பரிசிலாகத்தந்த)

பொன்—நித்யஸ்ப்ருஹணீயமான

உலகு—பரமபதத்தையும்

ஆளீரோ ?

புவனி—பூம்யுபலக்ஷிதமான

முழுது—ஸகல லீலாவிபூதியையும்

ஆளீரோ—ஆளுங்கோள்.

பின்பு இவ்விபூதித்வயமும் நீங்களிட்டவழக்கன்றோ வென்று கருத்து. இனங்காளென்றது - ஸங்கபாஹுள்யமும் கார்யோபயுக்தமென்றிருந்தபடி.

ஆறு ;—மத்ஸம்ஶ்லேஷைக தாரகபோஷக போக்யனும் மத நீஸ்வரூபரூப விபவைஶ்வர்யனுக்கொண்டு என்னோடு ஸம்ஶ்லே ஷித்து விஶ்லேஷிக்கிறன் என்னுடைய ஸர்வஸ்வத்தையும் அப ஹரித்துக்கொண்டு என்னைத்தோற்பித்துத் தனக்கடிமையாக்கிக் கொண்ட எம்பெருமான் தன்னைப்பிரிந்து நான் படுகிற வ்யஸநத் தைச்சென்று சொல்லவேணுமென்று புள்ளினங்களைக் குறித்துச் சொல்ல, அவை பின்னையும் போகாதிருந்தவாறே, "அவன் நம் முடைய அபேக்ஷிதஞ்செய்யாதொழியிற் செய்வதென் ?" என்று போகாதிருந்தனவாகக்கொண்டு. அவன் பரமகாருணிகனுகையாலும் ஆஶ்ரிதவத்ஸலனுகையாலும் நம் அபேக்ஷிதஞ் செய்தருளும்; ஆத லால் என்னுடைய தசையைச் சொல்லவேணுமென்று சொல்லி, அவற்றின்பக்கலுள்ள ப்ரீத்யதிஶயத்தாலே, திருநாட்டையும் லீலோ பகரணமான அண்டங்களையுமடங்க இவைசெய்கிற உபகாரத்துக் குக் கைம்மாருகக்கொடுத்து, பின்னையும் நிரூபித்து 'இவைசெய்கிற மஹோபகாரத்துக்குக் கைம்மாருகப்போராது'' என்று பார்த்து, பரமதயாளுக்களான உங்களுடைய நிரவதிக தயையாலே, துஃக்க ஸாகரநிமக்நையான என்னுடைய தஶையைச்சென்று சொல்ல வேணுமென்று ப்ரார்த்திக்கிறள். (௧)

---

ஈடு ; அவ ;—இரண்டாம்பாட்டு. சிலகிளிகளைக்குறித்து, என் ஆற்றுமையை அவனுக்கு அறிவித்துவந்து, நானும் என்தோழிமா ருங் கொண்டாட அத்தை அங்கீகரிக்கவேணும் என்கிறள்.

[மையமர் இத்யாதி]-முதற்பாட்டில், அவன்பதங்கொடுத்தாள், அதுக்குமேலே ஒருபதந்தேடிக்கொடுக்கிறள் இப்பாட்டில். அவன் பதமாகிறது-உபயவிபூதியையுங் கொடுக்கையிறே; அதுக்குமேலான பதமாகிறது - அவனலே விரும்பப்படும் தன்னைக்கொடுக்கை. தன் னைக்கொடுக்குமிடத்திலும், "பின்னை முன்னே'' என்னுதே, எல் லாருங்காணக் கைமேலேயிறே கொடுக்கப்புகுகிறது.

மையமர்வாள்நெடுங்கண் மங்கைமார்முன்பென்கையிருந்து *
நெய்யமரின்னடிசில் நிச்சல்பாலொடுமேவீரோ? *
கையமர்சக்கரத்தென்கனிவாய்ப் பெருமானைக்கண்டு *
மெய்யமர்காதல்சொல்லிக் கிளிகாள் ! விரைந்தோடிவந்தே. (உ)

ப — அநந்தரம். அநுபாவ்யசிஹ்நயுக்தனானவனுக்கு என்னுற்றமையை யறிவித்துவந்து என்தோழிமாரெதிரே நான் உங்களைப்பண்ணும் ஆதரத்தை யங்கீகரிக்கவேணுமென்று, சில கிளிகளைப்பார்த்துச் சொல்லுகிறாள்.

கிளிகாள் — (வடிவழகாலும் வார்த்தை யினிமையாலும் இரண்டுதலைக்கும் ஆதரணீயமான) கிளிகாள்!
கையமர்சக்கரம் — கையுந்திருவாழியுமான சேர்த்தியையுடையனாய்
கனி — பக்வபலம்போலே போக்யமான
வாய் — அதரசோபையை யுடையனாய்
என் பெருமானை — என்னையடிமை கொண்ட ஸ்வாமியானவனை
கண்டு — (முற்பாடு காணப்பேறுடைய நீங்கள்) கண்டு (* குணம்பாடி ஆவி காத்திருக்குமளவன்றியே)
மெய் — உடம்போடே
அமர் — செறியவேண்டும்
காதல் — அபிநிவேசத்தை
சொல்லி — சொல்லி (அவன் ஆதரித்தான் என்று கூடவாரினையாகே)
விரைந்து — ஸத்வரசித்தராய்
ஓடிவந்து — சடக்கென வந்து (உங்கள் வார்த்தைக்கு அநந்தரம் அவன் வரவுறுதியாகையாலே என்புதுக் கணிப்புக்கண்டு தங்களையொப்பித்து நிற்கையாலே)
மை — மை
அமர் — பொருந்தி
வாள் — ஒளியையுடைத்தான
நெடு — நெடிய
கண் — கண்ணையுடையராய்
மங்கைமார்முன்பு — (பருவத்தாலுமொத்திருக்கிற) தோழிமார் ஸந்நிதியிலே, (அவர்கள் தாங்கள் ஆதரிக்கக்கண்டிருக்கையன்றிக்கே அவன்கையாலே பிடித்த)
என் — என்
கை — கை, (உங்களுக்குப் பாதபீடமாம்படி)
இருந்து — இருந்து
நெய் — நெய்யோடே
அமர் — சேர்ந்த
இன் — மதுரமான
அடிசில் — அடிசிலை
பாலொடு — பாலோடுங்கூட
நிச்சல் — நித்யமாக
மேவீர் — ஸ்வீகரிக்கவேணும் (உ)

ஆறு; — (மையமர்.) - ஒரு தாமரையிலே ஒருதாமரை பூத்தாற்போலே திருக்கையும் திருவாழியும்சேர்ந்திருக்கிற அழகாலும், திருவாழியைக்கண்ட ப்ரீதியாலேபுதுக்கணித்த திருப்பவளத்தின் அழகாலும் என்னை யடிமையாக்கினவனுடைய அழகைக்கண்டு, நீங்கள் ஸம்ருத்தராய், பின்னை அவனுக்கு உன்பக்கலுள்ள ஸ்நேஹம் மெய்யானஸ்நேஹமென்று அவனுக்குச்சொல்லி, அவன் அருளிச்செய்யும் வார்த்தைகளை நான்முடிவதற்கு முன்னே விரைந்தோடிவந்து என

க்குச்சொல்லி எனனை தரிப்பித்து, என்னுடைய தோழிமாரெல்லாரும் உங்களுடைய ஸம்ருத்தியைக்கண்டு ஆசைப்படும்படி என்கையிலேயிருந்து அவன் திருநாமங்களை நான் கற்பிக்கக் கற்று வாழிகோளென்று தன் கிளிகளை நோக்கிச் சொல்லுகிறாள். (௨

---

ஈடு ; அவ ;—மூன்றும்பாட்டு. சிலவண்டுகளைக்குறித்து, அவனுக்கு என்தசையை அறிவித்துவந்து என்தலைமேலே வர்த்தியுங்கோள் என்கிறாள்.

ஓடிவந்தென்குழன்மே லொளிமாமலரூதீரோ? *
கூடியவண்டினங்காள்! குருநாடுடையைவர்கட்காய் *
ஆடியமாநெடுந்தேர்ப்படை நீறெழச்செற்றபிரான் *
சூடியதண்டுளபமுண்ட தூமதுவாய்கள்கொண்டே. (௩)

ப —அநந்தரம், என்பக்கலினின்றும்செல்லுகையாலே ஆஸ்ரிதவிரோதிநிவர்த்தகனுனக்ருஷ்ணன் ஸிரஸாவஹித்த புதுக்கணிப்போடேவந்து, "அவன் வருகிறான்" என்றலங்கரித்திருக்கிற என்குழலிற்பூவை யூதுங்கோளென்று சிலவண்டினங்களைப்பார்த்துச் சொல்லுகிறாள்.

கூடிய—பரஸ்பரம்செறிந்த
வண்டினங்காள்—வண்டினங்காள்!
குருநாடுடை—குருக்ஷேத்ரநிர்வாஹகரான
ஐவர்கட்குஆய்—பாண்டவர்களைவர்க்குமாக
ஆடிய—தர்ஸநீயகதியான
மா—குதிரைகளையும்
நெடு—ஓங்கின
தேர்—தேர்களையும்
படை—ஸேனையையும்
நீறு எழ—தூளிசேஷமாம்படி
செற்ற—அழித்த
பிரான்—மஹோபகாரகனுனக்ருஷ்ணன்
சூடிய—திருக்குழலில்சாத்தின
தண்—ஸ்ரமஹரமான
துளபம்—திருத்துழாயிலேயிருந்து
உண்ட—பானம்பண்ணின
தூ—தெளிந்த
மது—மதுவையுடைத்தான
வாய்கள்—வாயை
கொண்டு—உடையீர்களாய்க்கொண்டு
ஓடிவந்து—சடக்கெனவந்து, (அவனுக்கு ஸர்வப்ரகாரபோக்யமான)
என்—என்
குழல்மேல்—குழலின்மேலில்
ஒளி—செவ்வியையுடைத்தாய்
மா—ஸ்லாக்யமான
மலர்—பூவில்
ஊதீர்—மதுபாநோத்யோகந்தோன்றும்படி ஊதவேணும். (௩)

ஆறு ;—(ஓடிவந்து.) - ராஜ்யப்ராப்தராய் ஸமாச்ரிதருமான பாண்டவர்கள் பக்கலுள்ள வாத்ஸல்யத்தாலே, த்ரைலோக்யவிஜயோபகரணபூதமாய் அத்யுந்நதமாயிருந்த திருத்தேரிலேநின்று அவர்களுக்கு ஸாரத்யம்பண்ணி தத்விரோதிகளை நிரஸித்தருளின ஸமயத்திலே, பரமபக்தியுக்தரான திவ்யஜநங்கள் பரிசரோபசாரமாகச் சாத்தியருளப்பண்ணின திவ்யகந்தமான திருத்துழாய்மதுவைப் பாநம்பண்ணி, அத்தூமதுவாய்களைக் கொண்டோடிவந்து, அம்மதுவையும் அதிசீதளமான திவ்யகந்தத்தையும் என் குழல்மேல் ஒளிமாமலர்களிலே வர்ஷிக்கவேணும் ; வர்ஷிக்கவே, அம்மலர்களும் அலர்ந்து புதுக்கணிக்கும் ; * என்னிறம் பண்டுபண்டுபோலொக்கும், கெண்டையொண்கணுந்துயிலுமென்று, பரஸ்பரஸம்ச்லேஷைகபோகமான வண்டுகளைநோக்கிச் சொல்லுகிறாள். (ங)

ஈடு; அவ ;—நாலாம்பாட்டு. என்னை நோவுபடுத்திப்போய் எட்டாநிலத்திலே ஓலக்கமிருக்கை தக்கோர்மையோவென்று திருநாட்டிலேசென்று சொல்லுங்கோளென்று சில தும்பிகளைக்குறித்துச் சொல்லுகிறாள்.

தூமதுவாய்கள்கொண்டுவந்து என் முல்லைகள்மேல் தும்பிகாள் *
பூமதுவுண்ணச்செல்லில் வினையேனைப்பொய்செய்தகன்ற *
மாமதுவார்தண்டுழாய்முடி வானவர்கோனைக்கண்டு *
யாமிதுவோ தக்கவாறு ? என்னவேண்டுங்கண்டீர் நுங்கட்கே. (ச)

ப —அநந்தரம், ஸுரிபோக்யமான வைலக்ஷண்யத்தையுடையவனைக் கண்டு, உர்முடைய தகவுடைமையிதுவோ ? என்று சொல்லவேணும் என்று சிலதும்பிகளைக்குறித்துச் சொல்லுகிறாள்

என் — நான்வளர்த்துப்போருகிற
முல்லைகள்—முல்லைகளின்
மேல்—மேலே வர்த்திக்கிற
தும்பிகாள் — தும்பிகாள் !
தூ — தூய
மது—மதுவை நிரூபகமாகவுடைத்தான
வாய்கள்—வாய்களை
கொண்டு — கொண்டு
வந்து—வந்து

பூ —(அம்முல்லைகளில்) பூவின்
மது —மதுவை
உண்ண — உண்ண
செல்லில்—செல்ல நினைத்திகோளாகில், (அவைவாடிக்கிடக்கிற அவஸ்தையிற் செல்லாதே)
வினையேனை—விச்லேஷஹேதுவான பாபத்தையுடையேனான
என்னை

பொய்—க்ருத்ரிமஸம்ஶ்லேஷத்தை
செய்து—பண்ணி
அகன்ற—அகன்றவனாய், (இப்பிரிவு தானேசெந்தலிப்புக்கு உறுப்பெ ன்னலாம்படி)
மா—பெருவெள்ளமான
மது—மது
வார்—ஒழுகுகிற
தண்—குளிர்ந்த
துழாய்—திருத்துழாயாலே யலங்க்ருத மான
முடி—திருமுடியையுடையனைக் கொண்டு
வானவர்—நித்யஸூரிகளுக்கு
கோனை—நிர்வாஹகனாயிருக்கிறவனை
கண்டு—கண்டு
நுங்கட்கு—(இவ்வவஸ்தையிலே ஸந்நிஹிதங்களான) உங்களுக்கு, (அவனுடைய மேன்மைக்குத் தகுதியாம்படி ஸோபசாரமாக)
யாம்—நாம்
இதுவோ—இம்மேன்மைகொண்டாடி யிருக்குமதுவோ
தக்கவாறு—தகவுடையோமானபடி ?
என்னவேண்டுங்கண்டீர்—என்று சொ ல்லவேணுங் காணுங்கோள்.
அப்போதிறே, என்னோபாதி இம் முல்லையும் செந்தலித்து மதுபா நம் பண்ணலாவது என்று கருத்து (ச)

ஆறு ;—(தூமதுவாய்கள்)-நீங்கள் பூமதுவுண்ணச் செல்லில், பாக்யஹீனையான எனக்கு "ஸம்ஶ்லேஷம்" என்றோர் இந்த்ரஜால த்தைக்காட்டி, என்னை யகன்று திருநாட்டிலே திருமாமணிமண்ட பத்திலே, * அயர்வறுமமரர்கள் திவ்யபரிஷத்திலே, * குணைர்த் தாஸ்யமுபாகதராயிருந்த அவர்களாலே யலங்க்ருதனாயிருந்த அவ னைக்கண்டு, அவன் திருக்குழலில் திருத்துழாயின் மதுவெள்ளத் தை உங்கள் தூமதுவாய்கள் கொண்டுபருகிப்பின்னை 'உம்மையொ ருத்தி இன்று ஆசைப்பட்டுக்கூப்பிடாநிற்க, அவளை நினையாதிரு க்குமிதுவோ உம்முடைய க்ருபையாவது?' என்று அவன் ஸந்நிதி யிலேசொல்லவேணுமென்று, தனக்குப் பரமஸுஹ்ருத்துக்களாய்த் தன் முல்லைகளிலே வந்திருந்த தும்பிகளை நோக்கிச்சொல்லுகிறாள்.

---

ஈடு ; அவ ;—அஞ்சாம்பாட்டு. தன்னுடைய கிளிகளைக்குறி த்து எங்கேனும் போயாகிலும் அவனைக்கண்டு இதுவோ உம்மு டைய தக்கோர்மையிருக்கும்படி யென்னுங்கோளென்கிறாள்.

நுங்கட்குயானுரைக்கேன் வம்மின்யான்வளர்த்தகிளிகாள் *
வெங்கண்புள்ளூர்ந்துவந்து வினையேனைநெஞ்சம்கவர்ந்த *
செங்கண்கருமுகிலைச்செய்ய வாய்ச்செழுங்கற்பகத்தை *
எங்குச்சென்றாகிலுங்கண் டிதுவோதக்கவாறென்மினே. (ரு)

ப.—அநந்தரம், உதாரஸ்வபாவனுனவனை எங்கேனுமாகிலும் போய்க் கண்டு இதுவோ தகுதியென்று சொல்லுங்கோளென்று தான்வளர்த்த சில கிளிகளைப்பார்த்துச் சொல்லுகிருள்.

யான்—(பிரிந்தவவன் பரிகரம்போலே செருக்கடியாதே) நான்
வளர்த்த—வளர்க்கவளர்ந்த
கிளிகாள்—கிளிகாள் !
வம்மின்—அதிபரிசயத்தாலே அநாதரித்திராதே வாருங்கோள்,
யான்—வளர்த்த உங்களாலே பயன் பெறவிருக்கிற நான்,
நுங்கட்கு—நானுண்டாகில் உண்டாகும்படியான வுங்களுக்கு
உரைக்கேன்—நீங்களேயறிந்துசெய்யும் காரியத்தைச் சொல்லுகிறேன்,
வெம்—ப்ரதிபந்தகங்களை யழலவிழிக்கும்
கண்—கண்ணையுடைய
புள்—பெரியதிருவடியை
ஊர்ந்து—தன்னுடையத்வரைதோன்றும்படி நடத்திக்கொண்டு
வந்து—என்பக்கலிலேவந்து
வினையேனை—இன்று பிரிந்திருக்கைக்கடியான பாபத்தையுடையேனை வென்னை
நெஞ்சம்கவர்ந்த—நானுமறியாதபடி சித்தாபஹாரம்பண்ணினவனுய்,
செங்கண்—அவ்வபஹாரஹேதுவான அந்த சிவந்த திருக்கண்ணையும்
கருமுகிலை—அதுக்குப் பரபாகமாய் பொன்மலையின் மீமிசைக் கார்முகில்போலே பெரிய திருவடி திருத்தோளிலே பொருந்தவிருக்கிற காளமேகநிபமான ரூபத்தையுடையனுய்,
செய்யவாய்—நினைத்ததுமுடித்தப்ரீதியாலேசிவந்த, அதரசோபையையுமுடையனுய்,
செழுங்கற்பகத்தை—இவ்வழகைத் தன்பேருக வநுபவிப்பிக்கையாலே விலக்ஷண கல்பகம்போலே மஹோதாரனுனவனை
எங்காகிலும்—பரவ்யூஹவிபவாதிஸ்தலங்களெங்கேனுமாகிலும்
சென்று—சென்று
கண்டு—கண்டு
இதுவோ—இவளை சித்தாபஹாரம் பண்ணித் தனிமைப்படுத்தினவிதுவோ
தக்கவாறு—தகுதி
என்மின்—என்றுசொல்லுங்கோள்

ஆறு;—(நுங்கட்கு) க்ரூராவலோகநகாலாநல தக்தப்ரதிகூலஜாலனை பெரியதிருவடி திருத்தோளிலே ஏறியருளிவந்து என்னோடே ஸம்ஶ்லேஷித்து விஶ்லேஷிக்கிறபோது அதிஶீதளமாய் ம்ருதஸஞ்ஜீவநமான திவ்யகடாக்ஷங்களாலும் அதிமதுரமான பணிமொழிகளினுலும் திருமேனியிலழகாலும், ஆத்மதாநரூபமான பரிஷ்வங்கத்தாலும் என்னுடையமந: ப்ரப்ருதி ஸகலகரணங்களையும் அபஹரித்துக்கொண்டுபோனவனைத் திருநாட்டிலே சென்றாகிலுங்கண்டு, உம்முடைய தக்கவாறிதுவோவென்று சொல்லவேணுமென்று, தான்வளர்த்த கிளிகளைக்குறித்துச் சொல்லுகிருள். (ரு)

---

ஈடு; அவ;—ஆறாம்பாட்டு. ஆஸ்ரிதரோடு ஏகரஸனுகையால் நம்மபேக்ஷிதங்கள் செய்யும் அவன் பாடேசென்று, இதுவோ தக்கவாறென்னுங்கோளென்று சில பூவைகளைக்குறித்துச் சொல்லுகிறுள்.

என்மின்னு நூல்மார்வனென்கரும் பெருமானென்கண்ணன் *
தன்மன்னுநீள்கழல்மேல் தண்டுழாய்நமக்கன்றிநல்கான் *
கன்மின்களென்றும்மையான் கற்பியாவைத்தமாற்றம்சொல்லி *
சென்மின்கள்தீவினையேன் வளர்த்தசிறுபூவைகளே. (௬)

ப —அநந்தரம், ஸர்வப்ரகார பவ்யனுனக்ருஷ்ணன் திருவடிகளில் திருத்துழாய் நமக்கன்றித்தாரான், நான் உங்களைக் கற்பித்துவைத்த வார்த்தைகளைச் சொல்லுங்கோளென்று தான் வளர்த்த சிறுபூவைகளைக்குறித்துச் சொல்லுகிறுள்.

தீவினையேன்—நான் உங்கள் கார்யம் செய்கையன்றியே உங்களைக்கொண்டு கார்யம் கொள்ளவேண்டும்படி க்ரூரமானபாபத்தை யுடையேனுன நான்

வளர்த்த—வளர்த்த

சிறு—முக்தமான

பூவைகளே—பூவைகாள்!

என்மின்னுநூல்மார்வன்—திருமேனிக்குப்பரபாகமாகும்படி மின்போலேவிளங்குகிற திருயஜ்ஞோபவீதத்தையுடைய திருமார்பை என்னையநுபவிப்பித்தவனுய்.

என்கரும்பெருமான்—இவ்வவயவ ஸோபாமாத்ரமன்றியே ஸமுதாயமானஸ்யாமளவிக்ரஹத்தை எனக்கநுபவிப்பித்து என்னையடிமைகொண்டஸ்வாமியானவனுய்

என்கண்ணன்—எனக்கு ஸர்வப்ரகாரத்தாலும் நியமிக்கலாம்படி பவ்யனுனக்ருஷ்ணனுனவன்

தன்—தன்னுடையதாய்

மன்னு—ஆஸ்ரிதரிருந்தவிடத்தளவும் செல்லும்

நீள்—

கழல்மேல்—திருவடிகளின்மேலே

மன்னு—மன்னின

தண்—ஸ்ரமஹரமான

துழாய்—திருத்துழாயை

நமக்கன்றி—நமக்கன்றி

நல்கான்—உகந்து வேறொருவர்க்குக் கொடான்;

கன்மின்களென்று—கற்கும்படியிருங்கோளென்று

உம்மை—முக்தமாய்ச்செறுக்கடித்திருக்கிறவுங்களை

யான்—நிர்ப்பந்தித்து உங்களைக்கொண்டு கார்யங்கொள்ளவிருக்கிற நான்

கற்பியாவைத்த—என்மின்னு நூல் மார்பனென்று துடங்கி நல்கானென்ற விடமீருகக்கற்பித்துவைத்த

மாற்றம்சொல்லி—வார்த்தையைச் சொல்லி

சென்மின்கள்—செல்லுங்கோள். (௬)

ஆறு ;—(என்மின்னு நூல்மார்வன்) இதுவோ தக்கவாறென்று சொல்லவேணுமென்று தான்வளர்த்த பூவைகளையபேக்ஷிக்க, பின்னையும் அவைபோகாதிருந்தவாறே, "நம்மபேக்ஷிதம் அவன் செய்தருளாவிடில்செய்வதென்" என்று போகாதிருந்தனவாகக்கொண்டு, ஸ்வகீயாஸங்கயேயதிவ்யபூஷணபூஷிதமானதிவ்யரூபத்தையும் தன்னையும் எனக்கே போக்யமாகப் பரிகல்பித்துக்கொண்டிருக்கிறவென் கண்ணன், தன்மன்னு நீள்கழல்மேல் தண்டுழாய் நமக்கன்றி நல்கான் ; ஆதலால் ஈண்டச்செல்லுங்கோ ளென்கிறாள். (சு)

---

ஈடு ; அவ ;—ஏழாம்பாட்டு. பரமசேதநன் பொகட்டுப்போனன், சைதந்ய லேசமுள்ளபக்ஷிகள் பறந்துபோவனவும் அங்யபரமாவனவுமாயிற்று. இதுக்குஹேது "சேதநங்களாகையோ" என்று பார்த்து, அசேதநமானபாவையை இரக்கிறாள். அசேதநமுங்கூட வெழுந்திருந்து கார்யம் செய்யவேண்டும்படிகாணும் இவளவஸ்த்தை.

பூவைகள்போல்நிறத்தன் புண்டரீகங்கள்போலுங்கண்ணன் *
யாவையும்யாவருமாய்நின்ற மாயனென்னாழிப்பிரான் *
மாவைவல்வாய்பிளந்த மதுசூதற்கென்மாற்றம்சொல்லி *
பாவைகள்தீர்க்கிற்றிரே வினையாட்டியேன்பாசறவே. (எ)

ப.—அநந்தரம், அபிரூபனாய் அகிலாத்மபூதனாய் ஆஶ்ரிதவிரோதி நிவர்த்தகனானவனுக்கு என்வார்த்தையைச்சொல்லி என்வைவர்ண்யத்தைத்தீர்க்க வல்லிகோளோவென்று தன்னார்த்தயதிஶயத்தாலே, அசேதநங்களென்று பாராதே சிலபாவைகளைக்குறித்துச் சொல்லுகிறாள்.

பூவைகள்போல்—பூவைப்பூக்கள்போலே தர்ஶநீயமான
நிறத்தன்—நிறத்தையுடையவனாய்
புண்டரீகங்கள்போலும்—அதுக்குப் பரபாகமாம்படி புண்டரீகங்கள் போலேயிருக்கிற
கண்ணன்—கண்களையுடையனாய்,
யாவையும்—இவ்வஸாதாரண விக்ரஹத்தளவன்றியே ஸகலாசேதநங்களையும்
யாவரும்—ஸகலசேதநரையும்
ஆய்—ஶரீரமாகக்கொண்டு
நின்ற—தத்ததாகாரேணவஸ்த்திதனாய்
மாயன்—தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனாம்படி ஆஶ்சர்யஶக்தியுக்தனாகையாலே கலந்திருக்கச்செய்தேசுழல நிற்கவல்லனாய்,
என்னாழிப்பிரான்—கையும் திருவாழியுமானவடிவழகை அடியிலே எனக்கநுபவிப்பித்த மஹோபகாரகனாய்

மாவை—அநுபவிக்கிற கோபிமார்க்கு ப்ரதிபந்தகமான கேசியை
வல்—ப்ரபலமான
வாய்—வாயை
பிளந்த—கிழித்தவனாய்
மதுசூதற்கு—விரோதி நிரஸநம்ஸ்வ பாவஸித்தமான மதுஸூதநனானவனுக்கு
என்மாற்றம்—கிளிகளுக்கும் பூவைகளுக்கும் சொன்ன வென்வார்த்தையை
சொல்லி—சொல்லி
பாவைகள்—பக்ஷிகள்போலே பறந்துபோகாதே என்னார்த்திகண்டு பொறாதேயிருக்கிற பாவைகாள்
வினையாட்டியேன்—உங்களைக்கொண்டு கார்யங்கொள்ளவேண்டும் பாபத்தையுடையவென்
பாசறவு—நிறத்தில் பசுமையழிவை
தீர்க்கிற்றிரே—தீர்க்கவல்லிகோளோ?.

ஆறு;—நான்வளர்த்த சிறுபூவைகளினுடைய நிறம்போலேயிருந்த திருநிறத்தையும், புண்டரீகங்கள்போன்றிருந்த கண்களையும், அக்கண்களாலே ஸூசிதமான சேதநாசேதந ஸமஸ்தவஸ்துக்களினுடைய நியமநாநுபாஸ்சர்யத்தையும், என்னைத்தோற்பித்தடிமையாக்கின திருவாழியையேந்தினவழகையும், திருக்கைத்தழும்பாலே ஸூசிதமான மதுகைடபாதி ப்ரதிகூல நிரஸந திவ்யசேஷ்டிதங்களையுமடையாளமாகவுடையனாயிருந்த வெம்பெருமானுக்கு என்மாற்றம்சொல்லி என்னிழவை நீங்களே தீர்க்கத்திருமத்தனை, என்னாலொரு செயலில்லையென்று தன்னுடைய நிரவதிக வ்யஸநத்தாலே கலங்கித் தன்பாவைகளை ப்ரார்த்திக்கிறாள். (எ)

---

ஈடு; அ ;—எட்டாம்பாட்டு. முன்பேநின்ற குருகைக்குறித்து நித்யஸூரிகளைப்போலே உம்மாலல்லது செல்லாதே உம்மைப் பிரிந்து நோவுபடாநின்றாளென்று சொல்லென்கிறாள்.

பாசறவெய்தியின்னே வினைபேனெனையூழிநைவேன் *
ஆசறுதூவிவெள்ளைக்குருகே யருள்செய்தொருநாள் *
மாசறுநீலச்சுடர்முடிவானவர் கோனைக்கண்டு *
ஏசறுநும்மையல்லால் மறுநோக்கிலள்பேர்த்துமற்றே. (அ)

ப.—அநந்தரம், ஸூரிஸேவ்யனான ஸர்வாதிகனைக்குறித்து உம்மையொழிய வேறொருபதார்த்தத்தில் கண்வைக்கிறில ளென்றுசொல்லி ஒருநாள் க்ருபைபண்ணி யருளவேணுமென்று ஒருகுருகை அபேக்ஷிக்கிறாள்.

ஆசு—கமநத்தில் குறை
அறு—அற்ற
தூவி—சிறகையுடையையாய்
வெள்ளை—அகவாயில்ஸாத்திக்கும் ப்ரகாஶகமாம்படி வெளுத்தசிறகதையுமுடையையான
குருகே—குருகே!
வினையேன்—விரஹத்துக்கு முடிவு காணாத பாபத்தையுடைய நான்
பாசறவெய்தி—நிறமழிந்து
இன்னே—இப்படியே
எனையூழி—அநேககல்பங்கள்
நைவேன்—ஶிதிலையாகாநிற்பன்;
மாசறு—(ஆனபின்பு) அழுக்கற்ற
நீலச்சுடர்—நீலச்சுடரையுடைத்தான
முடி—மயிர்முடியையுடையனாய்
வானவர்—நித்யஸூரிகளுக்கு
கோனை—நிர்வாஹகனானஸர்வாதிகனை
கண்டு—கண்டு
ஏசறு—பழிப்பற்ற
நும்மையல்லால்—உம்மையொழிய
பேர்த்து—பின்னை
மற்று—வேறு
மறுநோக்கிலள்—மறித்துப்பார்ப்பது ஒன்றில்லையாளள்,
என்றுசொல்லி—என்றுசொல்லி
ஒருநாள்—ஒருநாள்
அருள்செய்—எனக்கு உபகரிக்கவேணும்,
அருள்செய்தென்று பாடமானபோது "என்றுசொல்" என்று வாக்யஶேஷமாகக்கடவது. ஏசறுமென்று-ஏச்சுக்குவிஷயமான வஸ்த்தையைக் கடந்தானென்றுமாம்.
ஆசு—குற்றம். (அ)

ஆறு;—(பாசறவெய்தி) நீங்களும் சொல்லவேணுமென்று சில குருகுகளையபேக்ஷிக்க, அவைபோகாதிருந்தவாறே "பிரிந்தவுத்த ரக்ஷணத்திலே தூதப்ரேஷணம்பண்ணுமித்தனையோ? அவன் விளம்பித்தாலல்லவோ தூதப்ரேஷணம் பண்ணுவது," என்று போகாதிருந்தனவாகக்கொண்டு அவனையிழந்து இப்படியே வ்யஸநப் படுகிறது எத்தனையாயிரம் ப்ரஹ்மகல்பமுண்டு. ஆதலால் பரதுக் காஸஹிஷ்ணுதைகஸ்வபாவரான நீங்கள் விமலநீல ஜ்யோதிர்மய குந்தல பாராலங்க்ருதனுப் பரமஸூரி பரிசரிதசரணயுகளனுயிருந்த வெம்பெருமானுக்கு, 'அநாத்ருதபரோக்ஷதா பாலம்பையாம்படி உன்பக்கலிலே அபிநிவிஷ்டையாளள்; நீ உபேக்ஷிக்கிலும் உன்னு டைய கடாக்ஷமல்லது வேறொருதுணை யுண்டென்றிராளென்று சொல்லவேணுமென்று குருகுகளை இரக்கிறாள். (அ)

---

ஈடு; அவ;—ஒன்பதாம்பாட்டு. சில புதாவினங்களைக்குறி த்து நீங்கள்சென்றால் அவன் வந்திலனாகிலும் அங்குத்தை வார்த்

தையைக்கொண்டுவந்து என்னை நித்யமாக உஜ்ஜீவிப்பிக்கவேணு மென்கிறாள்.

பேர்த்துமற்றோர்களைகண் விளையாட்டியேன்நானொன்றிலேன் *
நீர்த்திரைமேலுலவி யிரைதேரும் புதாவினங்காள் *
கார்த்திரள்மாமுகில்போல் கண்ணன்விண்ணவர்கோனைக்கண்டு *
வார்த்தைகள்கொண்டருளி யுரையீர்வைகல்வந்திருந்தே. (க)

ப — அநந்தரம், அந்தப்பாத்வத்தோடே ஆஸ்ரிதஸுலபனான க்ருஷ்ண னைக்கண்டு வார்த்தைகேட்டுவந்து சொல்லவேணுமென்று சில பெருநாரை களைப்பார்த்துச் சொல்லுகிறாள்.

நீர்திரை—நீரின்திரை
மேல்—மேலிடாதபடி அவற்றையமு க்கிமேலே
உலவி—உலாவி
இரை—உங்களுக்குபோக்யமான ஆமி ஷத்தை
தேரும்—ஆராயும்
புதாவினங்காள்—பெருநாரையினங் காள்
விளையாட்டியேன்—உவப்ராப்த னைவன் உதவாதபடியான பா பத்தையுடையேனை
நான்—நான்
பேர்த்து—உங்களையொழிய
மற்று—வேறு
ஓர்—அத்விதீயமாயிருப்பதொரு
களைகண்—ரக்ஷகவஸ்து
ஒன்று—ஒன்று
இலேன்—உடையேனல்லேன்;

கார்—(ஆனபின்பு) கார்காலத்தில்
திரள்—திரண்ட
மாமுகில்போல்—மஹாமேகங்கள்போ லே அபிரூபனாய்
கண்ணன்—அவதாரமுகத்தாலே ஆஸ் ரிதர்க்கு அத்யந்தபவ்யனாய்,
விண்ணவர்கோனை—அவ்வழகைப் பரமபதவாஸிகளுக்கு அநுப விப்பிக்கும் ஸர்வாதிகனை
கண்டு—கண்டு
வார்த்தைகள்கொண்டு—அவனருளிச் செய்யும் வார்த்தைகளைக்கொண்டு
அருளி—என்பக்கலிலேக்ருபைபண்ணி
வந்திருந்து—வந்திருந்து
வைகல்—இதுதானே போதுபோக் காம்படி நெடும்போது
உரையீர்—சொல்லவேணும்,
'பொதா' என்பாருமுளர். (க)

ஆறு;—(பேர்த்து) ஸஸ்யங்கள் உலராநிற்க மேகங்கள் கடலி லேவர்ஷிக்குமாபோலே தன்னுடைய கடாக்ஷமொழிய வேறொரு கதியின்றியே நான் தளராநிற்கத் தன்னுடைய ஸ்வரூபரூபகுண விபூதிவிஷய ஸர்வகால ஸாக்ஷாத்கார ஜநிதநிரவதிகாநந்த மஹார் ணவாந்தர்நிமக்நரான அயர்வறுமமரர்களுக்கே தன்னையநுபவிக்கக் கொடுக்கு மித்தனையோவென்று எம்பெருமானுக்கு விண்ணப்பம்

செய்து, பின்னை அவனருளிச்செய்தருளின வார்த்தைகளைக்கேட்டு, (க) "ஸ்வ ஸ்வஸ்ராம்ஸநவெவேஶித:- ப்ருஸ்யாம்ஸமுபவேஶித:" என்னும் ப்ரக்ரியையாலே இருந்து என்பக்கலிலே க்ருபையைப் பண்ணி எனக்கெப்போது மவற்றைச்சொல்லி என்னை தரிப்பிக்க வேணுமென்று சில புதாவினங்களைநோக்கிச் சொல்லுகிறாள். (௬)

---

ஈடு ; அவ ;—பத்தாம்பாட்டு. சில ஹம்ஸமிதுநங்களைக்குறித்துப் பிராட்டியுந்தானுமான வேகாந்தத்திலே என்தஶையை விண்ணப்பஞ்செய்து மறுமாற்றம்வந்து சொல்லவேணுமென்கிறாள்.

வந்திருந்தும்முடைய மணிச்சேவலுநீருமெல்லாம் *
அந்தரமொன்றுமின்றி யலர்மேலசையுமன்னங்காள் *
என்திருமார்வற்கென்னை யின்னவாறிவள்காண்மினென்று *
மந்திரத்தொன்றுணர்த்தி யுரையீர்மறுமாற்றங்களே. (௧0)

ப—பரத்வ ஸௌலப்ய ப்ரகாஶகமான ஶ்ரிய:பதித்வத்தையுடையவனுக்கு ஏகாந்தத்திலே இவள்படி இதுகாணுமென் றொருவார்த்தைசொல்லி, அவன் சொன்ன மறுமாற்றங்களெல்லாம் எனக்குச் சொல்லவேணுமென்று சில அன்னங்களை அர்த்திக்கிறாள்.

வந்து—அபேக்ஷாநிரபேக்ஷமாகவந்து,
இருந்து—அந்யபரதையின்றியே ஆபிமுக்யம்பண்ணியிருந்து
உம்முடைய—உங்கள் கண்ணுக்கினிய
மணி—ஶ்லாக்யமான
சேவலும்—சேவல்களும்
நீரும்—நீரும்
எல்லாம்—மற்றுமுண்டான பந்துவர்க்கங்களுமெல்லாங்கூட
ஒன்றும்—ஸம்ஶ்லேஷரஸத்துக்கொரு
அந்தரமின்றி—இடையூறின்றியே
அலர்மேல்—புஷ்பங்களின்மேலே
அசையும்—உலாவுகிற
அன்னங்காள்—அன்னங்காள் !
எம்—என்போல்வாரான பெண்பிறந்தார்க்கு ஸ்வாமியான
திரு—லக்ஷ்மியை
மார்வற்கு—திருமார்பிலேயுடையவனுக்கு
என்னை—என்னை
இவள்—இவள்
இன்னவாறு—இப்படி-இவ்வண்ணமானாள்
காண்மினென்று—காணுமென்று
மந்திரத்து—அவனுமவளுமான வேகாந்தஸ்தலத்திலே
ஒன்று—ஒருவார்த்தை
உணர்த்தி—அறிவித்து
மறுமாற்றங்கள்—அவனருளிச்செய்த மறுமாற்றங்களை
உரையீர்—சொல்லுங்கோள். (௧0

ஆறு ;—(வந்திருந்து) திருவோலக்கத்திலே எழுந்தருளியிருந்த ஸமயத்தில் திருவுள்ளம் அந்யபரமாயிருக்கிறபோது சொல்லாதே, அவ்வோலக்கம்கிளம்பி திவ்யாந்தஃபுரத்திலே எழுந்தருளினால் அங்கே பிராட்டியுடைய திவ்யஸந்நிதியிலே திருவுள்ளத்திலே படும்படி என்திறம் விண்ணப்பம்செய்து அவனருளிச்செய்தருளின மறுமாற்றங்கொண்டு என்னருகேவந்திருந்து சொல்லவேணுமென்று அநவரத ஸம்ஶ்லேஷைகபோகமான அன்னங்களைக்குறித்துச் சொல்லுகிறாள். (௧௦)

---

ஈடு ; அவ ;—நிகமத்தில் இத்திருவாய்மொழியில் ஆழ்வாருடைய வார்த்தையை அநுஸந்தித்தார் ஸ்ரீதிலராவரென்கிறார்.

மாற்றங்களாய்ந்துகொண்டு மதுசூதபிரானடிமேல் *
நாற்றங்கொள்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தோற்றங்களாயிரத்துளிவையு மொருபத்தும்வல்லார் *
ஊற்றின்கண்நுண்மணற்போ லுருகாநிற்பர்நீராயே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

**ப.**— அநந்தரம் இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லவர்கள் இதினர்த்தத்தில் ப்ரேம பாரவஶ்யத்தாலே த்ரவஸ்வபாவராகா நிற்பர்களென்று பலத்தை யருளிச்செய்கிறார்

மாற்றங்கள்—விலக்ஷணமான ஶப்தங்களை
ஆய்ந்துகொண்டு—ஆராய்ந்து கொண்டு
மதுசூதன்—ஜ்ஞாநஹேதுவான வேதங்களை யபஹரித்த மதுவை நிரஸித்த
பிரான்—உபகாரகனுடைய
அடிமேல்—திருவடிகள் விஷயமாக
நாற்றங்கொள்—பரிமளோத்தரமான
பூ—பூவையுடைத்தான
பொழில்—பொழில்கள்
சூழ்—சூழ்ந்த
குருகூர்—திருநகரிக்கு நிர்வாஹகராய்
சடகோபன்—பாஹ்யகுத்ருஷ்டி நிரஸநஶீலரான வாழ்வார்
சொன்ன—அருளிச்செய்ததாய்
தோற்றங்கள்—பகவதாவிர்ப்பாவம் போலே வேதாவிர்ப்பாவ ரூபமான
ஆயிரத்துள்—ஆயிரந் திருவாய்மொழிக்குள்ளும்
ஒரு—அத்விதீயமான
இவைபத்தும்—இவைபத்தையும்
வல்லார்—பாவவ்ருத்தியோடே அப்யஸிக்க வல்லவர்கள்

ஊற்றின்கண்—ஊற்றினிடத்து
நுண்—நுண்ணிய
மணல்போல்—மணல்நீர்வளத்திலே பொழுகுமாபோலே
நீராய்—பாவவ்ருத்தி பரவசராய்க் கொண்டு
உருகாநிற்பர்—ஆர்த்ரீபவியா நிற்பர்கள்.

இது கலித்துறை. (கக)

ஆறு ;—(மாற்றங்கள்) பொலிந்துநின்றபிரான் திருவடிகளிலே நாற்றங்கொள் பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன், அஸங்கல்ப பூர்வகமாக தத்விஷய நிரதிஶயாநுராக ப்ரேரிதனாய்க்கொண்டு அதி மதுரமாய் ம்ருதுவாயிருந்த சொற்களாலேசொன்ன வாயிரத்துள் இத்திருவாய்மொழியில் ஆழ்வார்க்குச்சென்ற வ்யஸநத்தை யநு ஸந்தித்தார் ஆத்மதாரணக்ஷமரன்றியே ஊற்றின்கண் நுண்மணற் போல் நீராயுருகாநிற்பரென்கிறார். (கக)

ஆறும்பத்து எட்டாந்திருவாய்மொழி

வ்யாக்யாநங்கள் முற்றிற்று.

---



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## ஒன்பதாந்திருவாய்மொழி—நீராய்நிலனாய் ப்ரவேஶங்கள்.

ஆறு ;—இப்படி தூதப்ரேஷணம் பண்ணியும் எம்பெருமான் வரக்காணாமையாலே அவனைத் தம்முடைய பெரியவார்த்தியோடே கூடத் திருநாட்டிலேகேட்கும்படி கூப்பிட்டழைக்கிறார். *

ப — ஒன்பதாந் திருவாய்மொழியில் இப்படி கடகமுகத்தாலே ஸம்ஶ்லேஷிக்கப் பாரித்தவிவருடைய வார்த்த்யதிஶயத்தைக்கண்டு ஈஶ்வரன் தன்னுடைய ஸர்வாத்மபாவத்தாலே ஸமாதாநம் பண்ணப்பார்க்க, அது இவர்க்குத்ருஷ்டிவிஷயமல்லாமையாலே அஸாதாரணமான விக்ரஹத்தோடே காணவேணுமென்று விஶ்வரூபம்கண்ட வர்ஜுநனைப்போலே ஆசைப்பட்டு, அதுக்கு ஹேதுவான அநுபாவ்ய ஸிஹ்நயோகத்தையும், அழகைக்காட்டி அநந்யார்ஹமாக்கு மதிஶயித ஶக்தியையும், அகிலப்ரகார ரக்ஷணத்தையும், அதிப்ரபல விரோதிநிவ்ருத்தியையும், பரத்வாத்யவஸ்தாபஞ்சக யோகத்தையும், அபேக்ஷ ஜந ஸம்ஶ்லேஷத்தையும், அகிலவஸ்து வ்யாபகத்வத்தையும், விலக்ஷணவிக்ரஹயோகத்தையும், விரோதிநியமந யோக்யதையையும், அதிஶயிதவைலக்ஷண்யத்தையு மநுஸந்தித்து ஏவம்விஶிஷ்டனான நீ உன்வடிவை என்னுடைய கண்ணுக்கிலக்காம்படி காட்டியருளவேணுமென்று அபிநிவேஶாதிஶயத்தாலே அத்யந்தமார்த்தராய்க் கூப்பிடுகிறார். இந்தப்ராப்ய விஷயத்தில் அபிநிவேஶகருதையானவார்த்தியிறே ஆஶ்ரயணோந்முகனான வதிகாரிக்கு விஶேஷணம்.

ஈடு ; அவ ;—“எங்குச்சென்றாகிலுங்கண்டு” என்றும், “வானவர்கோனைக்கண்டு” என்றும், தூதுபோகச்சொன்னார். அவைபோகமாட்டாதபடி தம்முடைய ஆர்த்தத்வநியாலேயழித்தார். “மரங்களுமிரங்கும்”என்று அசேதநங்களிரங்காநின்றால், சிறிது சைதந்யமுடையபக்ஷிகளழியக்கேட்கவேண்டாவிறே. “ஊற்றின்கண் நுண்மணல்போலுருகாநிற்பர் நீராய்” என்றது தூதரையொழியவன்றிறே; தம்பரிஸரத்தில் கால்நடைதந்து போவாரில்லையே ; அசேதநங்களுங்கூட வழிகிறவிடத்தில் பரமசேதநனானவனுக்குச் சொல்லவேணுமோவென்றுபார்த்து தம்மிடற்றோசையையிட்டு அழைத்துக்கொள்ளப் பார்க்கிறார்.

தமக்கு ஆர்த்தத்வநிகிடக்க வேறொருவர் போகவேண்டும்படியாயிருந்ததோ ?. கலங்காப்பெருநகரமான ஸ்ரீவைகுண்டத்திலும் தரிக்கவொண்ணாதபடி கால்குலைந்துவரும்படி பெருமிடறுசெய்து கூப்பிடுகிறார்.

இனித்தான் தூதுபோவார்க்கு காலாலேயாதல் சிறகாலேயாதல் போகவேண்டுகையாலே தடையுண்டு. இவர் மிடற்றோசைக்குத் தடையில்லையிறே. இவர்படுகிற வ்யஸநத்துக்கு ஹேதுசொல்லப்போகாது. பிராட்டி சிறையிருந்ததுக்கு ஹேது சொல்லப்போகாதாப்போலே; அவளிருப்பு பராநுக்ரஹத்தாலேயானுப்போலே, இவருடைய வ்யஸநமும் பராநுக்ரஹத்துக்கு உடலாயிருக்கிறபடி. அவள் சிறையிருந்தபடியை ஸ்ரீவால்மீகிபகவாந் எழுதிவைத்து இன்று நாடெல்லாம் வாழ்கிறுப்போலே, அன்று இவர்தாம் வ்யஸநப்பட்டாரேயாகிலும் இவரருளிச்செய்த ப்ரபந்தங்கள் லோகத்துக்குத் தண்ணீர்ப்பந்தலாயிற்றது. திருக்குழலோசையாலே திருவாய்ப்பாடியில் பெண்களெல்லாம் பட்டதைத்தம்மிடற்றோசையாலே அவன்படும்படி பண்ணுகிறுர்.

வாரீர் நீர் நம்மை யிருந்தவிடத்தி லிருக்கவொட்டாதே இங்ஙன்படுத்துகிறதென்? நாம் உம்மைவிட்டு தூரப்போனேமோ? ஏதேனுமொன்றைப் பற்றிலும் அது நம்மைப் பற்றிற்றென்று சொல்லலாம்படியிருக்கிற ஜகதாகாரதையைக் காட்டினேமேயென்று அவன் திருவுள்ளமாக, அதில்குறையென்? நீ ஜகச்சரீரனுய் நிற்கிறவிந்தஜ்ஞாநம் எனக்கில்லையோ? இந்த ஜ்ஞாநந்தானேயிறே அஸாதாரணுகாரத்தையும் காணவேணுமென்னப் பண்ணுகிறது. எனக்குப்ராப்யமான்துகிடக்க, அல்லாதவற்றைக் காட்டினுல் அப்ரயோஜநமென்கிறுர். அத்தையு முன்னைஸ்வர்யத்துக்குப் புறம்பல்லாமையாலே வேணுமாகில் ப்ரதிபத்திபண்ணுகிறேன். அத்தால்வந்தது "உன்னதானவற்றை யென்னது" என்றிருக்கிற ப்ரமம் நிவ்ருத்தமாகிறது. அர்ஜுநனும் ஸ்ரீவிஸ்வரூபம்கண்ட வநந்தரத்திலே (க) "தெநைவ ரூபெண சதுர்புஜெந - தேநைவரூபேண சதுர்ப்புஜேந" என்று அஸாதாரணமான வடிவை எனக்குக்காட்ட வேணுமென்றுனிறே.

என்னுர்த்தத்வஙி கேட்டிரங்கி வந்திலேயாகிலும், உன்னுடைய விபூதியழியாமல் நோக்கவேணுமாகில் வாவென்கிறுரென்றுமாம். இவருடைய வார்த்தைதாந்தான் அவனுக்கு உபயவிபூதியிலும் குடியிருப்பரிதாய் காணுமிருக்கிறது.

---

(க) கீதை-கக.சரு

ஈடு; அவ;—முதற்பாட்டு. ஜகதாகாரனாயிருக்கிற படியைக் காட்டித் தந்தோமிறேயென்ன, அதுபோராது. அஸாதாரணமான வடிவைக் காணவேணுமென்கிறார்.

நீராய்நிலனாய்த்தீயாய்க் காலாய்நெடுவானாய் *
சீரார்சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனாய் *
கூராராழிவெண்சங்கேந்திக் கொடியேன்பால்வாராய் *
ஒருநாள்மண்ணும் விண்ணும்மகிழவே. (௧)

ப—முதற்பாட்டில் அகிலஜகதாகாரனாய் நிற்கிற நீ உன்ன ஸாதாரண சிஹ்நத்தோடேவந்து முகம் காட்டவேணு மென்கிறார்.

நீராய்—(௧) "அப ஏவ ஸஸர்ஜாதௌ" என்று சொல்லப்பட்ட ப்ராதம்யத்தையுடைய நீரும்
நிலனாய்—அந்நீரின் கார்யமான ப்ருதிவியும்
தீயாய்—உபயகாரணமாய் சாந்தோக்ய ஸித்தப்ராதம்யத்தையுடைய அக்நியும்
காலாய்—தத்காரணமானவாயுவும்
நெடுவானாய்—இந்த பூதசதுஷ்டய ப்ரதாநமாய் மஹாவகாஶமான ஆகாஶமுமாகிற ஸமஷ்டியைஸ்ருஷ்டித்து அநுப்ரவேஶித்து ததாத்மகனாய்,
சீரார்—(௨) "ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்" - ஸூர்யா சந்த்ரமஸௌதாதாயதாபூர்வமகல்பயத்" என்கிறபடியே வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்குப்ரதாநபூதராய்
இரண்டு சுடர்களாய்—உஷ்ணநுஷ்ண ப்ரகாஶத்தாலே உபகாரகரான சந்த்ரஸூர்யர்களும்
சிவனாய்—(தத்தத்ஸம்ஹார ஸ்ருஷ்டிகளுக்குக்கடவருத்ரனும்
அயனாய்—ப்ரஹ்மாவும் ப்ரகாரமாம்படி தத்தந்தராத்மாவானவனே!
கூரார்—(இந்த ஸாதாரணாகாரத்தை யொழிய) ஆஶ்ரிதவிரோதிநிரஸநத்தில் கூர்மையையுடைய
ஆழி—திருவாழியையும்
வெண்—ஆஶ்ரிதர்க்கநுபாவ்யமானபரிஶுத்தமான வர்ணத்தையுடைய
சங்கு—ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும்
ஏந்தி—ஏந்தி
மண்ணும்—"ஒருவர்க்கு ஒருவனுபகரிக்கும்படியே" என்று பூம்யுபலக்ஷிதமான லீலாவிபூதியோடு
விண்ணும்—பரமவ்யோமஶப்த வாச்யமான நித்யவிபூதியோடு வாசியற
மகிழ—உகக்கும்படி
கொடியேன்பால்—அஸாதாரணவேஷத்தைக் காட்டவேணுமென்று நிர்ப்பந்திக்கும் கொடுமையையுடைய என்பக்கலிலே
ஒருநாள்—ஒருநாளாகிலும்
வாராய்—நடந்துவரவேணும். (௧)

(௧) மநு ௧-அ (௨) தை-நா-௧

ஆறு ;—ப்ரஹ்மாதி பிபீலிகாந்த ஸர்வஜந்து ஸத்பாவார்த்தமாக அவற்றுக்கு ஆத்மதயா அவஸ்த்திதனாய், அவற்றுக்கு பிபாஸாதி நிவ்ருத்தி தொடங்கி தமோநிரஸநபர்யந்தமான உபகாரத்தைப் பண்ணுகைக்காக ஸலிலாத்யபர்யந்த பதார்த்தங்களுக்கும் ஆத்மபூதனாயிருந்த பரமகாருணிகனே ! உன்னைக்காணப்பெறாதே கூப்பிடுகிற வென்னுடைய வார்த்தஸ்வரத்தைக்கேட்டு இவ்வண்டாந்தர்வர்த்திகளான வாத்மாக்களும் திருநாட்டிலுள்ள திவ்யபுருஷர்களுமடைய முடியக்கிடாய்ப்புகுகிறது. ஆதலால் உன்னுடைய லீலோபகரணமும் போகோபகரணமும் மகிழும்படி கூராராழி வெண்சங்கேந்தின வழகோடே உன்னுடைய விபூதியெல்லாம் துறந்து தளரும்படிக் கூப்பிடுகிற கொடியேன்பால் ஒருநாளாகிலும் வாராயென்று கூப்பிடுகிறார். (௧)

---

ஈடு ; அவ ;—இரண்டாம்பாட்டு. வாராயென்று நிர்ப்பந்தித்தல்லகாணும் நம்மைக்காண்பது. உம்மையொரு தேஶவிஶேஷத்திலே யழைத்துக்காணும் காட்டுவதென்ன, அவ்வடிவு தன்னையே இங்கே கொடுவந்து இதரஸஜாதீய மாக்கிக்காட்டிற்றிலேபோ வென்கிறார்.

மண்ணும்விண்ணும்மகிழக் குறளாய்வலங்காட்டி *
மண்ணும்விண்ணுங்கொண்ட மாயவம்மானே *
நண்ணியுனைநான்கண்டுகந்துகூத்தாட *
நண்ணியொருநாள் ஞாலத்தூடே நடவாயே. (௨)

ப.—அநந்தரம், மஹாபலிக்கு உன்னழகைக்காட்டி அகிலலோகத்தையும் அநந்யார்ஹமாக்கிக்கொண்ட வாஶ்சர்யஶக்தியையுடைய நீ நான் கண்டுகக்கும்படி இந்தவிடத்திலே வரவேணுமென்கிறார்.

மண்ணும்—பூமியும்
விண்ணும்—ஊர்த்த்வலோகமும்
மகிழ—உகக்கும்படியாக
குறளாய்—பெரியவடிவைச்சிறுக்கின வாமநனாய்
வலம்—அர்த்தித்தவநந்தரம் கையிலே நீர் விழுந்தவாறேவளர்ந்த ஸர்வஶக்தியோகத்தை
காட்டி—ப்ரகாஶிப்பித்து
மண்ணும்—பூமியையும்
விண்ணும்—ஊர்த்த்வலோகத்தையும்
கொண்ட—அளந்துகொண்ட
மாயம்—ஆஶ்சர்யசேஷ்டிதத்தையுடைய
அம்மானே—ஸ்வாமியானவனே

உனை—ப்ரயோஜநாந்தரபரர்க்குப் ப்ர காஶிப்பித்த வடிவழகையுடைய வுன்னை
நான்—கண்டல்லது நிற்கமாட்டாதசா பல்யத்தையுடைய நான்
நண்ணி—அந்த வடிவழகோடேகிட்டி
கண்டு—மாநஸஸாக்ஷாத்கார மன்றியே கண்ணாலேகண்டு
உகந்து—ப்ரீதனாய்
கூத்தாட—கூத்தாடும்படியாக
நண்ணி—யஜ்ஞவாடத்திலேவந்தாப் போலே நீதானேவந்து கிட்டி
ஒருநாள்—எனக்காகவும் ஒருநாள்
ஞாலத்தூடே—பூமியிலே
நடவாய்—நடந்தூவரவேணும். (உ)

ஆறு ;—(மண்ணும்) ஶ்ரீவாமநனாய்வந்து பிறந்தருளி உன்னுடைய நிரவதிகஸௌந்தர்யமாகிற பலத்தாலே மஹாபலியைஜயித்து லோகங்களைக் கொண்டருளிற்று, இவ்வண்டாந்தர்வர்த்திகளான வாத்மாக்களும் திருநாட்டிலுள்ள திவ்யபுருஷர்களும் ப்ரீதராகைக்கன்றோ ? ஆதலால் அவர்களுடைய உஜ்ஜீவநார்த்தமாக ஶோகாக்நி கர்ஶிதமான வென்னுடைய காத்ரங்களாலே உன்னை ஸ்பர்ஶித்து உன்னழகையும் உன் நடையையும் கண்ணாலேகண்டுகந்து அந்த ப்ரீத்யதிஶயத்தாலே நான் கூத்தாடும்படி வந்து ஒருநாள் ஞாலத்தூடே நடவாயென்கிறார். (உ)

---

ஈடு ; அவ ;—மூன்றாம்பாட்டு. ஜகதாகாரனை வடிவுகாட்டினது எனக்குப்போராது, அஸாதாரணமான விக்ரஹத்தைக் கொடுவந்து காட்டவேணுமென்றார், அது உமக்குக்காட்டுவது ஒரு தேஶவிஶேஷத்தே கொடுபோய்க் காணுமென்ன, அது தன்னை இங்கே கொண்டுவந்து இதரஸஜாதீயமாக்கிக் காட்டிற்றிலேயோ வென்றார். அது ஒருநாள் சற்றுப்போது காட்டாறுபெருகினாப் போலே செய்தோமென்ன, அது காதாசித்கமென்ன வொண்ணாதபடி யுகந்தோறும் ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப்பண்ணி ரக்ஷிக்கை உனக்கு ஸ்வபாவமாயிருக்க, நான் நோவுபடக்கடவேனோ வென்கிறார்.

ஞாலத்தூடேநடந்து நின்றும் கிடந்திருந்தும் *
சாலப்பலநாளுகந்தோ றுயிர்கள்காப்பானே *
கோலத்திருமாமகளோ டுன்னைக்கூடாதே *
சாலப்பலநாளடியே னின்னந்தளர்வேனோ ? (ந)

—அநந்தரம், அகிலப்ரகாரத்தாலும் ஆஶ்ரிதஸம்ரக்ஷணார்த்தமான வ்யாதயுடையவுன்னை ஸஹதர்மசாரிணியான லக்ஷ்மியோடேகூட வநுபவி இங்ஙனே யுள்ளதனையும் தளரக்கடவேனோ வென்கிறார்.

உகந்தோறும்—யுகந்தோறும்
ஞாலத்தூடே—பூமியிலே அவதரித்து
நடந்தும்—(௧) "[illegible] சசாரவஸுதாதலே" என்று நடந்தருளியும்
நின்றும்—(௨) "[illegible] அவஷ்டப்யசதிஷ்டந்தம் தத்பஸதநுரூர்ஜிதம்" என்று வில்லைக்கோத்துப்பிடித்து நின்றும்,
கிடந்தும்—(௩) "[illegible] ப்ரதிபிம்பயே மஹோததே:" என்று கடலுக்கெதிரே ஒருகடல் கிடந்தாப்போலே கண்வளர்ந்தருளியும்
இருந்தும்—(௪) "[illegible] ஏவமாஸ்தேஸதர்மாத்மாஸீதயாஸஹராகவ:" என்று பிராட்டியோடேகூட வினிதாக வெழுந்தருளியிருந்தும்
சாலப்பலநாள்—(௫) "[illegible] தஸவர்ஷஸஹஸ்ராணி தஸவர்ஷஸதாநிச" என்கிறபடியே அநேககாலம்
உயிர்கள்—ப்ராணிகளை
காப்பானே—ரக்ஷித்துக்கொண்டு போருமவனே!
கோலம்—(௬) "[illegible] ஷ்ணோர்தேஹாநுரூபாம்வை கரோத்யேஷாத்மநஸ்தநூம்" என்று நீகொண்ட வடிவுக்கீடானவாபிருப்யத்தை யுடையளாய்க்கொண்டவதரிக்கும்
திருமாமகளோடு—லக்ஷ்மியோடே கூடியிருக்கிற
உன்னை—உன்னை
கூடாதே—கிட்டியநுபவியாதே
சாலப்பலநாள்—அநாதிகாலமிழந்தவோபாதிமேலுள்ள காலமெல்லாம்
அடியேன்—உறவறியாதிருக்கை யன்றிக்கே உறவறிந்தநாள்
இன்னம்—விஷயபாருய் ருசியில்லாதிருக்கையன்றியே ருசிபிறந்த பின்பும்
தளர்வேனோ—அநுபவாலாபத்தாலே ஈடுபடக்கடவேனோ? (௩)

ஆறு;—(ஞாலத்தூடே) வாமநனும் சக்ரவர்த்தி திருமகனும் ஸ்ரீவஸுதேவர் திருமகனும் மற்றும் அஸங்க்யேயங்களான திருவவதாரங்களைப்பண்ணி ஸகல மநுஜநயநவிஷயதாங்கதனாய், அமோகமநோநயநஹாரி திவ்யசேஷ்டிதாநிகுர்வாணனாய்க்கொண்டு ஸர்வாத்மாக்களையும் யுகந்தோறும் ரக்ஷித்தருளுகிற பரமகாருணிகனே! நீ பிராட்டியோடேகூட வெழுந்தருளியிருக்கிற விருப்பை

(௧) பார-ஆர- (௨) ரா-கி-௧௧-௨௫- (௩) ரா-யு-௨௧-௩-
(௪) ரா-அயோ-௯௯-௨. (௫) ரா-ப-௧-௯௭- (௬) வி-பு-௧-௯-௧௪௫-

யும் உன்னழகையும் உன்னுடைய திவ்யசேஷ்டிதங்களையும் நாடொறுந்தனும் ஸர்வகாலமும் காணப்பெறுதே தளருமித்தனையோ வென்கிறார். (ங)

---

ஈடு ; அவ ;—நாலாம்பாட்டு. தளரக் கடவீரல்லீர் ; உம்முடைய தளர்த்தி பரிஹரிக்கக்கடவோம், ஆனாலும் ப்ரதிபந்தகம் கனத்திராநின்றது காணுமென்ன, ஓம் அப்படியே சகடாஸுரனிலுங்காட்டில் வலியதிறே என்னுடைய விரோதியென்கிறார். உன் கால் கண்டபோதே போகாதோ வென்கிறார். "அடிபடிற்செய்வதென்" என்று சும்மெனாதே கைவிட்டோடுமிறே.

தளர்ந்தும்முறிந்தும் சகடவசுரருடல்வேறு *
பிளந்துவீயத்திருக்காலாண்ட பெருமானே *
கிளர்ந்துபிரமன்சிவனிந்திரன் விண்ணவர்சூழ *
விளங்கவொருநாள் காணவாராய்விண்மீதே. (ச)

ப —அநந்தரம் ப்ரபலமான சகடாஸுரனை நிரஸித்த நீ வருகைக்கு விரோதியுண்டாகிலும் அத்தைப்போக்கி நான்காணும்படி வரவேணுமென்கிறார்.

| | |
|---|---|
| சகடவசுரர்—சகடாஸுரனுடைய | பிரமன்—ப்ரஹ்மாவும் |
| உடல்—உடலானது | சிவன்—ருத்ரனும் |
| தளர்ந்தும்—கோப்புக்குலைந்தும் | இந்திரன்—இந்த்ரனும் |
| முறிந்தும்—நடுவே முறிந்தும் | விண்ணவர்—தேவர்களும் |
| வேறு—வேறும்படி | சூழ—சூழ்ந்து ஸேவிக்க |
| பிளந்து—பிளந்து | விளங்க—அவர்களுக்கு நாயகனான வௌஜ்ஜ்வல்யம் தோன்றும்படி ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வந்தாப்போலே |
| வீய—உருமாயும்படியாக | |
| திருக்கால்—திருவடியை | |
| ஆண்ட—கார்யங்கொண்ட | |
| பெருமானே—ஸ்வாமியானவனே ! | ஒருநாள்—ஒருநாள் |
| கிளர்ந்து—தங்களீஸ்வராபிமாநத்தைப் பொகட்டு ஸாதரமாக வுத்யுக்தராய் | விண்மீது—ஆகாஶத்தின்மேலே |
| | காண—கண்ணுக்குத் தோற்றும்படி |
| | வாராய்—வரவேணும். (ச) |

ஆறு ;—(தளர்ந்தும்) ஶகடாஸுரநிரஸநம் பண்ணினாப்போலே உன்னைக்காண்கைக்கு விரோதியான வென்பக்கலுள்ள பாபங்களை நிஶ்ஶேஷமாக நீயே நிரஸித்தருளி மதுஜ்ஜீவநார்த்தமாக வெழுந்தருளுகிறபடியைக் கண்டு ப்ரஹ்ருஷ்டரான சதுர்முகபஶுபதி ப்ரப்ருதிஸமஸ்தஸுரகண பரிவ்ருதனாய் யுகபதுதித திநகரஶத

ஸஹஸ்ரதேஜஸ் ஸத்ருமமான வுன்னுடைய திருமேனியில் தேஜஸ்ஸாலே ஸகலலோகங்களும் விளங்கும்படி ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வந்து தோற்றினாப்போலே ஒருநாள் காணவாராய் விண்மீதே யென்று கூப்பிடுகிறார். (௪)

---

ஈடு ; அவ ;—அஞ்சாம்பாட்டு. ஸர்வத்ரஸந்நிஹிதனாய் என் ஹ்ருதயத்திலும் ஸ்பஷ்டமாகப் ப்ரகாசித்து வைத்து என்கண்ணுக்கு விஷயமாகாதொழிந்தால் நான் தளரேனோவென்கிறார்.

விண்மீதிருப்பாய்மலைமேல் நிற்பாய்கடல்சேர்ப்பாய் *
மண்மீதுழல்வாயிவற்றுளெங்கும்மறைந்துறைவாய் *
எண்மீதியன்றபுறவண்டத்தாயெனதாவி *
உள்மீதாடியுருக்காட்டாதே யொளிப்பாயோ. (ரு)

**ப.**—அநந்தரம் பரத்வாத்யவஸ்தாபஞ்சகத்தாலும் ஆஸ்ரிதரை யநுபவிப்பிக்கிற நீ, என்நெஞ்சிலே ப்ரகாசிப்பித்து உன்வடிவைக் காட்டாதே மறைக்கலாமோ வென்கிறார்.

விண்மீது—நித்யாஸ்ரிதர்க்கு அநுபாவ்யனாய்க்கொண்டு மேன்மைக்கெல்லையான பரமபதத்திலே
இருப்பாய்—ஸர்வஸ்மாத்பரனாய்க்கொண்டு இருக்குமவனாய்
மலைமேல்—தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கைக்காக சீர்மைக்கெல்லைநிலமான திருமலையிலே
நிற்பாய்—அர்ச்சாரூபேண நிற்குமவனாய்
கடல்—ப்ரஹ்மாதிகளுக்கு ஆஸ்ரயணீயனாகைக்காகத் திருப்பாற்கடலிலே
சேர்ப்பாய்—அநிருத்தரூபேண வ்யூஹித்துக் கண்வளர்ந்தருளுமவனாய்
மண்மீது—அளவிலிகளானாரை அழகாலே வஸீகரிக்கைக்காக ராமக்ருஷ்ணாதி விபவரூபேண பூமியிலே அவதரித்து
உழல்வாய்—அங்குள்ளாரோடு ஸஜாதீயனாய் ஸஞ்சரிக்குமவனாய்
இவற்றுள்—இஜ்ஜகத்தில்
எங்கும்—ஸமஸ்தபதார்த்தங்களிலும்
மறைந்து—அந்தராத்மபூதனாய் இந்த்ரியகோசரனன்றியே
உறைவாய்—வர்த்திப்பானாய்
எண்மீது—ஸங்க்யைக்குமேலே
இயன்ற—போகக்கடவதான
புறம்—புறம்புண்டான
அண்டத்தாய்—அண்டங்களிலுமுளனான நீ
எனது—என்னுடைய
ஆவி—ப்ராணாஸ்ரயமான நெஞ்சுக்குள்ளே
உள்மீதாடி—மிகவும் நடையாடிவிட்டு
உரு—வடிவை
காட்டாதே—கண்ணுக்கிலக்காக்காதே
ஒளிப்பாயோ—மறைக்கக்கடவையோ? (ரு)

ஆறு ;—(விண்மீது) திருநாட்டிலும் திருமலையிலும் திருப்பாற்கடலிலும் மற்றும் பூமியிலுள்ள திருநகரிகளிலும் இவற்றிலும் அண்டாந்தர்வர்த்திகளான ஸ்தாவரஜங்கமாத்மக ஸர்வவஸ்துக்களிலும், அஸங்க்யேயமான அண்டாந்தரங்களிலுள்ளும் என்னுத்மாவினுள்ளும் எங்கும் ஆஸ்ரிதார்த்தமாக ஸந்நிஹிதனுயிருந்து வைத்து எனக்கொருத்தனுக்கும் உன்திருவடியைக் காட்டாதொளிக்கவோ பார்த்தருளிற்றென்கிருர். (௫)

---

ஈடு; அவ ;—ஆறும்பாட்டு. உம்முடைய வபேக்ஷிதம் செய்யக்கடவோம். அதிலொரு குறையில்லை. ஆனாலும் ப்ரயோஜநம் உம்மதானபின்பு நீரும் சிலயத்நம் பண்ணவேணுங் காணுமென்ன, இந்த மர்யாதை என்றுதுடங்கிக் கட்டிற்றென்கிருர். அன்றியே காண்கைக்குத் தாம் அயோக்யரென்று உபேக்ஷித்தாகை நினைத்து, யோக்யதாயோக்யதை பாராதே எல்லார்தலையிலும் திருவடிகளை வைத்தவுன்னுலே யிழக்கப்படுவாருண்டோ வென்கிருராகவுமாம்.

பாயோரடிவைத்ததன்கீழ் பரவைநிலமெல்லாம் *
தாயோரடியாலெல்லாவுலகும் தடவந்தமாயோன் *
உன்னைக்காண்பான் வருந்தியெனைநாளும் *
தீயோடுடன்சேர் மெழுகாயுலகில்திரிவேனே ? (௬)

ப—அநந்தரம் யோக்யாயோக்ய விபாகமில்லாதபடி அபேக்ஷஸம்ஸ்லேஷஸ்வபாவனுன வுன்னைக்காணவேணுமென்று அக்நிஸகாஶத்தில் மெழுகுபோலே ஶிதிலனுய்த் திரியக்கடவேனேவென்கிருர்.

ஓரடி—ஒருதிருவடியை
பாய்—பரப்பி
வைத்து—வைத்து
அதன்கீழ்—அதின்கீழேயாம்படி
பரவை—ஸமுத்ரையான
நிலமெல்லாம்—ஸகலபூமியையும்
தாய்—தாவி
ஓரடியால்—மற்றையொரு திருவடியால்
உலகு — ஊர்த்வலோகம்
எல்லாம்—எல்லாவற்றையும்
தடவந்த—மேலேதடாவின
மாயோன்—ஆஸ்சர்யபூதனே !
உன்னை— உன்னை
காண்பான்—காணவேணுமென்று
எனைநாளும்—எல்லாக்காலத்திலும்
வருந்தி—க்லேஶித்து
தீயோடு—தீயோடே
உடன்—கிட்ட
சேர்—சேர்ந்த
மெழுகாய்—மெழுகின் ஸ்வபாவத்தை யுடையேனுய்

உலகில்—நாட்டிலே
திரிவேனோ—முடியவும்பெறாதே ஸ்த்திரமாயிருக்கவும்பெறாதே
அலமாக்கக்கடவேனோ ?
தடவருதல்—உள்ளேவளைத்துக் கொள்ளுதலுமாம். (௬)

ஆறு ;—( பாயோராடிவைத்து ) என்னை உன்திருவடிகளிலே சேர்க்கவேணுமென்று லோகவிக்ரமண வ்யாஜத்தாலே விலையில்லா தவொரு ரத்நம் கெடுத்துத்தேடுவாரைப்போலே பெரியவருத்தத் தோடே உன்திருவடியாலே என்னைத்தேடிக்கொண்டு திரிந்த உன் னைநான் காணவேணுமென்று ஆசைப்பட்டு (க) "எங்குற்றாயெம் பெருமான்" என்று வருந்தித்தேடிக்காணப் பெறாதே மோஹாக்நி யாலே தீயோடுடன்சேர் மெழுகுபோலே தஹ்யமானனாய் இவ்வுலகத் திலே நானுள்ளதனையும் திரியுமத்தனையோ வென்கிறார். (௬)

---

ஈடு ; அவ ;—ஏழாம்பாட்டு. உலகில் திரிவேனோ வென்கிற வுறைப்பாலுண்டான ஸ்வாதந்த்ர்யம் உம்முடையதலையிலே கிடந்த தேயென்ன, ஸாதநமும் ஸாதகரும் த்வததீநமானபின்பு, இவ்வாற் றாமை எனக்கு ஸ்வரூபமாயநுவயிக்கு மித்தனையன்றோ வென்கிறார். அன்றியே பேறு உம்மதானபின்பு நீறும் சிறிதுயத்நம்பண்ணவே ணுங்காணுமென்ன, ஸர்வமும் த்வததீநமாயிருக்க அதுக்குப்புறம் போ நான் என்கார்யம் செய்கைக்கென்கிறாயாகவுமாம்.

உலகில்திரியும்கரும கதியாயுலகமாய் *
உலகுக்கேயோருயிருமானாய் புறவண்டத்து *
அலகிற்பொலிந்த திசைபத்தாயவருவேயோ *
அலகிற்பொலிந்த வறிவிலேனுக்கருளாயே. (எ)

ப —அநந்தரம் கர்த்ரு க்ரியாரூபமான லௌகிக ஐமஸ்த வஸ்துவுக்கு மந்தராத்மபூதனான நீ, உன்னைப்ராபிக்க விரகறியாத வெனக்கு க்ருபைபண் ணியருளவேணு மென்கிறார்.

உலகில்—லோகத்தில்
திரியும்—வ்யாபரிக்கிற
கருமம்—கார்யரூபமான
கதி—உபாயங்களுக்கு
ஆய்—நிர்வாஹகனாய்
உலகம்—அவ்வுபாயகர்த்தாக்களான
லௌகிகாதிகாரிகளுக்கு
ஆய்—அந்தராத்மதயாநின்று ப்ரவர்த் தகனாய்
உலகுக்கு—(இப்படி ப்ரவர்த்தகத்வ மாத்ரமன்றியே) ஸர்வ லோகங்களுக்கும

---

(க) திருநெடு - ௯.

ஓருயிரும்—ஏகாத்மாவாயும்
ஆனாய்—நிற்பானாய்
புறவண்டத்து—அண்டாத்பஹிர்வர்த்திகளாய்
அலகில் பொலிந்த—அஸங்க்யேய ஸ்வரூபராய்
பத்து—(ஜ்ஞாநதர்மத்தாலே) பத்து
திசை—திக்கிலும்
ஆய—வ்யாப்தரான
அருவே—முக்தாத்மாக்களை ப்ரகாரமாகவுடையவனே !

அலகில் பொலிந்த—எண்ணிறந்த
அறிவிலேனுக்கு—அறிவுகேட்டையுடையேனாகையாலே உன்னைப்பெற விரகறியாத வெனக்கு
அருளாய்—ஸாதநமும் நீயேயாய் பலமும் நீயேயாம்படி க்ருபை பண்ணியருளவேணும்
"ஓ" என்கிறவசை ஆர்த்தியால்வந்த கூப்பீட்டைக் காட்டுகிறது, (எ)

ஆறு ;—(உலகில்திரியும்) ஸ்வாபிமத புருஷார்த்த ஸாதநத்வேந அநுஷ்டேயமாநமாயிருந்த யாகாதி ஸர்வக்ரியைகளும், அந்த க்ரியாநுஷ்டாநாநுகுணமானலோகமும், அந்த லோகத்திலே வர்த்தமாநராய் க்ரியாநுஷ்டாதாக்களானவாத்மாக்களும்; அண்டாந்தர்ப் பஹிர்வர்த்தமாநராய் கர்மபிரஸங்குசித ஜ்ஞாநராய் அஸங்க்யேயராயிருந்த முக்தாத்மாக்களும் இதெல்லாம் உன்ஸங்கல்பாயத்தமன்றோ? ஆதலால் என்னாலொருசெயலில்லை. த்வத்தர்ஶநோபாய விஷயஜ்ஞாந கந்தமின்றியேயிருக்கிற வெனக்கு உன்னுடைய நிரவதிக க்ருபையாலே உன்னைக்காட்டியருளா யென்கிறார். (எ)

---

ஈடு ; அவ ;—எட்டாம்பாட்டு. அருளாயென்ற வாயோடேவந்தருளக்கண்டிலர். தன்பக்கல் நின்றும் பிரித்தென்னைக் கைவிடப் பார்த்தானாகாதே யென்கிறார்.

அறிவிலேனுக்கருளா யறிவாருயிரானாய் *
வெறிகொள்சோதிமூர்த்தி யடியேன்நெடுமாலே *
கிறிசெய்தென்னைப் புறத்திட்டின்னம்கெடுப்பாயோ *
பிறிதொன்றறியாவடியேனாவி திகைக்கவே. (அ)

ப.—அநந்தாம் தேஜோமய விக்ரஹத்தை யுடைய நீ அவ்வடிவை எனக்கநுபவிப்பியாதே ஸாம்ஸாரிக விஷயங்களிலே தள்ளி இன்னம் கெடுக்கத் தேடுகிறாயோ வென்கிறார்.

அறிவார்—அறிவுடையாரான விலக்ஷணர்க்கு
உயிரானாய்—தாரகனாய்
வெறிகொள்—அவர்களை தரிப்பிக்கும்படியான ஸர்வகந்தமாய்
சோதி—தேஜோமயமாயுள்ள
மூர்த்தி—திவ்யவிக்ரஹத்தையுடையனாய்
அடியேன்—உனக்கே அநந்யார்ஹனாம்படி என்னைப்பண்ணி உன்பக்கலிலே சபலனாம்படி பண்ணின
நெடுமாலே—அதிஶயித வ்யாமோஹத்தை யுடையனானவனே
அறிவிலேனுக்கு—அந்தவடிவை யநுபவிக்கைக்கு விரகறியாதவெனக்கு
அருளாய்—உன்க்ருபையாலே அநுபவிப்பித்தருளவேணும்
பிறிது—அங்ஙனன்றியே உன்னையொழிய
ஒன்று—தத்யந்தரம்
அறியா—அறியாதே
அடியேன்—நீ இட்டவழக்கான ஸ்வரூபத்தை யுடையேனான வென்னுடைய
ஆவி—நெஞ்சு
திகைக்க—கலங்கும்படியாக
கிறிசெய்து—விரகாலே ருசியை ஜநிப்பித்து
என்னை—அதுக்கீடான வநுபவம் தாராதே வடிவழகில் வாசியறிந்தவென்னை
புறத்து—பாஹ்யவிஷயங்களிலே
இட்டு—அகப்படுத்தி
இன்னம்—அநாதிகால மிழந்ததுபோராமல் அபிநிவேஶம் பிறந்தவின்றும்
கெடுப்பாயோ—கெடுக்கத்தேடுகிறாயோ
"வெறிகொள் சோதி" என்று } கண்வெறியோடும்படி மிக்கதேஜஸ்ஸென்றுமாம் (அ)

ஆறு;—(அறிவிலேனுக்கு) என்னை யுள்ளபடி யறிவார்க்கன்றோ நான் என்னைக் காட்டிக்கொடுப்பதென்னில்; த்வதேகாத்மதாரணராகையாலே அவர்களுக்கு உன்னைக்காட்டிக் கொடுக்கை ப்ராப்தம். அறிவிலேனுக்குச் செய்தருளுகையன்றோ குணமாவது. ஆதலால் உன்னுடைய நிரதிஶயௌஜ்ஜ்வல்ய ஸௌந்தர்ய ஸௌகுமார்யாத்யபரிமிதோதாரகுண ஸாகரமான உன்திருமேனியை கேவலம் உன்க்ருபையாலே எனக்குக்காட்டி யருளவேணுமென்றபேக்ஷிக்க, ததநந்தரக்ஷணத்திலே செய்தருளக்காணாமையாலே அதிமாத்ரபீதராய், நெடுங்காலமெல்லா முன்னைக்காணப் பெறாதே விஶீர்ணனாம்படி எனக்கரியனான நீ உன் திருவடிகளல்லது மற்றொரு ப்ராப்யமும் ப்ராபகமுமில்லை யென்றிருக்கிற விவ்வறிவுங்கூடக் கலங்கும்படி உன்னைக்காட்டாதே என்னைவஞ்சித்து ஶப்தாதிவிஷயங்

களைக்காட்டி என்னை யின்னம் கெடுக்கவோ பார்த்தருளிற் றென்கிறார். (அ)

---

ஈடு ; அவ ; —ஒன்பதாம்பாட்டு. உம்மை இங்குக்கெடுத்ததென்னென்ன, கண்டகாட்சியிலே இழுத்துக்கொள்ளக் கடவதான விஷயங்கள் பரிமாறுகிற விடத்தே வைத்தாயாகில் இனிக்கெடுக்கை யென்றொன்றுண்டோ வென்கிறார். என்னை இங்கேவைத்தபோதே குழியைக்கல்லி மண்ணையிட்டமுக்கப் பார்த்தாயன்றோ வென்கிறார் (க) " தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் । க்ஷிபாமி - தாநஹம் த்விஷத:க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் । க்ஷிபாமி " என்னும்படியே.

ஆவிதிகைக்கவைவர்குமைக்கும்சிற்றின்பம் *
பாவியேனைப்பலநீகாட்டிப்படுப்பாயோ *
தாவிவையம்கொண்ட தடந்தாமரைகட்கே *
கூவிக்கொள்ளுங்கால மின்னம்குறுகாதோ. (௯)

ப.—அநந்தரம் உனக்கு விதேயமான விஷயேந்த்ரியங்கள் நடையாடுகிற தேசத்திலே வைத்து என்னைமுடிக்கத் தேடுகிறாயோ ? உன் திருவடிகளிலே அழைத்துக்கொள்ளுங்காலம் அணித்தாகாதோ வென்கிறார்.

ஆவி — நெஞ்சு
திகைக்க—கலங்கும்படியாக
ஐவர்—ஐந்திந்த்ரியங்களும்
குமைக்கும்—தாதாவென்று பீடிக்கிற
சிறு—அல்பஸாரமான
இன்பம்—விஷயஸாரஸ்யத்தை
பல — பஹுமுகமாக
காட்டி—ப்ரகாசிப்பித்து
நீ—இவற்றைக்கழிக்கவல்லஸக்தியையுடைய நீ
பாவியேனை—நிரதிஸயாநந்த யோக்யனாய் வைத்து நித்யதுக்க தேஸத்திலே வர்த்திக்கும்படி பாபியானவென்னை
படுப்பாயோ—முடிக்க நினைக்கிறாயோ;
வையம்—பூமியை
தாவி—அநாயாஸமாம்படி அளந்து
கொண்ட—கொண்ட
தடம்—நிரதிஸயபோக்யமான
தாமரைகட்கு—திருவடித்தாமரைகளிலே நானநுபவிக்கும்படி
கூவிக்கொள்ளும்—என்னையழைத்துக்கொள்ளும்
காலம்—காலம்
இன்னம்—விஷயாந்தரதர்ஸநம் விநாஸஹேது யென்னுமவஸ்த்தை பிறந்தவளவிலும்
குறுகாதோ—சுறுகாதோ (௯)

(க) கீதை-௧௬-௧௯-

ஆறு ;—(ஆவிதிகைக்க) ஶப்தாதிவிஷய ஸுகம் புருஷார்த்த மன்றோ. அத்தை அநர்த்தரூபமாகச் சொல்லுவானென்னென்னில், ஜ்ஞாநஸ்கலநஹேதுவாய் துக்கபஹுளமாய் அத்யல்பமாய் அத்யந்தமஸ்த்திரமாயிருக்கையாலே வைஷயிகஸுகம் அபுருஷார்த்தமாகையாலே அந்தவிஷயங்களைக் காட்டி உன்னையிழப்பித்து என்னைத் தரைப்படுத்தாதே, லோகமெல்லாம் நிறையும்படி மலர்ந்தவுன் திருவடிகளாகிற தாமரைத் தடாகத்திலே என்னைவாங்கி யருளாயென்றபேக்ஷிக்க அப்போதே செய்தருளாமையாலே அக்காலம்வந்தால் செய்கிறோமென்றுஞ்கக்கொண்டு அக்காலம் இக்காலமெல்லாம் முடிந்தாலும் வரக்கடவதன்றோவென்று கூப்பிடுகிறார். (௯)

---

ஈடு ; அவ ;—பத்தாம்பாட்டு. "ஐஶ்வர்யாதிகள் அல்பாஸ்த்திரங்கள்" என்று வேண்டாவென்கிறீராகில், அவ்வளவன்றிறே அநந்தமுமாய்ஸ்த்திரமுமா யிருக்குமிறே ஆத்மாநுபவம். அத்தையநுபவித்தாலோவென்ன, நீசொன்னது உபபத்தியாகில் செய்யலாயிற்று. அவை அல்பம் அஸ்த்திரம் என்றவிடம் ஸ்வரூபகதநம் பண்ணினேனத்தனை. உன்னுடைய போக்யதையைச் சொல்லிற்றும் ஸ்வபாவமிருந்தபடி சொன்னேனத்தனை. அதுதீது என்றுவிட்டும் இதுநன்று என்று பற்றுகிறேனுமல்லேன்; உன்னைப்பற்றிற்றும் நீயாகையாலே; அவற்றை விட்டதும் நீயல்லாமையாலேயென்கிறார். வகுத்தவிஷயத்திலே குணஸௌந்தர்யாதிகளு முண்டாகப்பெற்றேனித்தனை.

குறுகாநீளாவிறுதிகூடா வெனையூழி *
சிறுகாபெருகாவளவிலின்பம் சேர்ந்தாலும் *
மறுகாலின்றிமாயோ னுனக்கேயாளாகும் *
சிறுகாலத்தையுறுமோ வந்தோதெரியிலே. (௧௰)

ப — அநந்தரம் விலக்ஷணமான வாத்மாநந்தாநுபவ லாபமும், அதிஶயித வைலக்ஷண்யத்தை யுடைய வுனக்கு ஶேஷமாயிருக்கு மல்பகாலத்துக்கு ஸத்ருஶமோ வென்கிறார்.

குறுகாநீளா—ஸ்வரூபகதமான ஸங்கோசவிகாஸமின்றியே
இறுதி—முடிவும்
கூடா—இன்றியே
எனையூழி—நித்யமாகையாலே ஸர்வ காலத்திலும்

சிறுகாபெருகா—க்ஷயவ்ருத்திகளு மின்றியே யிருக்கிற
அளவில்—ஸ்வபாவத:பரிச்சேதரஹித மான
இன்பம்—ஆத்மாநந்தம்
சேர்ந்தாலும்—பெற்றாலும்
மாயோன்—அல்பகாலாநுபவமும் அதிசயிதவிலக்ஷணமாம்படி யான வாஸ்சர்யத்தை யுடையவனே
தெரியில்—நிரூபித்துப்பார்க்கில்
மறுகாலின்றி—பின்னையொருகாலு மின்றியே
உனக்கே—உனக்கே
ஆளாகும்—அடியேனுக்கொண்டு மோக்ஷத்வாஸத்தை யநுபவிக்குரா
சிறுகாலத்தை—அத்யல்பகாலத்தை
அந்தோ—ஐயோ
உறுமோ—ஒக்கவற்றோ?
அந்தோவென்று—ஒவ்வாதென்று சொல்லவேண்டுவதே யென்னும் விஷாதத்தைக் காட்டு கிறது. (கம)

ஆறு ;—(குறுகா) வைஷயிகஸுகம் அல்பாஸ்திரத்வாதி தோஷதுஷ்டமாகையாலே உமக்கபேக்ஷிதமன்றாகில், ப்ராசுர்ய ஸ்திரத்வாத்யநேக குணயுக்தமான கேவலாத்மாநுபவலக்ஷண ஸுகத்தை ப்ராப்யமாகக் கொள்ளலாகாதோவென்னில் ; கேவலாத்மாநுபவ ஸுகம் அக்காஸம்பிந்நமாய் நித்யஸித்தமாய் நிரவதிகமாவது. த்வத் கைங்கர்யஸுகம் க்ஷணிகமாய் அத்யல்பமாவது. ஆகிலும் அந்தவாத்மாநுபவஸுகம் ஒருதட்டும், இந்த கைங்கர்யஸுகம் ஒருதட்டுமானால், இத்தைக்கைவிட்டு அத்தைப்பற்றுகை உறுமென்றிருப்பாரோ வறிவுடையார். இப்பொருள் உபபாதநீயமோ? அந்தவைஷயிக ஸுகத்தினுடைய அல்பாஸ்த்திரத்வாதி தோஷகீர்த்தநம் பண்ணிற்று-அநபேக்ஷிதத்வஹேதுவாகவன்று. ஸ்வரூபநிரூபணம் பண்ணினவித்தனை. வைஷயிகஸுகம் - அநபேக்ஷிதமாகைக்குஹேது த்வத்கைங்கர்ய வ்யதிரிக்தமாகை ; ஆதலால் அந்தவைஷயிக ஸுகத்தையும் கைவல்யஸுகத்தையுமொழிய த்வதநந்யார்ஹ மோக்ஷத்வரூப ஸம்பத்தை எனக்குத்தந்தருளவேணுமென்று எம்பெருமானை ப்ரார்த்தித்து முடிக்கிறார். (கம)

---

ஈடு ; அவ ;—நிகமத்தில் இப்பத்தும் கற்றவர்கள் ஸர்வேஸ்வரனுக்கு அந்தரங்ககிங்கரராவ ரென்கிறார்.

தெரிதல்நினைதலெண்ணலாகாத் திருமாலுக்கு *
உரியதொண்டர்தொண்டர் தொண்டன்சடகோபன் *
தெரியச்சொன்னவோராயிரத் துளிப்பத்தும் *
உரியதொண்டராக்கு முலகமுண்டாற்கே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழி தன்னோடன்வய முடையாரை ஸர்வரக்ஷகனானவனுக்கு அநந்யார்ஹ ஶேஷபூதராக்குமென்று பலத்தை யருளிச் செய்கிறார்.

| | |
|---|---|
| தெரிதல்—ஶ்ரவணத்தாலே தெளிந்து | சடகோபன்—ஆழ்வார் |
| நினைதல்—மநநத்தாலே ப்ரதிஷ்டிதமாம்படி நினைத்து | தெரிய—பகவத்வைலக்ஷண்யத்தையும் இதரவைலக்ஷண்யத்தையும் விஶதமாக |
| எண்ணல்—நிதித்யாஸநத்தாலே த்ருவையான ஸ்ம்ருதியைப் பண்ணினாலும் | சொன்ன—அருளிச்செய்த |
| | ஓராயிரத்துள்—ஓராயிரத்துள் |
| ஆகா—பரிச்சேதிக்க வொண்ணாத | இப்பத்தும்—இப்பத்தும் (அப்யஸிக்கவர்களை) |
| திருமாலுக்கு—ஶ்ரிய:பதியானவனுக்கு | உலகமுண்டாற்கு—ஸர்வரக்ஷகனுக்கு |
| உரியதொண்டர்—அநந்யார்ஹ ஶேஷபூதரானார்க்கு | உரியதொண்டர்—அநந்யார்ஹ ஶேஷபூதர் |
| தொண்டர்—ஶேஷபூதரானார்க்கு | ஆக்கும்—ஆக்கும். |
| தொண்டன்—ஶேஷபூதரான | இது—கலித்துறை (கக) |

ஆறு ;—(தெரிதல்) விதிஶிவஸநகாதிகளுடைய ஶ்ரவணமநந நிதித்யாஸநங்களுக்கு அபூமியாய் ஶ்ரிய:பதியாயிருந்த வெம்பெருமானுக்கு உரிய தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன் சொன்னவாயிரத்துள் கண்ணால் கண்டதிற்காட்டிலும் விஶதமாம்படிசொன்ன வித்திருவாய்மொழியை வல்லார்களை இத்திருவாய்மொழிதானே அவன் குணங்களுக்குத் தோற்று அடிமையாம்படி பண்ணு மென்கிறார். (கக)

திருவாய்மொழி ஆறும்பத்து ஒன்பதாந்திருவாய்மொழி வ்யாக்யாநங்கள் முற்றிற்று.

---



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

## பத்தாந்திருவாய்மொழி—உலகமுண்ட ப்ரவேசங்கள்.



ஆறு ;—(உலகமுண்ட பெருவாயா) இப்படி திருநாட்டிலே கேட்கும்படி கூப்பிட்டழைத்தும் அவனைக்காணப் பெறாமையாலே, இனி இவனைக்காண்கைக்கு உபாயம் இவன் திருவடிகளை சரணம் புகுகைபோக்கி மற்றொன்றுமில்லையென்று பார்த்து, இவனுடைய காருண்யவாத்ஸல்யாதி குணங்களைப்பற்றாசாகச் சொல்லிக்கொண்டு பிராட்டி புருஷகாரமாக ஸர்வலோகசரண்யனை திருவேங்கடமுடையான் திருவடிகளைச் சரணம்புகுகிறார்.

ப.—பத்தாந் திருவாய்மொழியில், கீழ்தமக்குப்பிறந்த ப்ராவண்யாதிசயத்தாலே புருஷார்த்தவைலக்ஷண்ய நிபந்தமான வார்த்திபிறந்து கூப்பிட்டவர், பலஸித்திக்கு சரண்யனையன் திருவடிகளையொழிய வுபாயமில்லையென் றறுதியிட்டு, சரண்யத்வப்ரகாசகமான அகிலஜகத்ரக்ஷணாகாரத்தையும், அசேஷவிரோதி நிவர்த்தநத்தில் அத்யுஜ்ஜ்வல பரிகரயோகத்தையும், ரூபகுணஸாரஸ்யத்தாலுண்டான உத்துங்காநுபாவ்யதையையும், ஜகத்விரோதிகளுக்குத் தீங்கு விளைக்கும் ஸ்ரீமத்தையையும், ஆஸ்ரிதரக்ஷணார்த்தமான வநாயாஸ வ்யாபாரத்தையும், அதிசயிதஜ்ஞாநர்க்கும் ஆராத்யனும்படியையும், ஸர்வஸாதாரண ஸாரஸ்யாதிசயத்தையும், ஸாவரோதான வீஸ்வராபிமாநிகளுக்கும் ஸாதராஸ்ரயணீயனும்படியையும், அதிசயித போக்யமான வயவயவசோபையையும் ஆஸ்ரயணீயத்வாகாரத்தையுமநுஸந்தித்து இப்படி சரண்யனான திருவேங்கடமுடையான் விஷயமாக ஸக்ரமஸமக்ர சரணாகதியைப்பண்ணித் தலைக்கட்டுகிறார். *

ஈடு ;—கீழில் திருவாய்மொழியில் ப்ராப்யவேஷமிருக்கும்படி குறைவறச்சொன்னார். இத்திருவாய்மொழியில், ப்ராபகவேஷம் குறைவறச் சொல்லுகிறார். கீழில் அதிலுபாய ப்ரஸங்கமுண்டேயாகிலும் ப்ராப்யப்ரதாநமாகக்கடவது. இதில் உபேயப்ரஸங்கமுண்டேயாகிலும் ப்ராபகப்ரதாநம். கீழில் திருவாய்மொழி திருமந்த்ரம் போலே, இத்திருவாய்மொழி சரமஶ்லோகம்போலே. இரண்டுமொன்றிலேயுண்டிறே யென்னில் ; அதுசக்தியோகத்தாலே வருமதிறே. அவஸ்தாந்தரங்களைப் பற்றிவரு மிரண்டும் இரண்டாயே இருக்கக்கடவதிறே.

பெரியவார்த்தியோடே பரமபதத்திலே கேட்கும்படி கூப்பிடச்செய்தேயும் ஸர்வரக்ஷகனானவன் வந்து முகங்காட்டாமையாலே மிகவுமவஸந்நரானவர், ஶ்ரிய:பதியாய் அவாப்த ஸமஸ்தகாமனாய் உபயவிபூதியுக்தனாய் ஸமஸ்தகல்யாண குணாத்மகனாய் (க) “ 𑌵𑍈𑌕𑍁𑌣𑍍𑌠𑍇 𑌤𑍁 𑌪𑌰𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌶𑍍𑌰𑌿𑌯𑌾 𑌸𑌾𑌰𑍍𑌧𑌂 𑌜𑌗𑌤𑍍𑌪𑌤𑌿𑌃 । 𑌆𑌸𑍍𑌤𑍇 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑌕𑍍𑌤𑍈𑌰𑍍𑌭𑌾𑌗𑌵𑌤𑍈𑌸𑍍𑌸𑌹 – வைகுண்டே து பரே லோகே ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:। ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ்ஸஹ ” என்கிறபடியே ஸ்ரீவைகுண்டத்திலே நித்யஸூரிகளுக்குக் காட்சிகொடுத்துக் கொண்டிருக்கக்கடவ ஸர்வேஶ்வரன், பலரும் நம்மை இழக்க நாம்நெடுங்கை நீட்டாகவிருக்கவொண்ணாது என்று பார்த்தருளி ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப்பண்ணி ஸமகாலத்திலுள்ளார்க்குத் தன்குணசேஷ்டிதங்களைக்காட்டி யநுபவிப்பித்தும், அக்காலத்திலும் பிற்பாடரான ஸம்ஸாரிகளுக்கு மிழக்கவேண்டாதபடி ருசிஜநகனாய்க்கொண்டு திருமலையிலே நாய்ச்சிமாருடனேகூட நின்றருளினபடியைக் கண்டு அதிகாரிநியதி காலநியதி அங்கநியதி என்றாப்போலே சொல்லுகிற நிர்ப்பந்தங்களொன்று மின்றிக்கே ஆஶ்ரயிக்கலாம்படியிருக்கிற ஸௌஶீல்யத்தைக்கண்டு திருவேங்கடமுடையான் திருவடிகளில் பெரியபிராட்டியார் முன்னிலையாகத் தம்முடைய அநந்யகதித்வத்தை விண்ணப்பம்செய்து ஶரணம்புக்குத் தம்முடைய அத்யவஸாயத்தை யறிவிக்கிறார்.

கீழேயும் பலவிடங்களிலே ப்ரபத்திபண்ணினார். அவ்விடங்களிலே தர்மிபுக்கவிடத்தே நிரூபகதர்மங்களும் புகக்கடவதென்கிற ந்யாயத்தாலே லக்ஷ்மீஸம்பந்தம் சொன்னார். இங்கு அதுதன்னையே வாய்விடுகிறார்; கீழில்ப்ரபத்திகள் திருமந்த்ரம்போலே. இது த்வயம்போலே. திருமந்த்ரத்திலும் லக்ஷ்மீஸம்பந்தத்துக்கு வாசகமான ஶப்தங்கள் உண்டாயிருக்கச்செய்தே முக்தகண்டமாகச் சொல்லிற்று த்வயத்திலேயிறே; அதுபோலே இத்திருவாய்மொழி.

(உ) [𑌤𑌾𑌵𑌦𑌾𑌰𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑌥𑌾 𑌵𑌾𑌞𑍍𑌛𑌾 𑌤𑌾𑌵𑌨𑍍𑌮𑍋𑌹𑌸𑍍𑌤𑌥𑌾𑌸𑍁𑌖𑌮𑍍 தாவதார்த்திஸ்ததாவாஞ்சா தாவந்மோஹஸ்ததாஸுகம்] [தாவதார்த்தி:] இழந்ததுபெறவேணுமென்னு மதுவுமவ்வளவே. [ததாவா

(க) வாயுபுராணம்
(உ) வி-பு-

ஞ்சா] அப்ராப்தவிஷயத்தில் பண்ணும் சாபலமும் அவ்வளவே. [தாவந்மோஹ:] தேஹத்தையு மாத்மாவையும் ஏகீக்ருத்யபுத்தி பண்ணுகை. [ததாஸுகம்] (க) "ஸஷெஹெ்வா நநுயாதி - ஸஷஹ்யேவாநந்தயாதி" என்கிறதுக்கு விரோதமாய்வரும் ஸுகங்களு மவ்வளவே. [யாவஞயாதிஶரணம்த்வா மஶேஷாவநாஶநம் - யாவந்நயாதிஶரணம்த்வா மஶேஷாகநாஶநம்] ஐஶ்வர்யம் ஆத்ம ப்ராப்தி - பகவத்ப்ராப்தி விரோதி. இவையெல்லா முன்னேக்கிட்டு மளவேயிறே நிற்பதென்கிறது; இப்படியே தம்முடைய ஸகல விரோதிகளும்போய் ஸகலாபேக்ஷிதங்களும் கிடைக்கைக்கு ஒரு குறையில்லையென்று ஸதாஸந்நிஹிதனை திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ஶரணம் புகுகிறார்.

இனித்தான் ஶரணாகதி பலப்ரதையாமிடத்தில் ஶரண்யன் பக்கலிலே பண்ணவும்வேணும். தானதிகாரியாகவும் வேணும்; வ்ய திரிக்த விஷயங்களிலே பண்ணுமிடத்தில் அதுதானே ஹாநஹேது வாகக்காணாநின்றோமிறே. இங்ஙனே யிருக்கச்செய்தேயும் அவ்வோ விடங்களிலேயும் பலிக்கிறவிது-இவ்விஷயத்தில் பலியாநின்றதென்னுமிடம் கிம்புநர்ந்யாயஸித்தம். இனித்தான் அதிகாரியாமிடத்தில் மெய்யே அநந்யகதியாகவும் வேணும். ஶரணம்புகா - பலித்ததில்லை யென்ன (உ) * ஸஸமேதேஞவிஜாநாதி-அஸமர்த்தம்விஜாநாதி என் பாராகாது. மயர்வறமதிநல மருளினனென்ன, அநந்தரத்திலே மட லெடுத்துக்கொண்டு புறப்படுவார்வேணும். பண்ணின ப்ரபத்திக்கு பலம்தாழ்த்ததென்ன, வேறேபோக்கடி யுடையார்க்குக் கார்யமா காதிறே.

(௩) "ஸாமராஶேஷயிஷ்யாமி வஹ்யமாநஸமீர:- ஸாகரம்ஶோஷயிஷ்யாமி பத்ப்யாம்யாந்துப்லவங்கமா:" என்று அவன் தாழ்த்ததுவே ஹேதுவாக ஜலதத்வத்தை யழித்துப்பொ கட்டுமற்றை நாலையுங்கொண்டு கார்யங்கொள்ளுகிறேனென்றாரிறே. (௪ [க்ஷமயாஹிஸமாயுக்தம் - க்ஷமயாஹிஸமாயுக்தம்] "ஒருபெண் பெண்டாட்டி எனக்கு யென்றதை ஸ்வீகரிக்கையாவதென்" என்று ராஜ்யத்தைப் பொகட்டுப்பொறுத்துப் போந்தார். இங்கேவருணனை

(க) தை ஆந.
(உ) ரா-யு-உக-உக
(௩) ரா-யு-உக-உ உ.
(௪) ராயு-உக-உ0.

வழிவேண்டி, அவன் முகங்காட்டிற்றிலனென்று சிறிக்காலக்கை யைக்காட்டாநின்ருர்;இதிருந்தபடியென்,என்ருப்போலே இருந்தார் கள் முதலிகள். க்ஷமைக்கு விஷயமுண்டு. ஈத்ருஶஜநத்தில் க்ஷமை யொண்ணுதென்கிருர். இவன்வந்திலனென்று நாம்சீறவொண்ணாத படி வாலி புறப்படுகிறபோது தாரைவந்து காற்கட்டினவோபாதி க்ஷமைவந்து நம்மைக்காற்கட்டா நின்றதென்ருர். [ஶாந்தி - மாம்] (க) "ஸ்வபாவஶ்ச ஸம்வ்ருத்தி தா நாமஹாவஜ்ஞா நஹ்ருஷ்டம் - ஸ்வப் தப்ரமத்தருபிதாநாம் பாவஜ்ஞாநம்த்ருஷ்டம்" என்று கோபம் விளைந்த வநந்தரம் ஜந்மத்தை யுணர்ந்தார். "பிறர்கை பார்த்திருக் கும் குடிப்பிறப்பன்று" என்றிருக்கிறதில்லை. நம்மை "ஐயர்மகன்" என்றறிகிறதில்லை. [ஸ்வப்நேதத்யாதி] தந்தாம் ஸ்வபாவத்தை மறை த்துவர்த்தித்தவர்கள் ஸ்வப்நாதிதஶையிலே ஸ்வஸ்வபாவாநு குணம் பாஷிப்பர்களிறே; அப்படி இவரும் க்ஷத்ரியத்வத்தை யுணர் ந்தார்; [அயம்] மஹோததி யென்கிற பெருமையை நினைத்திரா நின்றது. தன்னைச் சிறுங்கித்திருக்கிற நம்மையறிகிறதில்லை. [மகாரா லயஃ] ஒரு அயோத்யாதிபதி கோஸலாதிபதிகளோ டொக்கக்கா ணும் தன்னைநினைத்திருக்கிறது. தன்னைமீன்படு குட்டமாகவறிகிற தில்லை. [அஸமர்த்தம் விஜாநாதி] செவ்வைகெடப்பரிமாறினுரையும் ஒக்கவிட்டுக்கார்யம் கொள்ளவல்லோமென்றறிகிறதில்லை. இவ்வள வில்செய்யவடுப்பதென்னென்னில் [திக்க்ஷமாம்] இப்போது க்ஷமை யைவேண்டோம். விதியோகமுள்ள விடத்தேயன்ருே கார்யங்கொள் வது. கோபத்தோபாதி கார்யகாலத்தே யழைத்துக்கார்யம் கொள் ளப்பார்த்தோம். அதுவென்? இக்ஷ்வாகு வம்ஶயராயிருப்பார்க்கு க்ஷமைகொண்டு கார்யம்கொள்ளவேண்டாவோ வென்னில்; [ஈத்ரு ஶேஜநே] அத்தால் பெற்றதென்? அது இங்கு ஜீவிக்கிறதில்லை. இதுக்கு இங்குள்ளாருடைய ஸம்பந்தமே பலியாநின்றதே. ஒன்பது பாட்டாலும் ஶரண்யன்படிசொல்லி பத்தாம்பாட்டிலே ஶரணம் புகுகிருர்.

---

ஈடு; அவ ;—முதற்பாட்டு; உன்னையொழிய வேறுகதியின்றிக் கேயிருக்கிற வென்னை உன்திருவடிகளிலே சேரும்படிபண்ணியரு ளவேணுமென்கிருர்.

உலகமுண்டபெருவாயா வுலப்பில்கீர்த்தியம்மானே *
நிலவும்சுடர்சூழொளிமூர்த்தி நெடியாயடியேனாருயிரே *
திலதமுலகுக்காய்நின்ற திருவேங்கடத்தெம்பெருமானே *
குலதொலடியேனுனபாதம் கூடுமாறுகூறாயே. (௧)

ப.—அநந்தரம் முதற்பாட்டில் அகிலஜகத்ரக்ஷகமான ஸ்வபாவவிசேஷங்களை யுடையையாய்க்கொண்டு திருமலையிலே ஸந்நிஹிதனானவுனை ஸ்வதஸ்ஸித்தசேஷத்வ ஸ்வரூபனான நான்கிட்டும் ப்ரகாரம் அருளிச்செய்யவேணுமென்கிறார்

உலகம்—(ப்ரளயாபத்திலே) லோகத்தை
உண்ட—அமுதுசெய்கிற விடத்தில்
பெருவாயா—ரக்ஷ்யத்தளவன்றியே பெரும் பாரிப்பை யுடைத்தான ரக்ஷோபகரணமான திருப்பவளத்தை யுடையனாய்
உலப்பு—ரக்ஷணோபயுக்தமாய் முடிவு
இல்—இன்றியே யிருக்கும்
கீர்த்தி—ஜ்ஞாநசக்த்யாதி ஸமஸ்த கல்யாணகுண ப்ரதையையும்
அம்மானே—நிருபாதிக சேஷித்வ ஸ்வரூபத்தையு முடையனாய்
நிலவுஞ்சுடர்சூழ்—இந்த ரக்ஷணத்துக்கு அஸாதாரணமான பரிகரமாய் ஸ்வாபாவிகஸௌந்தர்ய லாவண்யாத்யகில குணௌஜ்ஜ்வல்ய பூர்ணமாய்
ஒளி—அப்ராக்ருததேஜோமயமான
மூர்த்தி—திவ்யவிக்ரஹத்தை யுடையனாய்
நெடியாய்—கீழ்ச்சொன்ன ஸ்வரூபரூபகுண சேஷ்டிதங்களுக்கு பரிச்சேதமில்லாத பெருமையை யுடையனாய், (இப்படி பஞ்ச ப்ரகார விசிஷ்டனாய்க் கொண்டு)
அடியேன்—த்வததீநனான வெனக்கு
ஆருயிரே—பரிபூர்ணப்ராணபூதனாய்
உலகுக்கு—இப்படி முகந்தோற்றாதே நின்று ரக்ஷிக்குமவனன்றியே ஸர்வலோகத்துக்கும்
திலதமாய்—ஊர்த்த்வபுண்ட்ரரூபேண ப்ரஸாதாவஹமான திலகமாய்க் கொண்டு
நின்ற—ஸுஸ்த்திரமாய் நின்ற
திருவேங்கடத்து—திருமலையிலே
எம்பெருமானே—எனக்கு உன்னுடைய சேஷித்வத்தை ப்ரகாசிப்பித்து நின்றவனே!
குலம்—குலக்ரமாகதமாம்படி
தொல்—பழைய
அடியேன்—அடியேனான நான்
உனபாதம்—சேஷியாய்ரக்ஷகனாய் போக்யபூதனான வுன் திருவடிகளை
கூடுமாறு—ப்ராபிக்கும் ப்ரகாரம்
கூறாய்—அருளிச்செய்யவேணும்

ப்ரளாபத்திலேயோ ரக்ஷிக்கலாவது! விரஹாபத்தில் ரக்ஷிக்கலாகாதோ?, லோகமாகவீடுபடிலோ ரக்ஷிக்கலாவது, அது ஒருவனுக்குண்டானால் ரக்ஷிக்கலாகாதோ? ஆர்த்தியை யறியதாரையோ ரக்ஷிக்கலாவது. ஆர்த்தியறிந்து கூப்பிட்டாரை ரக்ஷிக்கலாகாதோ; ஆர்த்தித்வமில்லாதாரையோ ரக்ஷிக்கலாவது. ஆசைப்

பட்டாரை ரக்ஷிக்கலாகாதோ. வயிற்றிலேவைத்தோ ரக்ஷிக்கலாவது, வடிவுகாட்டிரக்ஷிக்கலாகாதோ? நியமித்துவேஷித்தாரையோ ரக்ஷிக்கலாவது. உன்னை யபிநிவேஷித்தாரை ரக்ஷித்தாலாகாதோ; வாயாலேயோ ரக்ஷிக்கலாவது; வார்த்தையாலே ரக்ஷிக்கலாகாதோ? அபர்யந்த குணங்களை யழியமாறியோ ரக்ஷிக்கலாவது. அவற்றை யநுபவிப்பித்து ரக்ஷிக்கலாகாதோ உறவறியாத லோகத்தையோ ரக்ஷிக்கலாவது; உறவறிந்த விஷயத்தை ரக்ஷிக்கலாகாதோ? வடிவில்வாசியறியாதாரையோ ரக்ஷிக்கலாவது; வாசியறிந்தாரை ரக்ஷிக்கலாகாதோ?. பெருமையுணராதாரையோ ரக்ஷிக்கலாவது. பெருமையுணர்ந்தாரை ரக்ஷிக்கலாகாதோ வ்யதிரேகத்தில் தரிப்பாரையோ ரக்ஷிக்கலாவது; வ்யதிரேகத்தில் தரியாதாரைரக்ஷிக்கலாகாதோ? ஸௌலப்ய ஜ்ஞாநமில்லாதாரையோ ரக்ஷிக்கலாவது. ஸுலபனென்றறிந்தாரை ரக்ஷிக்கலாகாதோ? அந்யாபேக்ஷகரையோ ரக்ஷிக்கலாவது. அநந்யார்ஹாபேக்ஷகரை ரக்ஷிக்கலாகாதோ? அந்யகதிகளையோ ரக்ஷிக்கலாவது; அநந்யகதிகளை ரக்ஷிக்கலாகாதோ? ப்ரயோஜநாந்தரபரரையோ ரக்ஷிக்கலாவது. அநந்யப்ரயோஜநரை ரக்ஷிக்கலாகாதோ; பிரியநினைப்பாரையோ ரக்ஷிக்கலாவது; கூடநினைப்பாரை ரக்ஷிக்கலாகாதோ? மஹாவ்யாபாரம் பண்ணியோ ரக்ஷிக்கலாவது (௧) ,, மாஶுச:'' என்று ரக்ஷிக்கலாகாதோவென்று கருத்து. (௧)

ஆறு ;— காருண்ய வாத்ஸல்யாத்யநவதிகாதிஶயா ஸங்க்யேய கல்யாணகுணனாகையாலும், ஸ்வதேஜஸாநிகில ஜகத்தையுமுத்பாஸிப்பியாநின்ற திவ்ய ரூபத்தையுடையனாய்,—எனக்கு தாரகனாகையாலும், பரமவ்யோம நிலயனான நீ காரணபூத விதூரவர்த்தியாகையன்றியே காரண விஷயமாகைக்காக ஸகலலோக திலகபூதமான திருமலையிலே புகுந்து நின்றருளுகையாலும், நான் உனக்குக் குடியடியேனாகையாலும் உன் திருவடிகளிலே என்னைச் சேர்த்தருளவேணுமென்கிறார். (௧)

---

ஈடு ; அவ ;—இரண்டாம்பாட்டு; கூடக்கடவீர். அதுக்கொரு குறைவில்லை. ஆனாலும் ப்ரதிபந்தகங்கள் கனத்திராநின்றதே யென்ன ; உன்கையில் திருவாழியிருக்க நீ இங்ஙனே சொல்லலாமோவென்கிறார்.

கூறாய்நீறாய்நிலனாகிக் கொடுவல்லசுரர் குலமெல்லாம் *
சீறாவெரியும்திருநேமி வலவாதெய்வக்கோமானே *
சேறார்சுனைத்தாமரைசெந்தீ மலரும்திருவேங்கடத்தானே *
ஆறாவன்பிலடியேனுன் னடிசேர்வண்ணமருளாயே. (உ)

(௧) கீதை-௧அ-௬௬-

ப—அநந்தரம் அபேக்ஷவிரோதி நிவர்த்தகனான வாயுதௌஜ்ஜ்வல்யத்தையுடைய நீ, அத்யந்தாபிநிவிஷ்டனான நான் உன் திருவடியைச் சேரும்படி க்ருபை பண்ணவேணுமென்கிருர்.

கொடு—க்ரூரராய்
வல்—ப்ரபலரான
அசுரர்—அஸுரர்களுடைய
குலமெல்லாம்—திரளெல்லாம்
கூருய்—நாநாவாகச் சிதறமாய்
நீருய்—தூளியாய்
நிலனுகி—தரைப்பட்டிருக்கச்செய்தே
சீற—பின்னையும் சீறி
எரியும்—ஜ்வலியாநிற்கிற
திரு—வீரஸ்ரீயையுடைய
நேமி—திருவாழியை
வலவா—அடக்கியாளவல்ல ஸர்வ ஶக்தியாய்
தெய்வம்—இப்படி யாஶ்ரித விரோதி நிரஸநத்தாலே நித்யஸூரிகளுக்கு
கோமானே—நிர்வாஹகனுய்க்கொண்டு
சேறு—தாமரையினுடைய பங்கஜத்வத்துக்கு நிமித்தமான சேற்றிலே
ஆர்—பூர்ணமான
சுனை—அருக்கயத்திலே
தாமரை—சிவந்த தாமரையானது
செம்—சிவந்த
தீ—தீப்போலே யிருக்கிற நிறத்தை யுடைத்தாய்க்கொண்டு
மலரும்—மலரும்படியாயிருக்கிற
திருவேங்கடத்தானே—திருமலையிலே வர்த்திக்கிறவனே!
ஆறு—ஒருகாலுமளவுபடாத
அன்பு—ப்ரேமத்தை
இல்—உடையேனுய்
அடியேன்—ஶேஷபூதனுன நான்
உன்—ஸ்வரூபாநுரூபமான வுன்
அடி—திருவடிகளை
சேர்வண்ணம்—சேரும்படி
அருளாய்—க்ருபைபண்ணி யருளவேணும்.
நேமிவலவனென்று—வலத்திலே யுடையவனென்னவுமாம்
ஆகவென்று—எச்சம் திருத்திச்சொல்லவுமாம். (௨)

ஆறு;—(கூருய்) ப்ரதிபந்தகங்களான பாபங்கள் போனலன்றே என்னோடு ஸம்ஶ்லேஷிக்கப் பெறலாவதென்னில்; ஸமாஶ்ரிதரான தேவர்களுக்கு விரோதிகளான வஸுரவர்க்கங்களைத் திருவாழியைக்கொண்டு நிரஸித்தாப்போலே என் பக்கலுள்ள ப்ரதிபந்தகத்தையும் நிரஸித்து ஸ்வப்ரபையாலே திருமலையெல்லாம் விளங்கும்படி அத்யுஜ்ஜ்வலமாய் அதிஶீதளமாய் ஸும்ருஷ்டநாளமாய் உத்புல்லமாயிருந்த வருணுரவிந்த ப்ருந்தங்களாலே யலங்க்ருதமான திருமலையிலே நின்றருளின உன் திருவடிகளை உபர்யுபரி வர்த்தமாந பகவத்விஷயாநுராக மஹார்ணவாந்தர்நிமக்நனுன வடியேன் சேரும்படி க்ருபைபண்ணியருளாயென்கிருர். (௨)

௩-டு; அவ;—மூன்றும்பாட்டு, அருளாயென்றீர், இங்ஙனே நினைத்தபோதாக வருளப்போமோவென்ன, வ்யதிரிக்த விஷயங்களில் போகாதபடியான ஜ்ஞாநலாபத்தைப்பண்ணித்தந்த வுனக்கு ப்ராப்திபண்ணித்தருகை பெரியபணியோவென்கிறார். என்றால் வந்த குறையறுத்த வுனக்கு உன்றால்வரும் குறையறுக்கை பெரிய பணியோ.

வண்ணமருள்கொளணிமேகவண்ணா மாயவம்மானே! *
எண்ணம்புகுந்துதித்திக்குமமுதே யிமையோரதிபதியே *
தெண்ணலருவிமணிபொன்முத்தலைக்கும் திருவேங்கடத்தானே *
அண்ணலேயுன்னடிசேர வடியேற்காவாவென்னாயே. (௩)

ப—அநந்தரம் உன்னுடைய ரூபத்தாலும் குணத்தாலும் இனிமையாலும் ஸூரிகளுக்கு உத்துங்காநுபாவ்யனாயிருக்கிற நீ அபேக்ஷாநிரபேக்ஷமாகத் திருமலையிலே ஆஸ்ரயணீயனாய் வந்தவோபாதி அடியோங்களுக்கு இரங்கியருளவேணுமென்கிறார்.

வண்ணம்—நிறத்தில்
மருள்கொள்—பிச்சேறும்படியான
அணி—அழகையுடைத்தாயுள்ள
மேகம்—மேகம்போன்ற
வண்ணா—வடிவையுடையனாய்
மாயம்—ஆஸ்சர்யாவஹமான குணங்களால்
அம்மானே—ஸர்வாதிகனாய்
எண்ணம்—புஜிக்கவொண்ணாதபடி நெஞ்சுக்குள்ளே
புகுந்து—புகுந்து
தித்திக்கும்—ரஸிக்கும்
அமுதே—அம்ருதமாய்
இமையோர்—இந்த விக்ரஹகுண ஸாரஸ்யங்களை நித்யஸூரிகளுக்கு அநுபவிப்பிக்கும்
அதிபதியே—மேன்மையையுடையனாய்
தெள்—தெளிந்து
நல்—தர்ஸநீயமான
அருவி—அருவிகள்
மணி—மணியையும்
பொன்—பொன்னையும்
முத்து—முத்தையும்
அலைக்கும்—அலைக்கும்
திருவேங்கடத்தானே—திருமலையிலே ஸந்நிஹிதனாய்
அண்ணலே—அஸாதாரண ஸேஷித்வத்தை ப்ரகாஸிப்பித்துக் கொண்டு நிற்கிறவனே;
உன்—உன்னுடைய
அடி—ப்ராப்தமான திருவடிகளை
சேர—சேரும்படி
அடியோர்க்கு—ஸேஷபூதரான வெங்களுக்கு
ஆ—ஆ—ஐயோ ஐயோ
என்னாய்—என்றிரங்கியருளவேணும்.
வண்ணமருளென்று—உதாரஸ்வபாவமென்றுமாம். (௩)

ஆறு ;—( வண்ணமருள்கொள் ) நிர்ஹேதுகமாகச் செய்யக்கடவதோவென்னில்; உன்னோடு ஸம்ச்லேஷிக்கைக்கு அயர்வறுமமரர்களுளராயிருக்கச்செய்தே கேவலக்ருபையாலே நிரதிசயரமணீய நீலமேக ஸத்ருசாச்சர்யபூத திவ்யரூப விசிஷ்டனாய்க்கொண்டு என் நெஞ்சு நிறையப்புகுந்து எனக்கு இனியையானாப்போலே இன்னம் உன் க்ருபையாலே ஸுப்ரஸந்நரமணீய ஸலிலஸரித்தரங்க பரம்பராநீதமான விமலருசி விவிதமணிகநக மௌக்திக நிகரங்களாலே விராஜமாநமான திருமலையிலே நின்றருளின வுன்திருவடிகளிலே பிரானே என்னைச் சேர்த்தருளவேணுமென்கிறார். (ரு)

---

ஈடு ; அவ ; நாலாம்பாட்டு, உன்னை ப்ராபிக்கைக்குறுப்பாக நீ கண்டுவைத்த ஸாதநங்கள் எனக்கொன்று முடலாகிறதவில்லை. ஆனபின்பு தேவரை நான் ப்ராபிக்கைக்கு எனக்கென்னத்தனியே ஒரு ஸாதநங்கண்டு தரவேணுமென்கிறார்.

நம்பிள்ளை ஜீயரை ஒருநாள் "பஞ்சமோபாயமென்றுகொண்டு ஒன்றுண்டு என்று சொல்லாநின்றார்கள். நாட்டிலேயும் அங்ஙனேயிருப்பதொன்றுண்டோ" என்று கேட்டருள ; "நானறிகிறிலேன், இனி சதுர்த்தோபாயந்தான் பகவாநேயாயிருக்க, வ்யோமாதீதஞ் சொல்லுவாரைப்போலே அவனுக்கு மவ்வருகே யொன்றுண்டென்கையிறே ; அது நான் கேட்டறியேன்" என்றருளிச்செய்தார். ஆனால், "ஆவா" என்கிற பாட்டருளிச்செய்யும்போது எனக்குத்தனியே ஒரு ஸாதநங்கண்டு தரவேணுமென்கிறாரென்றருளிச்செய்கையாயிருக்குமேயென்ன, "அதுவோ ; அது உன் ப்ரதிபத்தியில் குற்றங்காண், அதுக்கு இங்ஙனேகாண்பொருள், நீயும் உளையாயிருக்க, நானிங்ஙனே யிழப்பதேயென்கிறார்காண்" என்றருளிச்செய்கிறார்;—(க) [ஸாஹம் கேசக்ரஹம் ப்ராப்தா த்வயி ஜீவத்யபி ப்ரபோ - ஸாஹம் கேசக்ரஹம் ப்ராப்தாத்வயிஜீவத்யபி ப்ரபோ] நீயும் உளையாயிருக்க, என் மயிரைப் பிடித்துச் சிலர் நலியும்படி நான் பரிபூதையாவதே ? உன் ஸத்தைக்கும் என் பரிபவத்துக்கும் என்ன சேர்த்தியுண்டு, [ப்ரபோ] நீயும் என்னோடொக்க ஸ்த்ரீயானாயாகில் நானறியிருக்கலாயிற்றே. நீ பரிப்ருடனாயிருக்கச்செய்தே நான் நோவுபடுவதே. நஞ்சீயர் ஸ்ரீபாதத்திலே யாச்

---

(க) பார-உத்யோ.

ரயித்தாரொருவன், எம்பெருமானே உபாயமாகில் ப்ரபத்திகொண்டு இங்குச் செய்கிறதொன்றும் கண்டிலேன், என்ன; செவியைப்புதைத்து “நாதமுனிகள் தொடங்கி இவ்வளவும்வர நம்மாசார்யர்கள் பரமரஹஸ்யமாக வுபதேசித்து ஓராண்வழியாய்க் கொண்டுபோந்த வித்தை இதின் சீர்மையறியாதவனுக்கு மஹாபாபியேன் இத்தை வெளியிடுவதே” என்று திருமுடியிலே யடித்துக்கொண்டு திருப்பள்ளியறையிலே புக்கருளினார். திவ்யமங்கள விக்ரஹமும் விக்ரஹகுணங்களும் திவ்யாத்மஸ்வரூபமும் ஸ்வரூபகுணங்களும் நித்யமுக்தர்களுக்கு ப்ராப்யமானப்போலே, முமுக்ஷுவாய் ப்ரபந்நனான இவ்வதிகாரிக்கு த்வயஶரீரமே ப்ராப்யமாயிருக்குமிறே.

ஆவாவென்றுதுலகத்தை யலைக்குமசுரர் வாணாள்மேல் *
தீவாய்வாளிமழைபொழிந்த சிலையா திருமாமகள்கேள்வா
தேவா* சுரர்கள்முனிக்கணங்கள் விரும்பும்திருவேங்கடத்தானே
பூவார்கழல்களருவினையேன் பொருந்துமாறுபுணராயே. (௪)

ப —அநந்தரம் ஜகத்துக்கு விரோதிகளானவரை யழியச்செய்யும் ஶ்ரீமத்தையையுடைய நீ, உன் நிரதிஶயபோக்யமான திருவடிகளை நான் கிட்டும்படி பண்ணியருளவேணுமென்கிறார்,

உலகத்தை—லோகத்தை
ஆஆ என்றுது—ஐயோ ஐயோவென்றிரங்காதே
அலைக்கும்—நலிந்தலைக்குமவர்களான
அசுரர்—ஆஸுரப்ரக்ருதிகளுடைய
வாணாள்மேல்—ப்ராணன் விஷயமாக
தீவாய்—அக்நிமுகமான
வாளி—அம்புகளை
மழை—மழைபோலே
பொழிந்த—சொரிகிற
சிலையா—ஶ்ரீஶார்ங்கத்தையுடையையாய்
திருமாமகள்—அந்தவிரோதி நிரஸநத்தாலே ஹ்ருஷ்டையாய் வீரபத்நியாயுள்ள லக்ஷ்மிக்கு
கேள்வா—அநுரூபநாயகனாய்
தேவா—அத்தாலே உஜ்ஜ்வலரூபனாய்
சுரர்கள்—இந்த விரோதிநிரஸநம்பற்றுசாக தேவர்களும்
முனி—ருஷிகளும்
கணங்கள்—திரள்திரளாக
விரும்பும்—ஆதரிக்கும்படியான
திருவேங்கடத்தானே—திருமலையிலே வர்த்திக்கிறவனே
பூ—அவர்களிட்டபூவாலே
ஆர்—நிறைந்த
கழல்கள்—திருவடிகளை
அருவினையேன்—அநுபவ யோக்யனாய் வைத்து இழக்கும்படி துஸ்தரமான பாபத்தை யுடையேனை நான்
பொருந்துமாறு—கிட்டும் ப்ரகாரம்
புணராய்—கற்பித்தருளவேணும்.
புணர்த்தல்—கிட்டுவித்தலாய், சேர்த்துக்கொண்டருள வேணுமென்றுமாம் (௪)

ஆறு ;—(ஆவாவென்றது) நிர்க்ருணரான வஸுரராலே உபத்ருதமான லோகத்தினுடைய வ்யஸநம் பொறுக்கமாட்டாமை அவ்வஸுரருடல் மராக்நியாலே தக்தமாம்படி அவர்கள் ப்ராணன்கள் மேலே மரவர்ஷத்தை வர்ஷித்து லோகத்தை நிருபத்ரவமாக்கினாப்போலே, நித்யஸித்த புருஷர்களுக்கும் ஸ்ப்ருஹணீயமான திருமலையிலே பிராட்டியோடேகூட நின்றருளின வுன்னுடைய நிரவதிக போக்யமான திருவடிகளைச் சேருகைக்கு எனக்கென்னவே அபூர்வமாயிருப்ப தோருபாயத்தைப் பரிகல்பித்து, அவ்வுபாயத்தாலே என்னைச் சேர்த்தருளி, அடியேனுடைய ஸமஸ்த துக்கத்தையும் போக்கியருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறார். (௪)

---

ஈடு ; அவ ;—அஞ்சாம்பாட்டு, நீர் இங்ஙன் த்வரிக்கிறதென் ? உம்முடைய வபேக்ஷிதம் செய்கிறோமிறேயென்ன, அது என்றென்கிறார்

புணரா நின்றமரமேழன் றெய்தவொருவில்வலவாவோ *
புணரேய்நின்றமரமிரண்டின் நடுவேபோனமுதல்வாவோ *
திணரார்மேகமெனக்களிறு சேரும்திருவேங்கடத்தானே *
திணரார்சார்ங்கத்துனபாதம் சேர்வதடியேனென்நாளே. *

ப —அநந்தரம் ஆச்ரித ரக்ஷணார்த்தமான வநாயாஸ வ்யாபாரத்தையுடைய வுன்திருவடிகளைச் சேர்வதெந்நாளென்கிறார்.

புணரா—செவ்வைகண்டு இலக்குக் குறிக்கவொண்ணுதபடி திரளாக
நின்ற—நின்ற
மரம்—மராமரங்கள்
ஏழு—ஏழையும்
அன்று—மஹாராஜர் பலாதிசங்கை பண்ணினவன்று
எய்த—அவருக்கு விஸ்வாஸம் பிறக்கும்படியாக வெய்த
ஒருவில்வலவா—ஏகதநுர்த்தரனாய்
புணர்—சேர்த்தி
ஏய்—பொருந்தும்படி
நின்ற—நின்ற
இரண்டு—இரண்டு
மரத்தின்—மரத்தின்
நடுவே—நடுவே
போன—போய
முதல்வா—ஜகத்துக்குக் காரணபூதனானவனாய்
திணர்—சதிப்பு
ஆர்—விஞ்சின
மேகமென—மேகங்களென்னலாம்படி
களிறு—யானைகள்
சேரும்—சேர்ந்துவர்த்திக்கிற
திருவேங்கடத்தானே—திருமலையிலே ஸந்நிஹிதனானவனே

திணர்— பிடித்த கை நிரம்பும் பெருமையை
ஆர்—உடைத்தான
சார்ங்கம்-ஸ்ரீசார்ங்கத்தையுடையனுன
உன—உன்
பாதம்—திருவடிகளை
அடியேன்—உன் வீர சரித்துக்குத் தோற்று அடிமைப்பட்ட நான்
சேர்வது—சேருவது
எந்நாள்—எந்நாள்.
ஓஓவென்று—சேரப்பெருத விஷாதா திஸயத்தைக் காட்டுகிறது
திணர்—கதிப்பாய், பெருமையைச் சொல்லுகிறது.

ஆறு ;—(புணரா) இதுக்குமுன்பு க்லிப்தமன்றியே அபூர்வமாயிருப்பதோருபாயத்தைப் பரிகல்பிக்கமுடியுமோவென்னில், ஒரு திருச்சரத்தாலே மஹீதரஸங்கிபமான மராமரங்களேழையும் மஹீதரத்தையும் ரஸாதலத்தையும் உருவும்படியெய்த வுனக்குமுடியாததுண்டோ ? ஆதலால் அன்று உனக்கொரு தீங்கு விளையாதபடி மருதின் நடுவேபோய் என்னுடைய மஹாபயத்தைப்போக்கி என்னை உஜ்ஜீவிப்பித்தாப்போலே ஸர்வபூத ஶரண்யமான திருமலையிலே ப்ரணதஜந துரிதநிரஸந ஸமர்த்தமான ஸ்ரீஶார்ங்க ப்ரப்ருத்ய ஸங்க்யேய திவ்யாயுதோ பேதனுய்க்கொண்டு நின்றருளினவுன்திருவடிகளிலே சேர்த்து என்னை உஜ்ஜீவிக்கப்பண்ணுவது எந்நாளென்கிறூர். (௫)

---

ஈடு ; அவ ;—ஆறும்பாட்டு, எந்நாளென்று ஸந்தேஹிக்கிறதென் ? அதொரு தேசவிசேஷத்திலே வ்யவஸ்த்திதமன்றோ வென்ன, அங்குள்ளாரு மிங்கேவந்தன்றோ உன்னைப்பெற்றநுபவிக்கிறதென்கிறூர்; அங்ஙனன்றிக்கே, ப்ரயோஜநாந்தரபரரான வந்தரஜாதிகளுங்கூட அநந்யப்ரயோஜநரைப்போலே வந்தாஶ்ரயிக்க நிற்கிறவிடத்தே நானிழந்துபோவதே யென்கிறூராகவுமாம்.

எந்நாளே நான்மண்ணளந்த இணைத்தாமரைகள்காண்பதற்கென்று *
எந்நாளும்நின்றிமையோர்களேத்தி யிறைஞ்சியினமினமாய் *
மெய்ந்நாமனத்தால்வழிபாடுசெய்யும் திருவேங்கடத்தானே *
மெய்ந்நாளெய்தியெந்நாளுன்னடிக் களடியேன்மேவுவதே. (௬)

ப.—அநந்தாம் அதிஶயிதஜ்ஞாநரான ஸூரிகளும் அடிமைசெய்யும் திருமலையிலே உன் திருவடிகளைக்கிட்டி நானடிமை செய்வது எந்நாளென்கிறூர்.

மண்—வரையாதே பூம்யுபலக்ஷித ஸகல லோகத்தையும்
அளந்த—அளந்து எல்லாரோடும் ஸம்ஶ்லேஷித்த ஶ்ரீபாதத்வயத்தை யுடைய
தாமரைகள்—திருவடித்தாமரைகள்
இணை—இரண்டையும்
நாம்—பாரத்வைகாநுபவபரரான நாம்
காண்பதற்கு—காண்பதற்கு
எந்நாளேம்—எந்நாளையுடையோம்
என்று—என்று
இமையோர்கள்—அஸ்கலித ஜ்ஞாநரான ஸூரிகள்
எந்நாளும்—எல்லாக்காலத்திலும்
நின்று—நின்று
ஏத்தி—இப்படி சொல்லி ஸ்துதித்து
இறைஞ்சி—வணங்கி
இனமினமாய்—திரள்திரளாக
மெய்ந்நாமனத்தால்—ஶரீரவாங்மநஸ்ஸுக்களாலே
வழிபாடு—அடிமை
செய்யும்—செய்யும்படியான
திருவேங்கடத்தானே—திருமலையிலே ஸந்நிஹிதனானவனே!
அடியேன்—அநந்யார்ஹனாய்
நான்—அபிநிவிஷ்டனான நான்
மெய்—ஸ்வப்நகல்பமான மாநஸாநுபவமின்றியே மெய்யேகண்டு
எய்தி—கிட்டி
உன்—உன்
அடிக்கள்—திருவடிகளிலே
மேவுவது—பொருந்துவது
எந்நாள்—எந்நாள்.
எந்நாளேமென்று—எந்நாளை யுடையோமென்றபடி. (௬)

ஆறு ;—(எந்நாளே) பரமவ்யோமத்திலிருக்கும் ஸர்வ ஸ்வாமிக்கு ஸர்வஶேஷவ்ருத்தியும் பண்ணுகையன்றோ வெல்லார்க்கும் ப்ராப்யமென்னில், அங்குள்ள அயர்வறுமமரர்களும், திருவேங்கடமுடையான் திருவடிகளையென்றோ நாங்கள் காண்பதென்று ஆசைப்பட்டு இங்கே இனமினமாகவந்து உன்னுடைய திருவடிகளிலேயன்றோ வாங்மந: காயங்களாலே ஸர்வகாலமும் ஸர்வஶேஷவ்ருத்தியும் பண்ணுகிறது. அப்படி எனக்கும் இதுவே ப்ராப்யமாதலால் திருமலையிலே செல்லவேணுமென்னத்தகாத நான் மெய்யாகத்திருமலையிலே வந்து உன்திருவடிகளிலே ஸர்வ காலமும் ஸர்வ கரணங்களாலும் ஸர்வஶேஷவ்ருத்தியும் பண்ணுவதென்றோவென்கிறார். (௬)

---

ஏழ் ; அவ ;—ஏழாம்பாட்டு, மெய்ந்நானெய்தி யென்கிற விந்த ஜ்ஞாநலாபமுமக்கு உண்டாயிற்றிறே. அது பலத்தோடே வ்யாப்தமாயல்லது நில்லாதிறே. ஆனபின்பு இவ்வளவும் நீர் ஆறியிருந்தாலோவென்ன, அத்தனை க்ரமப்ராப்தி பார்த்திருக்கப்போகிற

தில்லை, உன் போக்யதையென்கிறார். உன்றனையாறியிருக்க நா மாட்டுகிறிலேன்.

அடியேன்மேவியமர்கின்ற வமுதேயிமையோரதிபதியே *
கொடியாவடுபுள்ளுடையானே கோலக்கனிவாய்பெருமானே
செடியார்வினைகள்தீர்மருந்தே திருவேங்கடத்தெம்பெருமானே
நொடியார்பொழுதுமுனபாதம் காணநோலாதாற்றேனே.

**ப**—அநந்தரம் என்னோடு ஸூரிகளோடு வாசியற ஸர்வ ஸாதாரணமா ரஸிப்பித்துக்கொண்டவனை யநுபவிக்கைக்கு ஸாதநம் அநுஷ்டியாதிருக் அநுஷ்டித்துப்பலம் தாழ்ந்தாரைப்போலே க்ஷணகாலமும் பொறுக்கமாட்டு றிலேனென்கிறார்.

அடியேன்—நிருபாதிக ஶேஷத்வத்தை ஸ்வரூபமாகவுடையேனான நான்
மேவி—கிட்டி
அமர்கின்ற—நிரந்தராநுபவம் பண்ணும்படியான
அமுதே—நித்யபோக்யபூதனாய்
இமையோர்—இப்படி ஸூரிகளையுமநுபவிப்பித்து அவர்களுக்கு
அதிபதியே—நிர்வாஹகனாயிருக்கும் மேன்மையை யுடையையாய்
அடு—இந்த போக்யதைக்கு ஸூசகமாம்படி ஆஶ்ரிதவிரோதி நிரஸநஶீலனான
புள்—பெரியதிருவடியை
கொடியா—கொடியாக
உடையானே—உடையையாய்
கோலம்—இந்த போக்யதாவர்த்தகமான ஸௌந்தர்யாதிகளையுடைத்தாய்
கனி—பக்வபலம்போலே சிவந்த
வாய்—அதர ஶோபையை யுடையனாய்க்கொண்டு
பெருமானே—இந்த போக்யதைக்கு எல்லை காணவொண்ணாத பெருமையை யுடையனாய்
செடி—போகப்ரதிபந்தகமாய் செடி போலே
ஆர்—செறிந்த
வினைகள்—பாபங்களை
தீர்—தீர்க்கைக்கு
மருந்தே—அப்ரதிஹதௌஷதமாய்
திருவேங்கடத்து—திருமலையிலே ஸந்நிஹிதனாய்
எம்பெருமானே—என்னை அடிமை கொண்ட ஸ்வாமியே
உன பாதம்—உன் திருவடிகளை
காண—காண்கைக்கு
நோலாது—நோற்றுவையாதே
நொடி—நோற்றார் பலம் தாழ்க்துப்படும் கணக்கிலே நொடி
ஆர்—சேர்ந்த
பொழுதும்—க்ஷணமாத்ரமும்
ஆற்றேன்—ஆற்றமாட்டுகிறிலேன்.

ஆறு ;—(அடியேன்மேவி) உபாயாநுஷ்டாநம் பண்ணிலன்றோ விந்தப்ராப்யம் பெறலாவதென்னில் ; பரமவ்யோமநிலயரான

பரமஸாரிகளாலே பரிவ்ருதனுய்க்கொண்டு, உனக்கு விஜயத்வஜமாய் ஆஸ்ரிதவிரோதி நிரஸநஸ்வபாவனுன பெரிய திருவடித் திருத்தோளிலே யேறியருளி எனக்காகத் திருமலையிலே புகுந்தருளி என் பக்கலுள்ள ப்ரதிபந்தகத்தைப்போக்கி, என்னெஞ்சிலேவந்துபுகுந்தருளி உன் திருப்பவளத்தினழகாலே ப்ராக்ருத விஷயப்ரவணனுன வென்னையுங்கூடத் தோற்பித்தடிமையாக்கி ஒருக்ஷணமாத்ர விச்சேதத்திலும் ஆத்மதாரணக்ஷமனன்றியே அவிச்சேதேநநானுன்னையநுஸந்திக்கும்படி எனக்கு பரமபோக்யமாயிருக்கையாலே உன்னைக் காண்கைக்கு ஓருபாயமநுஷ்ட்டித்திலேனுகிலும் உன்னைக் காணுதொழியில் தரிக்கமாட்டேன். ஆகலால் உன்னைக்காட்டியருளாயென்கிருர். (எ)

---

ஈடு ; அவ ;—எட்டாம்பாட்டு, உன்னைக்கிட்டுகைக்கு என்தலையிலொருஸாதநமில்லையென்னுநின்றீர், இதொரு வார்த்தையோ, ஸாதநமநுஷ்டித்தார்க்கன்றி பலமுண்டோவென்ன, தந்தாமுடைய அபிமதஸித்தி ஸாதநாநுஷ்டாநத்தாலே யென்றிருக்கும் ப்ரஹ்மாதிகளுக்கும் கிட்டுனல் பாசுரமிதுவன்றோ வென்கிருர். தந்தாமுடைய வாஞ்சங்சங்கத்தை முன்னிடுமத்தனைபோக்கி ஒன்றநுஷ்டித்துப் பெறலாம்படியோ நீயிருக்கிறது.

நோலாதாற்றேனுனபாதம் காணவென்று நுண்ணுணர்வில் *
நீலார்கண்டத்தம்மானும் நிறைநான்முகனுமிந்திரனும் *
சேலேய்கண்ணுர்பலர்சூழ விரும்புந்திருவேங்கடத்தானே *
மாலாய்மயக்கி அடியேன்பால் வந்தாய்போலேவாராயே (அ)

ப —அநந்தரம் ஸாவரோதநரான வீஸ்வராபிமாநிகளும் ஸாச்ராஸ்ரயணம் பண்ணும்படி ஸுலபனுய் நிற்கிற நீ, க்ருஷ்ணனுய் வந்தாப்போலே என்பக்கலிலே வரவேணுமென்கிருர்.

உனபாதம்—உன் திருவடிகளை
காண—காண்கைக்கு
நோலாது—ஸாதநமநுஷ்டியாதே வைத்து
ஆற்றேன்—ஆற்றமாட்டுகிறிலேன்
என்று—என்றுசொல்லி
நுண்ணுணர்வில்—ஸர்வஜ்ஞனுகைகையாலே ஸூக்ஷ்மார்த்த தர்மியாய்
நீலார்—விஷத்தாலே கருமையார்ந்திருக்கிற
கண்டம்—கண்டத்தையுடையனுய்

அம்மானும்—அத்தாலே ஜகத்ப்ரதாநனை ருத்ரனும்
நிறை—தஜ்ஜநகனாய் ஸ்ரஷ்ட்ருத்வாத்யநுகுண ஜ்ஞாநாதி பூர்ணனை
நான்முகனும்—சதுர்முகனும்
இந்திரனும்—த்ரைலோக்யை ஶ்வர்ய விஶிஷ்டனை விந்த்ரனும்
சேலேய்—முக்தமான சேல்போலேயிருக்கிற
கண்ணார்—கண்ணையுடையரான
பலர்—உமாஸரஸ்வதீஶசீப்ரப்ருதிகளான பலபெண்டுகளும்
சூழ—தங்கள் பரிஸரவர்த்திகளாக
விரும்பும்—ஸாதரமாக வாஶ்ரயிக்கு
திருவேங்கடத்தானே,—திருமலையிலே ஸந்நிஹிதனானவனே
மாலாய்—கரிய நிறத்தையுடையனாய்க் கொண்டு க்ருஷ்ணனா
மயக்கி—குணசேஷ்டிதங்களாலே எ வரையும் மயக்
வந்தாய்போலே—வந்தாப்போலே
அடியேன்பால்—உன்னையொழியச் செல்லாதபடி அநந்யார்ஹனான வென்பக்கலிலே
வாராய்—வரவேணும்.
மாலாய்—க்ருஷ்ணனா யென்றபடி.

ஆறு ;—(நோலாதாற்றேன்) உபாயஶூந்யராயிருந்து வைத்து ஆசைப்பட்டால் கிடைக்குமோவென்னில்; அறிவுடையரான ஶர்வ சதுர்முகேந்த்ராதி தேவர்களும் கூட ஸபரிக்ரஹமாகவந்து, நாங்கள் உபாயஶூந்யராகிலும் உன்னைக்காணுதொழியில் தரிக்கமாட்டோமென்றாசைப்பட்டன்றோ உன்னைக்காணப்பெறுகிறது. ஆகலால் அடியேனும் உன்னை ஸர்வகாலமும் காணும்படி வரவேணுமென்றபேக்ஷிக்க- அப்போதே எழுந்தருளாவிட்டவாறே இப்படி செய்கை திருவுள்ளமன்றாகில், உன்னைக்காணப்பெறாத வ்யஸநத்தாலே பித்தேறி மயங்கியிருந்தவடியேன்பால் ஶ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வந்து தோற்றினாப்போலேயாகிலும் வந்தென்னை தரிப்பித்தருளாயென்கிறார்.

(அ)

---

ஈடு ; அவ ;—ஒன்பதாம்பாட்டு, தாம் அபேக்ஷித்தபோதே காணப்பெறாமையாலே இப்போதே உன்னைக்காணவிடில் தரிக்க மாட்டேனென்கிறார்.

வந்தாய்போலேவாராதாய் வாராதாய்போல்வருவானே *
செந்தாமரைக்கண்செங்கனிவாய் நால்தோளமுதேயெனதுயிரே *
சிந்தாமணிகள்பகரல்லைப் பகல்செய்திருவேங்கடத்தானே *
அந்தோவடியேனுனபாத மகலகில்லேனிறையுமே. (௯)

ப.—அநந்தரம் அதிஶயிதபோக்யமான வவயவஶோபையை யுடைய ஞன வுன்திருவடிகளை க்ஷணமும் பிரியமாட்டேனென்கிறார்.

வந்தாய்போலே—அநாஶ்ரித விஷயத்தில் வந்துகைப் புகுந்தாய்போலே
வாராதாய்—கைவாராதிருக்குமவனாய்
வாராதாய்போல்—ஆஶ்ரித விஷயத்தில் ஆகிஞ்சந்யத்தாலே வருகைக்கு ஶங்கையில்லையென்று நினைத்திருக்கச் செய்தே
வருவானே—இஷ்டவிநியோகார்ஹமாம்படிகை வருமவனாய்
செம்தாமரை—சிவந்த தாமரைப்போலேதர்ஶநீயமாய் ஜிதமென்னும்படி பண்ணும்
கண்—திருக்கண்களையும்
செம்—சிவந்த
கனி—கனிபோலே போக்யமாய்
வாய்—(க) "ஶாஶகம் ஶரணம் வ்ரஜ - மாமேகம் ஶரணம் வ்ரஜ" என்னும் திருப்பவளத்தையும்
நால்தோள்—(உ) "ஸமாஶ்ரிதவஶ்ய ஸுகாடம்பரிஷஸ்வஜே" என்று ஆஶ்ரிதரை யெடுத்தணைக்கும் நாலு திருத்தோள்களையு முடையனாய்
அமுதே—ஆஶ்ரிதர்க்கு நித்யபோக்யனாயிருக்கிற விருப்பை
எனது—எனக்கு ப்ரகாஶிப்பித்து
உயிரே—தாரகனானவனாய்
சிந்தாமணிகள்—நினைத்ததெல்லாம் கொடுக்கவற்றான மஹார்க்க ரத்நங்களினுடைய
பகர்—ஒளியானது
அல்லை—(ஸக்ருத்திவாவாம்படி) ராத்ரியை
பகல்செய்—பகலாக்குவதான
திருவேங்கடத்தானே—திருமலையிலே ஸந்நிஹிதனானவனே
அந்தோ—ஐயோ
உனபாதம்—நிரதிஶயபோக்யமான வுன் திருவடிகளை
அடியேன்—அநந்யார்ஹனும்படி அத்யந்த பாதந்த்ரனான நான்
இறையும்—ஏகதேஶமும்
அகல—அகல
கில்லேன்—க்ஷமனாகிறிலேன்.
அந்தோவென்றது—ஆர்த்திக்குமேலே அபேக்ஷிக்கவும் வேண்டுவதேயென்று கருத்து. பகர் - ஒளி. (கਂ)

ஆறு ;—(வந்தாய்போலே) ப்ரதிகூலர்க்குக் கண்டவாற்றாலே எளியாரைப்போலேயிருந்து அரியையாகையாலும், ஆஶ்ரிதர்க்குக் கண்டவாற்றால் அரியாரைப்போலேயிருந்து எளியையாயிருக்கையாலும், நீ என்னை த்வத்ஸௌந்தர்யைக தாரகபோஷகபோக்யனாக்குகையாலும் நிககரகிரணஸந்நிபமாக ஸ்வப்ரபைகளாலே ராத்ரியையும் பகலாக்காநின்ற ரத்நங்களாலே அலங்க்ருதமான திருமலை

(க) கீதை-கஅ-சுசு. (உ) ராயு-க-கஒ.

யிலே எனக்காக நின்றருளுகையாலும் அடியேன் ஒருக்ஷண( ம்
உன் திருவடிகளை விஸ்லேஷிக்கமாட்டாமையாலும் உன் க்ரு ப
யாலே அடியேனை உன் திருவடிகளிலே சேர்த்தருளவே று
மென்கிறார். (௯)

---

ஈடு; அவ;—பத்தாம்பாட்டு, தம்முடைய வபேக்ஷிதம் ச க்
கென ஸித்திக்கைக்காகப் பெரியபிராட்டியாரைப் புருஷகாரமா க்
கொண்டு திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ஶரணம் ட து
கிறார். ஆக, ஒன்பது பாட்டாலும் ஶரண்யன் ஸ்வரூபத்தை ச்
சொன்னார். இதில் தம்முடைய ஸ்வரூபத்தைச்சொல்லிச் ர
ணம் புகுகிறார். கீழே, அடியேனென்றும், அருவினையேனென்[று] ம்
தம்முடைய வாகிஞ்சந்யத்தையும் ஶேஷத்வத்தையும் அவனுடை ப
ஶரண்யதைக் குறுப்பாகச்சொல்லிக்கொண்டு போந்தார். இங் ந
அது தன்னையே பேற்றுக்குடலாகச்சொல்லி ஶரணம் புகுகி[ற] :.
இப்பாட்டு தன்னை த்வயத்தில் பதங்களோடொக்க யோஜித்து த்
தலைக்கட்டக்கடவது; அதிலர்த்த ப்ராப்தமான அஹமர்த்தத்தை த
இங்கு அடியேனென்கிறது.

அகலகில்லேனிறையுமென் றலர்மேல்மங்கையுறைமார்பா *
நிகரில்புகழாயுலகம்மூன்றுடையா யென்னையாள்வானே *
நிகரிலமரர்முனிக்கணங்கள் விரும்புந்திருவேங்கடத்தானே *
புகலொன்றில்லாவடியேனுன் னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே.

ப—அநந்தரம், ஆஶ்ரயணீயதைக்கு ஏகாந்தமான புருஷகாரயோகத்தை
யும் குணயோகத்தையு முடையையாயிருக்கிற வுன் திருவடிகளை அநந்யக
யாய்க்கொண்டு ஆஶ்ரயித்தேனென்று ஸக்ரமமாக ஶரணாகதியைப் ப
ணுகிறார்.

இறையும்—ப்ரபாப்ரபாவாங்களைப் போலேயிருக்கிற ஸ்வரூபஸம் பந்தத்தாலும் எதிர்த்தலையில் போக்யதாதிஶயத்தாலும் க்ஷணமாத்ரமும்
அகல—விஶ்லேஷிக்க
கில்லேன்—க்ஷமையல்லேன்;
என்று—என்று

அலர்மேல்—பூவில் பிறப்பாலுண்ட ன மார்த்தவபோக்யதைகை யுடையள்
மங்கை—மங்கைப் பருவத்தாலுண்ட ன வால்லப்யாதிஶயத்தை யுடைய லக்ஷ்மியானவ
உறை—தன்னுபிஜாத்யமும் ஆத்மகு ணமும் ஆபிரூப்யமும் கிட

ஓரவயவவிசேஷத்திலே நித்ய வாஸம் பண்ணும்படியான பேரச்யதாதிஸயத்தை யுடைய
மார்பா—திருமார்பையுடையையாய்
நிகரில்—இவனோட்டைச் சேர்த்தியடியாக வுதிக்கக்கட வதாய் ஆஸ்ரிததோஷா நபிஜ்ஞதையாலே குணாந்தரங்களோடு சேர்க்க வொண்ணாதபடி நிருபமமான
புகழாய்—நிரவதிக வாத்ஸல்ய ப்ரதையையுடையையாய்
மூன்றுலகம்—இதுக்கு ஹேதுவாயிருக்கிற ப்ரமாண ப்ரஸித்தமாயுள்ள த்ரிவித சேதநாசேதநங்களையும்
உடையாய்—ஸ்வம்மாகவுடைய ஸ்வாமித்வத்தை யுடையையாய்,
என்னை—அந்தமேன்மையேயன்றியே அத்யந்த ஹேயனான வென்னையும்
ஆள்வானே—அங்கீகரிக்கும் ஸௌஸீல்யாதிஸயத்தையுடையையாய்
நிகரில்—அந்த ஸீலத்தோடேயெல்லாரும் கண்டநுபவிக்கும்படி ஜ்ஞாநப்ரேமாதி குணோத்கர்ஷத்துக்கு ஒப்பில்லாதபடியாயுள்ள
அமரர்—கைங்கர்ய நிஷ்டரான வமரரும்
முனி—குணாநுபவபரராய்க்கொண்டு மநநஸீலரான முனிவர்களுமான
கணங்கள்—திரள்களானவை
விரும்பும்—வாத்ஸல்யாத்யநுபவாபிநிவேஸத்தாலே அத்யந்தாதரம் பண்ணிவர்த்திக்கும்
திருவேங்கடத்தானே—திருமலையிலே ஸந்நிஹிதனான ஸௌலப்ய பூர்த்தியையுடையவனே!
புகல்—உன்னையொழிய வுபாயாந்தரங்களான புகலும் ரக்ஷகாந்தரங்களான புகலும்
ஒன்றில்லா—ஒன்றுமில்லாதபடி அநந்யகதியான
அடியேன்—பாரதந்த்ர்யத்தை யுடைய நான்
உன்—இப்படிப்பட்ட புருஷகாரயோகத்தையும் குணயோகத்தையுமுடைய வுன்னுடைய
அடி—திருவடிகளின்
கீழ்—கீழே
அமர்ந்து—ரேகாவதந்த்ரக்கதனாய்க்கொண்டு
புகுந்தேன்—அநந்யப்ரயோஜநத்வ வ்யவஸாய விஸிஷ்டனாய் ஆஸ்ரயித்துவிட்டேன்.

அகலகில்லேனென்கையாலே - ஸ்ரீஸப்தார்த்தமான ஸேவாகாணத்தாலே வந்த நித்யாநபாயித்வத்தையும், அலர்மேலென்கையாலே - ஸேவ்யதைக்கு ஏகாந்தமான மார்த்தவாதி யோகத்தையும், மங்கையென்கையாலே - ஸேவாகாணத்துக்கடியான வால்லப்யத்தையும், உறைமார்பாவென்கையாலே — மதுபர்த்தமான நித்யயோகத்தையும், நிகரில்புகழாயென்று தொடங்கி - திருவேங்கடத்தானேயென்றதற்றியாக (க) "ஶ்ரீ ... நிவாஸ ..."

(க) ஸுபால-ரு

மாதாபிதாப்ராதாநி வாஸ :" என்று நாராயண ஶப்தார்த்தத்தைச் சொல ஶ்ருதிக்ரமத்தாலே வாத்ஸல்யாதிகுண சதுஷ்டயக்ரமத்தையும், புகலொன்று லாவென்கையாலே - அதிகாரி விசேஷணமான வாகிஞ்சந்யாநந்யகதித்வத்த யும், அடியேனென்று - க்ரியாபதத்தில் உத்தமனாலே யாக்ஷிப்தமான வதிக ஸ்வரூபத்தையும், உன்னென்று - ஸம்புத்த்யந்த யோஜனையாகையாலே யாஹார்யமான தவஶப்தார்த்தத்தையும் அடிக்கீழென்கையாலே - சரண தார்த்தத்தையும், அமர்ந்தென்கையாலே - க்ரியாபதத்தில் உபஸர்க்கார் மாய், உபாயோபேய விஷயமான வ்யவஸாயத்தையும் புகுந்தேனென்று க்ரியாரூபமான வாஶ்ரயணத்தையும், புகுந்தேனென்கிற பூதார்த்த நிர்த்தேப தாலே ஆஶ்ரயணத்துக்கு ஆவ்ருத்த்யபேக்ஷையில்லாத ஸக்ருத்கரணத்தை ப்ரகாஶிப்பித்ததாய், இது - பூர்ணஶரணாகதியாகையாலே ஆஶ்ரயணார்த்தமா லக்ஷ்மீ ஸம்பந்தமும் குணயோகமும் ப்ராப்யாந்விதமாயிருக்கையாலும், அ யேனென்கிற வதிகாரிஸ்வரூபத்திலே அநந்யார்ஹஶேஷத்வாநந்ய ஶரண வங்களோபாதி அநந்யபோக்யத்வமும் ஸூசிதமாகையாலே, அமர்ந்தென ப்ரயோஜநாந்தர நிராஸம்ஸூசிதமாகையாலே, நமஶ்ஶப்தார்த்தம் ஸித்திக்கை யாலும், புகுந்தேனென்கிற கதிவசநம் ப்ராப்திக்கும் ஸூசகமாகவற்றாகை லும், ப்ரதாநமான உபாயவரண வாக்யத்துக்குள்ளே வாக்யஶேஷமான உத் வாக்யார்த்தமும் அந்தர்க்கதமாயிற்றதாயிற்று ; ஆகையாலே இப்பாட்டு வா த்வயார்த்த ப்ரகாஶகமாகையாலே பூர்ணஶரணாகதியாகக்குறையில்லை, இ படி - இப்பத்தாலே கீழில் பத்திலுபாயதயாநிஷ்கர்ஷித்த வஸ்துவை ஸ காரமாக ஸ்வீகரித்தருளினாராயிற்று. (ச )

ஆறு ;—(அகலகில்லேன்) அபாரகாருண்ய மஹோததியா உன்னுடைய குணங்களாலே அஸ்மத்ஸ்வாமியுமாய், திருநா டிலே த்வத்பரிசர்யைகபோகராயும் த்வத்குணாநுபவைகபோக யும் நிருபமராயிருந்த நித்யஸித்தபுருஷர்களுக்குங்கூட ஸ்ப்ருஹ ணீயமான திருமலையிலே அநாலோசித விஶேஷாஶேஷலோக ஶ ண்யனாய்க்கொண்டு நின்றருளுவதும் செய்த வுன் திருவடிகளை அ நந்யஶரணனானவடியேன் அநந்யப்ரயோஜநனாய்க்கொண்டு பெரி பிராட்டியார் புருஷகாரமாக ஶரணம் புகுந்தேன், இப்போதே நிரஸ்த ஸமஸ்த ப்ரதிபந்தகனாய் உன் திருவடிகளிலே ஸர்வகா மும் ஸர்வ கைங்கர்யமும் அடியேன் பண்ணப்பெறவேணுமெ கிறார். (க )

ஈடு ; அவ ;—நிகமத்தில் இத்திருவாய்மொழி கற்றார், பரம பதத்திலேசென்று தாஸ்யத்திலே அபிஷிக்தராய் அடிமைசெய்யப் பெறுவர்களென்கிறார்.

அடிக்கீழமர்ந்து புகுந்தடியீர் வாழ்மினென்றென்றருள்கொடுக்கும்
படிக்கேழில்லாப்பெருமானைப் பழனக்குருகூர்ச்சடகோபன்
முடிப்பான்சொன்னவாயிரத்துத் திருவேங்கடத்துக்கிவைபத்தும்
பிடித்தார்பிடித்தார்வீற்றிருந்து பெரியவானுள் நிலாவுவரே. (கக)

ப —அநந்தரம் இத்திருவாய்மொழியைப் பற்றினவர்கள் மஹாவகாஶமான பரமபதத்திலே வ்யாவ்ருத்தராயிருந்து நித்யவாஸம் பண்ணுவரென்று பலத்தையருளிச்செய்கிறார்.

அடியீர்—ஶேஷபூதராயுள்ளவர்களே!
அடிக்கீழ்—நம்முடைய வடிக்கீழ்
அமர்ந்து—அநந்யஸாதநராய் அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு வ்யவஸ்திதராய்
புகுந்து—புகுந்து
வாழ்மின்—நிரந்தராநுபவம் பண்ணுங்கோள்
என்றென்று—என்றென்று
அருள்—உபாயபாவத்திலும் உபேயபாவத்திலும் தன்க்ருபையை
கொடுக்கும்—உபகரிக்கும்
படி—ப்ரகாரத்துக்கு
கேழில்லா—ஒப்பில்லாத
பெருமானை—ஸர்வாதிகனைக் குறித்து
பழனம்—ஶ்ரமஹரமான நீர்நிலங்களையுடைய
குருகூர்—திருநகரிக்கு நிர்வாஹகரான
சடகோபன்—ஆழ்வார்
முடிப்பான்—கம்முடைய கார்யமடங்கத் தலைக்கட்டிக்கொள்வதாக
சொன்ன—அருளிச்செய்த
ஆயிரத்து—ஆயிரம் திருவாய்மொழியிலும் வைத்துக்கொண்டு
திருவேங்கடத்துக்கு—திருமலைக்கு ப்ரதிபாதகமான
இவைபத்தும்—இவைபத்தையும் (ஞர்
பிடித்தார்—ஶப்தாவலம்பநம் பண்ணி
பிடித்தார்—அர்த்தாவலம்பநம் பண்ணினரெல்லாரும்
பெரிய—நிரதிஶயமஹத்தையையுடைத்தாய்
வானுள்—பரம்வ்யோம ஶப்தவாச்யமான பரமபதத்திலே
வீற்றிருந்து—இத்திருவாய்மொழியில் ஸம்பந்தமடியானவ்யாவ்ருத்தி தோன்றும்படியிருந்து
நிலாவுவர்—நித்யாநுபவம் பண்ணி வர்த்திப்பர்
நிலாவுதல்—நிலைநிற்க நடத்தல்
பிடித்தாரைப் பிடித்தென்றுமாம்
இது அறுசீராசிரிய விருத்தம். (கச)

ஆறு ;—(அடிக்கீழமர்ந்து) கைங்கர்யை கரதிகளாய்க்கொண்டு தன் திருவடிகளைச்சரணம் புக்கவர்களுக்கு கைங்கர்ய ஸம்பத்தைக்

கொடுத்துக்கொண்டு நிற்கிற திருமலையான வாஶ்ரித வாத்ஸல்ய தையுடைய திருவேங்கடமுடையானைச் சேர்ந்து முடிக்கைக்காக திருமலையில் ஸம்ருத்தியைச்சொன்ன விததிருவாய்மொழியை யாஶ்ரயித்தவர்களை யாஶ்ரயித்தவர்களை திருநாட்டிலே பகவ சேஷத்வ ஸாம்ராஜ்யத்திலே அபிஷிக்தராய் ஸர்வகாலமும் ஸர் சேஷவ்ருத்தியும் பண்ணிக்கொண்டு வர்த்திக்கப்பெறுவரென்கிறு

திருவாய்மொழி ஆரும்பத்து வ்யாக்யாநங்கள்

முற்றுபெற்றன.



